Madras Government Oriental Manuscripts Series
No. 55






# TANI-P-PĀDARRIRATTU

# தனிப்பாடற்றிரட்டு

*Edited by*

T. CHANDRASEKHARAN, M.A., L.T.,
*Curator, Government Oriental Manuscripts Library, Madras,*
*and*
*The Staff of the Library.*

Published under the orders of the
Government of Madras.

1960

Price Rs. 5-75

# INTRODUCTION

The public are perhaps aware of the fact that the Government of Madras have launched upon a scheme of publication of rare manuscripts treasured in two premier institutions of this state, namely, the Madras Government Oriental Manuscripts Library, Madras and the Tanjore Maharaja Serfoji's Sarasvathi Mahal Library, Tanjore. Financial help has also been extended to Dr. U. V. Swaminatha Iyer's Library, Adyar, Madras, for similar purpose. Though the publication of rare manuscripts was started as early as 1909 by this library, only 12 works were taken up for publication till 1942. Of these, the printing of 3 works has not yet been completed.

Only in the year 1949-50 a regular scheme for the publication of manuscripts was prepared and accepted by the Government of Madras under the MADRAS GOVERNMENT ORIENTAL SERIES. This scheme included the manuscripts in all the South Indian Languages in which there are manuscripts in the Library. The selection of manuscripts was done by an Expert Committee appointed by the Government specially for this purpose. Till now 157 manuscripts in different languages have been printed. Of these, 35 manuscripts are from Tanjore Maharaja's Serfoji's Sarasvathi Mahal Library, Tanjore and 2 from Dr. U. V. Swaminatha Iyer's Library, Adyar. In addition 3 manuscripts, two from this library and 1 from Dr. U. V. Swaminatha Iyer Library, Adyar, are in the press.

While all the manuscripts under the Madras Government Oriental Series were edited by various scholars drawn from different learned institutions, the publication of manuscripts under the Madras Government Oriental Manuscripts Series was resumed in the year 1950-51. All the manuscripts published under this series before 1942 were in Sanskrit. But in 1950-51, they included the manuscripts in other languages also. These are edited by the Curator with the assistance of the Pandits in respective languages. Till now 60 works have been printed including the total number of 51 since 1951.

Since 1958-59, however, no fresh manuscripts were taken up for publication in both the series. There were several proposals

for the printing of manuscripts. Of these, the Government of Madras have sanctioned the publication of the following 7 Tamil Manuscripts in G. O. No. 81859-E6/59-15, Education, dated 5-1-1960 communicated in Proceedings RC. No. 138-K2/60 dated 27-1-1960 of the Directer of Public Instruction, Madras.

## I. GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS LIBRARY, MADRAS.

1. Tani-p-Pāḍalkaḷ.
2. Kēraḷa Dēs'a Varalāru.
3. Yāpperuṅkala Viruthi (with Kuripurai).
4. Kaṭṭabomman Varalāru.
5. Palamoḻit-Tiraṭṭu.
6. Kalampaka-k-Kottu.
7. Uttira Rāmāyaṇa Nāṭakam.

## II. DR. U. V. SWAMINATHA IYER LIBRARY, ADYAR.

1. Manuvijñānes'varyam.
2. S'uddhānanda Bharatam.

Of the 7 manuscripts from this library, "Palamoḻi-t-Tiraṭṭu" has been dropped as it was found to contain many archaic proverbs. The entire publication has been recommended for aid from the Government of India under the scheme for the Development of Modern Indian Languages. It is also hoped that the Government of India aid will be forthcoming in due course. Since the amount has to be reimbursed from the Government of India, it was ordered that the expenditure on the scheme should be incurred before 31-3-1960. Though the time actually available for getting the manuscripts printed is less than 2 months, the publication has been started in right earnest and every possible efforts are being made to complete the same before the stipulated time. There has, however, been one change in the scheme of publication as submitted by the Curator on account of the limited time available. Originally the above manuscripts were intended to be edited by outside scholars under the Madras Government Oriental Series but now they have been edited by the Curator himself with the assistance of Tamil staff of the library, under the Madras Government Oriental Manuscripts Series.

On account of the great speed with which the press copies were prepared, edited and rushed through the press, a few mistakes might have crept in. It is hoped that the learned scholars who read the works may make necessary corrections, if any.

In this connection, I will be failing in my duty if I do not express my thanks to the Controller of Stationery and Printing, Madras, for scrutinizing the quotations of the private presses for supplying the required paper for printing, for passing the printing bills from the presses in a very short time and for taking up the printing of the biggest of the six manuscripts in the Government Press itself.

Srimans M. Pasupathi and T. Krishnamurthi, Tamil Pandits of this library, were in charge of the preparation of the press copy of the present work, " Tani-p-pāḍal Tiraṭṭu " and my thanks are due to them for helping me in editing the manuscript before giving it to the press. My thanks are also due to Sri M. Sadasivam, M.A., Librarian of this library for going through the proofs. The Government of India have to be thanked for their kind grant to the Government of Madras for enabling the Government Oriental Manuscripts Library, Madras, to get printed this invaluable manuscript. The Bharathi Vijayam Press, Triplicane, Madras-5, also deserves my thanks for printing the manuscript neatly in a very short period of less than a month.

Madras,<br>2—3—'60.

T. CHANDRASEKHARAN,<br>*Curator.*

---

இந்நூலுக்கு, அடிப்படையாக விருந்த, இந்நூல் நிலைய ஓலைச் சுவடிகளின் எண்வரிசை.

| செய்யுள் எண் | ஓலைப்பிரதி எண் |
| --- | --- |
| 1 — 10 | R. 590 |
| 11 — 18 | D. 361 |
| 19 — 29 | D. 356 |
| 30 — 53 | D. 364 |
| 54 — 109 | R. 5782 |
| 110 — 125 | R. 5106 |
| 126 — 205 | R. 5152 |
| 206 — 264 | R. 578 |
| 265 — 298 | R. 5152 |
| 299 — 407 | R. 428 |
| 408 — 424 | R. 5947 |
| 425 | R. 5936 |
| 426 — 431 | R. 5937 |
| 432 — 587 | R. 5938 |
| 588 — 746 | R. 582 |
| 747 — 773 | R. 6679 |
| 774 — 779 | R. 6680 |
| 780 — 781 | R. 5876 |
| 782 — 783 | R. 2344 |
| 784 — 791 | D. 1639 |
| 792 — 904 | R. 323 |
| 905 — 910 | R. 2344 |
| 911 — 964 | R. 323 |
| 965 — 1005 | R. 5949 |
| 1006 — 1012 | R. 2710 |
| 1013 — 1017 | R. 2631 |
| 1018 — 1032 | R. 5987 |
| 1033 — 1042 | D. 1931 |
| 1043 — 1057 | R. 6705 |

# தனிப்பாடற்றிரட்டு

## முன்னுரை

அமிழ்தினுமினிய நம் செந்தமிழ் மொழியானது, இலக்கிய இலக்கண வகைகளான் முற்றுநிறைந்து, உயர்தனிச் செம்மொழியாய்ப், பல்லாயிரமாண்டுகட்கு முன்னிருந்தே, நந்தெய்வத் திருத்தமிழ்நாட்டின் கண்ணே, பீடுநடையுடன் உலவிவாரா நிற்கின்றது. பண்டிருந்து நம்மருந்தமிழை வளப்படுத்துவான் வேண்டிச் செந்தமிழ்ப்புலவர்கள் காலந்தோறுந் தோன்றி, அரிய பல தமிழ்நூல்களையும், தனித்தமிழ்ச் செய்யுட்களையும் இயற்றிப் போந்து, தமிழன்னைக்குரிய அணிகலன்களாக அவற்றையளித்துள்ளனர். அத் தக்கோரையெல்லாம், அவ்வக்காலத்திருந்த தமிழ்நாட்டு முடிமன்னர்களும், குறுநிலமன்னர்களும், வேண்டுவன வீந்து, காப்பாற்றி, அவர்தம் மொழிப்பணி முட்டின்றி நடத்தற்குந் துணைநின்றனர்.

சங்க காலத்துக்கு முன்னரும் பின்னருமிருந்த அரும்புலவர்கள், அருளிச்செய்த நூல்களை—கடல்கோள் முதலியவற்ருன் அழிந்தவை போக எஞ்சியவற்றை—பிற்காலத்துவந்த தமிழ்ப்பெருமக்கள், தங் கண்ணினுஞ்சிறந்தனவாகக் கருதிக் காத்துவந்தனர். அவையே எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு, ஐம்பெருங்காப்பியங்கள், ஐஞ்சிறுங்காப்பியங்கள், இராமாயணம், பாரதம் என்பனவாகும்.

இவையாவும் சமீபகாலத்திருந்த, தமிழ்ப்பெரியோர்களால் அச்சிடப்பெற்று, வெளியிடப்பெற்றுள்ளன. இவையன்றித் தமிழ் மொழிக்கண்ணே, இடைக்காலத்தும் பிற்காலத்துமிருந்த அநேகத் தமிழ்ப்புலவர்களால், அநேக சிறிய தமிழ்நூல்களும், தனித்தனிச் செய்யுட்களும் இயற்றப்பட்டன. அவற்றுள்ளும் பெரும்பான்மையானவை அச்சிடப்பட்டனவாயின. அச்சிடப்பெருமல் ஏட்டுச்சுவடிகளினூடே, புதைந்து கிடக்கும் பல செய்யுட்களுமுண்டு.

இவை, தனித்தனியாக, தனித்தனிப்புலவர்களால், வெவ்வேறு காலத்தில், தனித்தனி மனிதர்களைப்பற்றியும், வெவ்வேறு பொருட்களைப் பற்றியும், பாடப்பட்டன வாதலின்,

" தனிப்பாடல்கள் " என்று பெயர்பெறுகின்றன. அவ்வாறுகிய அச்சிடப்பெருத, தனிப்பாடல்கள் பலவற்றையும் திரட்டி ஒன்று சேர்த்து வெளியிடப்பெறும் இந்நூலுக்குத் " தனிப்பாடற்-றிரட்டு " என்னும் பெயர் சூட்டப்பட்டது.

இத்தனிப்பாடற்றிரட்டின் கீழ் அடங்கியுள்ள, செய்யுட்கள், தொழில், அளவு, பாட்டு, பொருள், இவற்ருல் வேறுபடுவன-வாம். இவையாவும் காலம் இடையிட்டும், ஊரிடையிட்டும் பாடப்பட்டனவாம்.

இத்தனிப்பாடல்கள், அகம், புறம் பற்றிய பல செய்தி-களையும், தன்னகத்தே கொண்டு, நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை, சமநிலை முதலிய ஒன்பான் சுவைகளையும் விளக்கும் பெற்றியவாய்ச் சொன்னயம், பொருணயம், ஓசைநயம் இவற்றுடன் பொருந்தி, உவமை முதலிய பல்வகை அலங்காரங்களையுங் கொண்டு, அறிவிற்கின்பம் பயப்பனவாய் அமைந்து காணப்படுகின்றன.

இந்நூல், இடைக்காலத்தும் பிற்காலத்துமிருந்த அரசர், அமைச்சர், வள்ளல், புலவர் ஆகியோரின் சரித்திரங்களை யறிவதற்கும், அக்காலத்துத் தமிழ்ப்பெருமக்களின் பழக்க வழக்கங்களையும், ஒழுக்க வகைகளையும் அறிவதற்கும், அக்-காலத்திய விலக்கியங்கள் பற்றி யறிவதற்கும் பயன்படும், இந்நூற் செய்யுட்களைப்பாடியோரும், இந்நூற் செய்யுட்களால் பாடப்பட்டோரும் காலம், இடம், குலம் இவற்ருன் வேறு பட்டோரேயாவர்.

தனிப்பாடற்றிரட்டு, என்னுமிச் செந்தமிழ் நூற்கண்ணே, இறைவணக்கத்திற்குரிய, பக்திவகைப்பாடல்களும் தலைவன் தலைவியரைப்பற்றிய, அகத்திணைப்பாடல்களும், உலகியலை உணர்த்தும் புறத்திணைப்பாடல்களும், அடங்கியுள்ளன. இவை யாவும், மக்கட்கு வேண்டிய, அன்பு, அருள், நல்லொழுக்கம், கடவுள்பக்தி, பெரியோர்ப்பணிதல், ஈகை, வீரம், முதலிய பல் வகைக் குணங்களையும் செவ்விதின் எடுத்துக் கூறும் இயல்பின வாய் அமைந்துள்ளன.

இனி, நயமிக்க சிலபாடல்களை, ஈண்டுக்காண்போம் :—

மெலிந்தாளுெருவனை வலியாளுெருவன் துன்புறுத்த வரும்போது, அம்மெலிந்தான் யாரேனுமொருவரைத் துணைக்

கழைத்துத் தன்னைக்காக்கும்படி வேண்டுவது உலகியல்பு. அதனைப்போன்றதொரு காட்சி இதோவருகிறது:—

"என்னத்தா! செந்தூரா! வென்றுலே மாரயெமன்
பின்னைத்தான் வந்து பிடிப்பானோ?—கன்னத்தே
போடாதோ! வீடு புகுந்து துரத்திக்கொண்
டோடாதோ! வேலுமயி லும்." (4)

(கு-பு):—மெலிந்தவர்—புலவர் சங்கரமூர்த்தி. வலியவர்—எமன், துணைவந்தவர்—முருகப்பெருமான்.

அன்றியும் புலவர் சங்கரமூர்த்திக்கு "முருகன்" வருவான், அருளைத்தருவான்" என்றநம்பிக்கை மிகுதி. அதனால்தான், "மாலுக்குச் சொல்லிய மால்யானை யுய்ந்தவகை" யை எடுத்துக் காட்டி, "வேலுக்குச் சொல்லி" என்ற பாடலின் மூலம், தம்மாசையை நிறைவேற்றிக்கொண்டார்.

மாந்தர், தாம் விரும்பிய பொருளை யடைதற்கு, எது செய்ய வேண்டி நேரிடினும் இடையறாதுசெய்து, தம் கருத்தை முடிப்பர். அதனையே நாம் 'குறிக்கோள்' (Aim) அல்லது 'நோக்கம்' என்கிறோம். அதிலும் 'காதல்சக்தி' மிகவும் உயர்ந்தது அன்றோ? புலிப்பல் வேண்டினும், விண்வழிச்செலவேண்டினும், அதற்கு ஒருப்படுவர் காதல் கொண்டார்.

தலைவனொருவன், தான்விரும்பிய பெண்ணை மணத்தல் வேண்டி, பலவாறாய முயற்சிகளையும் செய்து, இறுதியில் 'மடலேறுதல்' என்ற முடிவிற்கு வந்துவிட்டான். அதைச் செய்து முடிப்பதற்குரிய அவனது திட்டம், புதியமுறையிலல்லவா அமைந்துள்ளது? எப்படி?

"எழுவே னுதிக்குமுன் பொற்று மரைதனி லேபடிந்து
தொழுவேன் கயற்கண்ணி பாதத்தை யேகாலன் சூலத்தையே
கொழுவாய் மடக்கி யவன்கையில் பாசத்தைக் கொண்டுகட்டி
உழுவே னெருமைக் கிடாவினில் நானிந்த வூர்முற்றுமே." (35)

எண்ணிய எண்ணியாங் கெய்த வேண்டிச் சோம்பலை நீக்கிய தலைவன், அதிகாலையிலேயே எழுந்திருக்கிறான்; தான் விரும்பும் பொருள் பெண்ணாதலின், பெண்தெய்வமாகிய கயற்கண்ணியைப் பணிகிறான்; ஒருசமயம் மடலூர்கையில் உயிர்க்கேதம் வருமோ என நினைத்து, காலனது சூலத்தையும் பாசத்தையும் பிடுங்கி, அவற்றைத்தன் செயலுக்குரிய கருவிகளாகவும் மாற்றிக் கொண்டு விடுகிறான். இனி அவனதுநோக்கம் நிறைவேறுவதில்

தடையென்ன? ஒன்று மில்லை. எளிய பாடலாயினும், உட்பொருளைச் சிறக்கவைத்துப் போயுள்ளார் இயற்றிய பெருந்தகையார்.

நிலவெழுதல் கண்டு வாட்டமுற வேண்டியவள் தலைவி. அப்படியிருக்க இங்குத் தலைவன் வாட்டமுறக் காரணம் என்ன? கீழே பாருங்கள் :—

> " இந்த நிலவங்கே யெழுமே யெழுந்தக்கால்
> கந்தமலர்ப் பூங்குழலாள் கண்டாளேல்—சிந்தைமிகத்
> தேடுமே நாமிருந்த சேதிதனை யெனிணைந்து
> வாடுமே நோமே மனம்." (345)

இங்ஙனம் ஆருவன்பு படைத்தத் தலைவனிடம், மாருவன்பு வைப்பது தலைவிக்குரிய கடனன்றோ? இருவர்க்கும் இன்பதுன்பங்கள் சமந்தானே! ஆகையினால்தான் தலைவனைப் பிரிந்த தலைவி, " கொற்கோ கிலங்காள் துலங்கோ திமங்காள்; தோகைக் குலங்காள் சுகங்காள் மிருகங்காள்" என அவற்றை விளித்து, தலைவன் சென்றது, "தெற்கோ வடக்கோ குடக்கோ குணக்கோ" கூறுவீர், என்று கேட்கின்றாள். இயற்கைதானே!

மற்றும், இந்நூற்கண்ணே வரும், சமத்காரமாகப் பாடப்படும் அம்மானைப் பாடலும், நல்விருந் தளிக்கின்றது. பாடல் இது :—

> " அத்தி யுரிதரித்த வாலங்காட் டப்பருக்கு
> நெற்றிக்கண் ணென்று நெருப்புகா ணம்மானை
> நெற்றிக்கண் ணென்று நெருப்புகா ணுமாகில்
> பத்தியருஞ் சடையி லிராதோ வம்மானை
> படருமென்றே கங்கை பதுவிருந்தா ளம்மானை." (230)

இஃது எதனைக் காட்டுகின்றது? உலகியலில் இன்னுசெய்தற் கொருவரிருப்பின் அதேவழி இனிய செய்தற்கு மொருவருண்டு என்பதைக் காட்டுகிறதன்றோ?

அடுத்து, மாந்தை நகர்வள்ளலுக்கு இரண்டு தழும்புகளுண்டாம். (செ.41) ஒன்று, காலில் வேந்தர் குடித்தழும்பு; இரண்டாவது கையில் முத்தமிழோர்க் கீய்ந்தபடித்தழும்பு. இதைக்கேட்கும் பொழுது, அன்று, 'மெல்லிய வாமால் நுங்கை' எனக்கேட்ட சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனுக்குப், புலவர், கபிலர் பெருமான் கூறிய பதிலல்லவா ஞாபகத்துக்கு வருகிறது!

அன்றியும் மற்றோர் புலவர், இரப்பவனை 'ஈனன்' என்றும், இரப்பார்க்கில் லென்போனை, 'அவனினுமீனன்' என்றும், கசிந்தளிப்பார்க் கரக்கின்றவனை' 'பாவியீனன், என்றும், யாது முரைத்தபின்னில்லென்போனை, 'உலகத்தார்க் கெல்லாமீனன்' என்றும் கூறுகிறார். (செ. 599.)

அம்மட்டோ! இந்நூற் கண்ணே, வரும், சிலேடைப்பாக்களும் (செ. 60, 61); வருணனைப் பகுதிகளும், (செ. 88,91); மங்கைபாகக்கவிராயர் சிட்டநாதனைப் பழித்துக் கூறிய கவிகளும் [101—109); பாச்சலூர்க் கிராமத்தாருக்குக் கூறப்பட்ட அறிவுரைத்தத்துவக் கவிகளும் (396—405); முருகன் பதச்செய்யுளும் (408); சீட்டுக்கவிகளும் (709, 710); இவை தவிர்ந்த, சோதிடம் முத்திப் பாடல்களும்; வண்ணச் செய்யுட்களும், சந்தச் செய்யுட்களும், கற்றோர்க்குக் கழிபேருவகை யளிக்கும் இன்கவித்திரட்டுக்களாம்.

இவ்வாறரிதின் திரட்டப்பெற்ற விவ்வின் கவிகள், அடங்கிய 'தனிப்பாடற்றிரட்டு' என்னு மிவ்வரிய நூல், நம்நாட்டு மக்களனைவருக்கும் பயன்பட வேண்டு மென்னும் அரசியலார் விருப்பப்படி, இந்நூல் நிலையத்தின் வாயிலாக அச்சிடப்பெற்று, வெளியிடப்படுகின்றது. இந்நூலின் கண் அடங்கிய செய்யுட்கள், இதுகாறும் வெளியிடப்பெறுதனவேயாம். சில அச்சியற்றப்பெற்ற செய்யுட்களும் பாடபேதங்கள் நோக்கிச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அவற்றையும் மீறிய அச்சிட்ட செய்யுட்கள் இதன் கணுளவாயின், அவை அவசர மிகுதியான் சேர்ந்தன வாய்க்கொள்ளவேண்டுகின்றோம்.

அரசர், முதலியோரது பெயர்த் தொகுதி இதனையடுத்துச், "சிறப்புச் செய்திகள்" என்ற பகுதியாகத் தரப்படுகின்றது.

அன்றியும், இந்நூலின் கண்ணடங்கிய செய்யுட்கள், எவ்வெவ்வோலைப் பிரதிகளினின்றும் எடுக்கப்பட்டவை என்பதையறிவதற்கு, "செய்யுள்—ஓலைப்பிரதி அட்டவணை" ஒன்றும் உளது. இந்நூலினிறுதியில், "செய்யுள் முதற் குறிப்பகராதி" யொன்றும், சேர்க்கப்பட்டுள்ளது.

பழைய ஏட்டுச் சுவடிகளினின்றும், அரிதின் தேடியெடுக்கப்பட்ட விப்பாடல்கள், தமிழ்மக்கள் யாவரும் படித்துத் துய்க்க வேண்டும், என்னும் வேணவாவொடு, வேண்டுந் திருத்தங்களோடு, இஞ்ஞான்று வெளியிடப் பெறுகின்றது. எங்கும் பரவிக்கிடந்த நன்மணிகள், எடுத்துக் கோர்க்கப்பட்டு, முழுஆரமாகவளிக்கப்படுகின்றது. தமிழ்மக்கள் அனைவரும் இதனைப் பெற்று மகிழ வேண்டுகின்றோம்.

## இந்நூலில் காணப்பெறும்

# சிறப்புச் செய்திகள்

**அரசர் :**—நளன், கரிகாலன், மாறன் குலசேகரன், இராமன், இராவணன், மாவலி, குலோத்துங்கன்.

**அலுவலர் :**—மந்திரி, கர்த்தர், காமாசிகர், தானபதி, தலையாரி.

**ஆபரண வகை :**—சிலம்பு, அரைஞாண், முத்துமாலை, மூக்குத்தி, கொந்தளவோலை, முன்கைமூதாரி, கட்டுவடம், மோகனமாலை, சவடி, சிந்தாக்கு, முத்திரை மோதிரம்.

**ஆயுத வகை :**—வேல், அரிவாள், மழு, சூலம், வச்சிரம், துப்பாக்கி, சுண்டிவில், தண்டு, சக்கரம், ஈட்டி, வெடி, கொட்டாப்புளி.

**ஆறுகள் :**—வைகை, கங்கை, காவிரி.

**உணவு வகை :**—தேன், தினைமாவு, மது, கம்பு, சோளம், பொரி, பாகு, அரிசி.

**உவமைகள் :**—"ஏட்டுக்குள் ளாடும் எழுத்தாணி போல", "வீட்டுக்குள் ளாடும் விளக்கொளி போல"; "பாட்டுக்குள் ளாடும் பழம்பொருள் போல"; "கூட்டிற் கிளியது போல"; "மலரில் வண்டென்ன"; "வையகம் விளங்கவரு தெய்வேந்திரனென்ன"; "குலஸ்த்திரி தன்மனம் போல"; "ஆயிரஞ் சூரியருதித்தசெதாப்ப"; "நீர்மேலெழுத்து"; "கைப்படும் நெல்லிக்கனி போல"; "ஆலையிலுமிடுங்கரும்பு"; "முத்துக்கந்தனைப் பெற்றவர் போல"; "குவலையத்திற் காட்டிற் சொரிந்த நிலா"; "கண்ணிரண்டு மில்லாதான் வீட்டிற் கெரிந்த விளக்கு"; "தாயிலாப் பிள்ளையைப் போல்"; "பயிரது செழிக்கப் பாயுஞ்சலமது போல்"; "பைத்தியங் கொண்டமனம் போல்"; "ஆனேறுடையான் பாதங்களிற் சென்றடையார் போல்".

**உருவகம் :**—"கண்ணுக் கினிய துரைசீதக் காதி கமலமலர்"; "புண்ணியன் வீரப்ப முகில்".

**ஊர்கள் :**—திருச்செந்தூர், திருக்காஞ்சி, திருவாவடுதுறை, திருவெண்ணெய், திருத்தணிகை, திருவாரூர், திருமயிலம், திருநெல்வேலி, திருக்கோளூர், செருந்திவனம், திருக்காளத்தி, திருக்கயிலை, திருக்கழுக்குன்றம், திருமதுரை, திருவண்ணமலை, சோணகிரி, பொய்கையூர், மாந்தைநகர், திருப்பரங்குன்றம், திருத்தில்லை, திருக்குற்றாலம், திருக்குடந்தை, வேலங்குடி, தேனீமலை, வங்கம், கலிங்கம், குலுங்கம், தெலுங்கம், மகதம், மாராடம், சீனம், குன்

றக்குடி, செட்டிகுளம், மிதிலை, திருப்பெருந்துறை, ஆலங்காடு, புள்ளிருக்குவேளூர், பழனி, திருக்குறுங்குடி, வேங்கடம், செஞ்சி, திருமறைக்காடு, திருக்குருகூர், திருப்பேரை, அருப்புக்கோட்டை, திருவொற்றியூர், சிவகங்கை.

**திக்குகள்** :—தெற்கு, வடக்கு, குடக்கு, குணக்கு.

**தெய்வ வகை** :—சுப்பிரமணியர், அநுமன், மீனாட்சி, பிரமன், எமன், ஆனந்தருத்திரேசர், தெய்வானை, வள்ளி, வீரவாகு, மதுரேசர், சூரபன்மா, தட்சிணாமூர்த்தி, திருமூலர், தினகரன், மெய்கண்டார், சிவன், தியாகேசர், வேதகிரி யீசுபரர், மருதப்பர், திருமால், விநாயகர், மன்மதன், ஏழரைநாட்டுச் சனியன், குற்றாலநாதர், அங்கயற் கண்ணி, கும்பேசுரர், இந்திரன், இலட்சுமி, ஆவுடைநாதர், சிவயோகவல்லி, சிங்கார வேலர், சொக்கேசர், துர்க்கை, மகமாயி, குழைக்காதர், சேனை முதலியார், நாகலிங்கம், பத்திரகாளி, முனியீசுவரன், உத்திரபதி, வீரராகவர்.

**நீர்வாழ்வன** ;—மீன், மண்டூகம், ஆமை.

**நோய்கள்** :—நினைவு நோய், கரப்பான், கிரந்தி, சூலை.

**பழங்கதைப் பகுதி** :—" மாலுக்குச் சொல்லிய மால்யானை யுய்ந் தவகை "; " கருணைப் புதல்வன் வரவழைத்துக்—காத்த பழைய கதை "; " குலசேகரப்பெருமாள் பொற்கையானன கதை ".

**பறவை வகை** :—மயில், குயில், கிளி, வாரணம், (கோழி வகை) வண்டு, காகம், அன்னம், கொக்கு, நாரை.

**பாவகை** :—வெண்பா, கட்டளைக்கலித்துறை, ஆசிரிய விருத்தம், சந்தவிருத்தம், கலித்துறை, வாகனக்கவி, வசைக்கவி, சீட்டுக்கவி, சிலேடை, சரமகவி, கொச்சகக்கலிப்பா, கட்டளைக்கலிப்பா, அம்மானை, கலிப்பா, கீர்த்தனை, பதம், மட்டுவிருத்தம், அகவல், சிங்காசனக்கவி.

**புலவர்கள்** :—சங்கரமூர்த்தி, ஔவையார், அழகியசிற்றம்பலக்கவி, மல்லைக் குழந்தைநாவலன், குழந்தைக்கவிராயர், மங்கை பாகக்கவிராயர், குமாரசுவாமிக்கவி, வெண்பாப்புலிக் கவிராசர், அரவங்குறிச்சிச் சொக்கலிங்கக் கவிராசர், முத்துக் குமாரசாமி முதலியார்.

**பூ வகை** :—கொன்றை, செந்தாமரை, மாதுளம், குமுதம் பிச்சி, செண்பகம்.

**பொழுது** :—காலை, மாலை, உச்சி, இரவு.

**மர வகை** :—புளி, தென்னை, மா, வாழை, கோங்கு, சந்தனம், குருந்தம், பனை, வருக்கை, வேம்பு, அத்தி, விளா, நெல்லி, கமுகு, வில்வம்.

**மலைகள்**:—பொதியமலை, சோலைமலை, பழனிமலை, வேங்கடமலை, செஞ்சிமலை.

**மொழிகள்** :—மராடம், துலுக்கு, பாரிசு, தமிழ், இங்கிலீசு, தெலுங்கு, கன்னடம், நாகர்மொழி.

**வள்ளல்கள்** :—சோலையப்பன், மாந்தைநகர் வள்ளல், சீதக்காதி, பொன்னம்பலசாமி, ரெகுநாதசேதுபதி, போதகுரு மன்னவன், கெவுரிவல்லவ மகாராசர், இலட்சுமணப்பூபதி, நாராயணேந்திரன், அரங்கனாத சேதுபதி, சாமிநாத சேதுபதி, வடுகநாத பூபதி, சிட்டநாதன், பனியப்பச்செட்டி, வேங்கடேசுரரெட்டன், கருமாணிக்கன், அருணாசலம், கூவத்துநாரணன், ஏலேலசிங்கன், செயதுங்கராமன், இராமபத்திரன், இராசப்பப்பிள்ளை, குமாரலிங்கேந்திரன், குமாரலிங்கபூபதி, வங்காருதுரைசாமி, திருமாமலைக்காங்கேயன், உருபாயபூபதி, மாபெலிவாணன், திருமலைராயன்.

**வாத்தியங்கள்** :—நாகசுரம், வீணை, செயபேரிகை, எக்காளம், பம்பை, மேளம், துந்துமி, குதக்கை, சரமடலம், சங்கு.

**விலங்குமுதலியன** :—யானை, எருது, மான், பசு, புலி, எருமை, சிங்கம், நாய், நரி, பரி, ஆடு.

**விழாக்கள்** :—மாசிவிழா, சிவராத்திரி, பங்குனிஉத்திரம், தைப்பூசம்.

---

# தனிப்பாடற்றிரட்டு.

## சங்கரமூர்த்திப் புலவர் சிற்சில சமயங்களிற் பாடியவை

### நேரிசை வெண்பா.

1. சுப்ர மணிய சுவாமி துணையென்றே
செப்பரிய வெத்தூரஞ் சென்றாலு—மெப்பொழுதுங்
கூடிவரு மென்மேலுங் கூப்பிட்டா லேனேனென்
றோடிவரும் வேலுமயி லும்.

2. தித்திக்கத் தேனுந் தினைமாவுந் தந்தமான்
வத்திக்குஞ் செந்தின் மலைவாசன்—சித்தம்
மறக்குமோ வென்று மலங்காதே யூட்டிட்
டுறக்குமோ வேலுமயி லும்.

3. கையெடுத்த தெய்வமுனைக் காட்டிக் கொடுக்குமோ
செய்யெடுத்த செந்தூரான் சீறுனே—அய்யையோ
என்றுணை நெஞ்சே யிரங்காதே யோடிவரு
முன்றுணை வேலுமயி லும்.

4. என்னத்தா செந்தூரா வென்றாலே மாரயமன்
பின்னைத்தான் வந்து பிடிப்பானே—கன்னத்தே
போடாதோ வீடு புகுந்துத் துரத்திக்கொண்
டோடாதோ வேலுமயி லும்.

5. வேலாலே குத்தி விழுத்தாட்டிப் போடுவான்
காலாநீ சற்றுங் கருதாதே—பாலாழி
மெய்யன் மருகன் விமலன் றிருச்செந்தி
லையனெனை யாண்ட வன்.

### திரையற்று வீழ்ந்தது

திருச்செந்தில் முருகக்கடவுள் சன்னிதியில் அலங்காரம் பண்ணுகிற நிமித்தம் திரைபோட்டிருக்கச் சீக்கிர முடியாமற் றுமதித்தபோது தரிசனையின் அவாவுற்றுச் சொன்னது.

### கட்டளைக் கலித்துறை

6. வேலுக்குச் சொல்லி மயிலுக்குச் சொல்லிநின் வீர தண்டை
காலுக்குச் சொல்லி யபயமிட் டேன்பின் கருங்குறப்பெண்
பாலுக்குச் சொல்லி யழுதுவிட் டேன்முகம் பார்குமரா!
மாலுக்குச் சொல்லிய மால்யானை யுய்ந்த வகையென்னவே.

## புளியங்கொப்பறச் சொன்னது.

### வெண்பா.

7. எப்படியுஞ் செந்தூர்க் கிறையவனே யிப்புளியங்
கொப்பொடிய வேண்டுங் குருபரா!—மைப்படியு
மங்கைக் கிசைந்த மணாளா! நின் றெய்வானை
கொங்கைக்கி சைந்தகொழு நா!

## தென்னை மரத்திற் றேங்காய்நெற்று அறுந்துவிழச் சொல்லியது.

### ஆசிரிய விருத்தம்.

8. ஆங்கா ரத்தாற் சூரர்குல
மடங்கப் பொருத திறத்தாலே
யாங்காண் பதுவும் வடிவேலே
யான்பா டுவதும் வடிவேலே
மாங்காய் தந்தா யிலைதந்தாய்
வாழைப் பழஞ்சர்க் கரைதந்தாய்
தேங்காய் நெற்றுந் தரவேண்டுஞ்
செந்திற் குமரப் பெருமானே.

## ஒருநாள் பசிப்பிணியின் நிமித்தம் சொல்லியது.

### கட்டளைக்கலித்துறை

9. பகரப் படாது பசிதீவிரமளன் பாட்டிற்சொன்ன
நகரப் படலத் துக்கப்பாற் படலத்தை நான்கண்ணுறு
தகரத் தெழுத்துக் கருகாமெ ழுத்தவதா னஞ்செய்தேன்
சிகரத் துழாய்மணி மாண்மருகாசெந்திற் சேவகனே.

## மாசி மகோற்சவத்திற் சொல்லிய வாகனக் கவி

### ஆசிரிய விருத்தம்.

10. பொறிவண்டார் மதுகடப்பன் மாசிவிழாக் கொண்டருளும் புதுமை கேண்மோ!
வெறிகொண்டா னெனச்சிலர்க ளெடுத்துரைப்பச் வியப்பா யெண்ணி [சிலரதனை
மறியென்றார் சிலரதனைத் தகரென்று ரதுபொறுக்க மாட்டார் கையின்
குறிகொண்டே குடவரையிற் புகுந்துகொண்டா னிதனை கூறுவோமே. [யென்னக்

## பலதேவர் தோத்திரம்.

### வெண்பா

11. மணிகண்டா நின்னை மருவடியேன் பாசப்
பிணிகண்டா வாவென்று பேராய்—நணிநின்றுற்
பூரணனென் நாமம் பொருந்தா தவைக்குளவாம்
பேரறிவும் போமே பிரிந்து.

12. ஆணவமே யென்னைநீ யாண்டிருந்தாய் நென்னல்வரை
தூணுதிருக் காஞ்சியில்வாழ் தக்கேசன்—பேணியெனை
யின்றடிமைக் கொண்டா னினியெனையா ளக்கருதிற்
கொன்றிடுவ னன்றுய்க் குறி.

## நட்சிணுமூர்த்தி

### ஆசிரிய விருத்தம்

13. அவமுறு மண்முதற் சிவமீ...(று)...கீய தத்துவமகற்றி
யளவினுனக்குப்
பவந்தரி குணமல மொழிந்தங்கெழு பரையிற் போதமறப்
பதிங்கினுண்டாஞ்
சிவமதுவா யுறைதியதே சிற்சுகவீ டென்றெனுளந்
தெளிந்தாட் கொண்ட
தவந்தருமா வடுதுறைசை தெட்சிணு மூர்த்திபொற்றுட்
டலைமேற் கொள்வாம்.

## திருமூலர்

14. உயிரவத்தை யுணர்த்துமுறை யேர்ங்கருளி னியல்பதனு
லுள்ள லாகும்
பெயரணைந்தோர் தன்மையேனிவ் வேழைவகையும்
பிறங்க வைத்தே [பொருளாற்
மயலறுநற் சிவபோகத் தெனையிருத்திப் பேரின்பம்
வயக்கி யாண்ட
செயிரறுமா வடுதுறைவாழ் திருமூல தேவனடி
சிரமேற் கொள்வாம்.

## மெய்கண்டார்

15. மாயசிறை நீக்கிவெளிப் படுத்தருளா லெனைத்தெரித்து
மயக்கா லிங்கை
தாயதொழில் புரிபிரம னெனும்பெறத் தகைமையதா
யறிவித் தோச்சித்

தூயவரு டனிலிருத்திச் சிவயோகத் தெனையழுத்தித்
துயர்தீர்த் தாண்ட
பாயபுகழ் திருவெண்ணெய் மெய்கண்டான் பதமலருட்
பதித்து வாழ்வாம்.

### ஆனந்தருத்திரேசர்
### சந்த விருத்தம்

16. ஓங்கு புகழ்க்கச்சி யானந்த ருத்திரேசன்
விழியுற்றொளிர் புளிங்கமாரு
யுயர்சர வணத்திடை யறுகுழலா யாயறுவ
ருட்டுமுலை யுண்டுவளர்நா
டேங்கு புகழுமையாண் மெடுக்கவொரு மைந்தனாய்த்
திகழ்வீர வாகுமுத லாந்
திறலுடைத் தம்பிமார் துணைவராய்ச் சத்திவேற்
செங்கரந் தன்னிலேந்தி
நீங்குபுகழ் சூரபன் மாவுடல் பிளந்தூர்தி
நீள்கொடிய தாயமைத்து
நிலவுபொ னுலகையும் குடியேற்றி யெழிலெலா
நிறைதெய்வ யானையுடனே
வீங்குபுகழ் வள்ளிநா யகியையும் மணஞ்செய்து
வியினென் னுள்ளத்தினும்
விளங்குமா னந்தருத் திரேசத்து மெப்போது
மிளிர்கந்த னைப்பணிகுவாம்.

### ஆசிரிய விருத்தம்

17. திருக்காஞ்சி யானந்த ருத்தி ரேசன்
திருநயன மாயொளிரு மருளா னந்தப்
பெருக்காய்த் தினகர தேவாகின் பொற்றுளில்
பிரசமலர் கொண்டுதொழு தரிசித் தேத்தி
தருக்காய்கின் றிடுமடியா ரகத்து ணின்று
தருக்கிருள் தனைத்துறந் தொளியே தானும்
தருக்காய் வீசியுருக் கொளாதுயவீட்டின் பருள்
[வைத்தா
லுனதுபொற்று ளடியேனுந் தொழுதுய்வேனே.

### திருத்தணிகை முருகவேளைப் புகழ்ந்துபாட நெஞ்சினை விளித்துக்கூறியது
### கட்டளைக் கலித்துறை

18. பணிகைக்குக் கங்கண மாக்கொண்ட சங்கரன்
[பாலிலுற்றேன்
தணிகைக்கு நாயக னாகிய சண்முகன் றன்னைநெஞ்சே!

*யணிகைக்கு வித்து திறந்தேத்தி நின்றாடி யிறைஞ்*
*[சுவையேல்*
*மணிகைக்கு வந்ததெனக் காட்டும்பேரின்ப வாழ்வதுவே.*

### தியாகேசர்

#### வெண்பா

19. *அரிவாளாய்ப் பரவ மறுக்குமது தானே*
*பொருவாளா யாவையும் போக்கும்—திருவாரு*
*ரத்தகாண் சித்தரடிக் காயிரங் கொடுத்த*
*பித்தனார் தாளைப் பிடி.*

### வேதகிரியீசுபரர்

20. *கொள்ளும் பலவடிவு கொண்டேன் குவலயத்தி*
*லெள்ளள வானேனீ யமையுந்—தெள்ளுபுகழ்*
*மெய்யா கழுக்குன்ற வேதகிரி யீசா!*
*வையா பிறப்பை யறு.*

### மருதப்பர்

21. *எருதேறி யெங்கு மிரந்துதிரிந் தாலும்*
*விருதா துந் தெய்வங்கண் மிண்டா—மருதாநின்*
*மாளாத வண்புகழை வன்செவியி லேற்றிக்*
*கேளா தவனே கிடா.*

### [நெல்லைப்பற்றிப் புகழ்ந்து பாடியது]

22. *வாரு நெல்லே யுன்காலை*
*வாரித் தலைகீ ழாயடிப்பார்*
*மாண்டுப் போவாய்க் கரிகியென*
*வருவாய் மெத்த வுதைபடுவாய்*

*நீரா ருளைநிலத் திருப்பாய்*
*நீயு மிறப்பாய்த் தலைகனத்தால்*
*நெருகப் படுப்பாய்ச் சேர்ந்தவரை*
*நிலைவிட் டகல வளித்திடுவாய்.*

*சீரார் வரகா ரியக்கம்பே!*
*செப்பக் கேளீர் தேவர்முதல்*
*சிறுமா னிடர்க்குக் கலியாணச்*
*சிறப்பு வரிசைச் சீர்சிறப்பு*

யேரா டியபாட் டின்பெருமை
யேரி கலங்காற் றின்பெருமை
யெனது சிறப்பே சிறப்பாகு
மெடுப்பே னுன்னைக் கொடுப்பேனே.

23. பால னாக யிருக்கையிலே
பரனுக் கொண்டே னென்முகத்தைப்
பார்த்துப் பேரா சைப்படுவார்
பசுமைக் கிளிகள் சிட்டாடு
மாலு மென்றல் விளங்குவார்
மழுமான் கரத்தார் தன்முன்னே
வைத்துக் கொள்வார் பிள்ளைகளை
வளர்ப்பே னெக்காட் டிலும்வளர்வேன்
சால நரைத்த பேருமென்னைத்
தள்ளா ருள்ளாக் குவர்பின்னுந்
தக்க சிவராத் திரிக்குமேல்
தழைக்கும் பழன சாலிக்கு
மேலா யிருப்பேன் விருந்தொளியேன்
இழக்கே னாதி முதலாவேன்
வீணா ரியமே நீசும்மா
மெலுக்காச் சொல்லி மலுக்காதே.

24. வணக்கந் திரிநேத் திரிக்கல்லால்
வணங்கேன் மூலக் குணத்தோரை
மருவே நோய்க்குப் பண்டிதரு
மனைக்காப் பவர்க்குப் பக்குவமாங்
கணக்கர் வென்பேர் பூண்டவென்னைக்
கண்ணுற்றே காத்தான் காத்தான்
கண்ட போதே திடுக்கிடுவார்
கவைக்கோ லென்பார் கதிர்கனத்தால்
பிணைக்கொள் வார்கள் பரமசிவன்
பிறந்த நாளி லென்னிடத்திற்
பெருமை பூண்டார் கிருஷ்ணரென்றன்
பேரை விளங்கச் செய்துகொண்டா
ரணைக்கு மென்பே ரொருதேச
மாடுங் கூத்தி லென்கூத்து

மதிக மாகு நான்கம்பே
அந்தோ வெகுவாய் நொந்தாயே,

25. கனமாய்ச் சோள மெனக்கொத்த
கம்பா ரியமே நெல்லேகேள்!
கரப்பான் கிரந்தி சூலைநோய்க்
காரர் தமைநா னனுசரியேன்
அனமென் றேகேட் பவருக்கு
மன்ன மளிப்பேன் பாரியா
யாக்கு வோர்க்குப் பிட்டளிப்பேன்
வல்லப் பசிக்குப் பொரியாவேன்
தனதி லாமற் சேர்ந்தோரைச்
சங்குப் பூக்க வாழவைப்பேன்.
தகுமுன் கோபம் மின்பழக்கந்
தாக்ஷணிய மாக யிருந்திடுவேன்
அனையின் பசியால் மாட்டினையா
தரிக்காள் நான்வந் தாதரிப்பே
னுறல் முத்தா மெனவென்பே
ரானேன் றுய்த்தா றுனேனே.

26. நெல்லே வரகா மென்போல
நிற்க மாட்டாய் காலம்வந்தா
னினைத்தள் ளுவார்க ளனைத்தள்ளார்
நீயுஞ் சமயம் பார்த்துப்பார்த்
தில்லா சிறுமை யதனாலே
யென்னைச் சேர்ந்தே பெருமைகொள்வா
யென்னிலைபோற் பிறந்த நிலைதவரு
திருக்க மாட்டா யெப்போதுஞ்
சல்லா பமுமா யிருக்கையிலே
தவத்தோ ரெல்லாங் கைக்கொள்வார்.
சற்றே புழுங்கி வாய்விட்டாற்
றள்ளுப் படுவாய் குழிப்படுவாய்
அல்லா லெனக்குக் கீழ்மனித
னுவாய் நீழுக் கறுபடுவா
யங்கையாற் றேய்ப்புண் டவலாவா
யாவாய் மெத்தக் கூவாதே.

### மயிலம் முருகன்துதி

விருத்தம்

27. அரிமரு காகரு ணாலய னேதிக
 மாரணனே போதன்
 அரியிமை யோர்சூழ் புனிதா புலவட
 ரயிலமர் பொற்கரனே
 கரிமுக னேய சகோதரனே மிகு
 கணனேநாதன்
 கதியிமை யோர்சூழ் புனிதா குலவிய
 கயிலையி னற்குருவே
 குரவணி நீப மணிப்புய னேகளி
 கூரமுதே வாதுங்
 குறமகள் சேர்மார் பினனே மலையுறை
 குயில்தரு வச்சிரனே
 மரகத மாமயில் வாகன னேகொடி
 வாரணனே கோதில்
 மதியக மேவாழ் குமரா குலவிய
 மயிலமலைக் குகனே.

### பொய்கையூர் சோலையப்பனைப் புகழ்ந்து பாடியது

வெண்பா.

28. நீர்கொடுக்கு மாறும் நிழல்கொடுக்கும் பேருடனே
ஆரிடத்தி லுண்டுதொண்டை நன்னாட்டில்—ஓரிடத்தில்
வண்சோ மனைநிகர்த்த வள்ள லுண்டே பொய்கையூர்
தண்சோலை யப்பனன் றுந் தான்.

### பொய்கையூரைச் சிறப்பித்தது

கட்டளைக் கலித்துறை

29. பால்வாய் மணக்குங் குழந்தைகள் கூடநற் பாவலராய்
நூல்வாய் மணக்கு மின்செய் யுமுபகா முகந்திடிலோர்
கால்வாய் மணக்குங் களித்தேறலுண்டு களித்துநித்தம்
சேல்வாய் மணக்கும் வயலூறும் பொய்கைத் திருநகரே.

30. அண்ணா மலைநாதர்க் கன்புவைத்த மெய்யடியா
ருண்ணா முலைபாத முட்கொள்வார்—நண்ணாத
சொர்க்கத்தி லெய்திச் சுகத்தை யடைந்திருப்பார்
நற்கருணைக் கொண்டிருப்பார் நாடு.

## மதுரைச் சிறப்பு

### கலித்துறை

31. கருதுங் கனியும மிர்தமும் பாகுங் கருதுமதன்
விருது பொருதும் விழியணங் கேவென் றமிழ்ப்புலவோர்
மருதம்பொழியும் மதுரேசர் நாட்டிலு வைகையிலே
யெருதும் பசுவும் புலியுமோ ராணயி லேறியதே.

32. காரானை தன்னை யுரித்தானைக் கடுக்கையானை கொன்றை
தாரானைக் கங்கை சடைதரித் தானை தமிழ்மதுரை
யூரானைத் தேடக் கரியானை வஞ்சி யுழன்றுநின்ற
வாரானை சொக்கனை வாரானைக் கொண்டு வருகின்றதே.

33. நீருக் கழகு அலர்ந்தசெந் தாமரை நீள்சடையோன்
தேருக் கழகு தலையலங் காரம் சீராமருட
போருக்கழ கனுமாருந் தம்பியு மங்குத னும்மதுரை
ஊருக் கழகாகு மீனாட்சி யம்ம னொருத்தியுமே.

34. நற்று மரையும் மதுரா புரியும் நலஞ்சிறந்த
வற்றாத வைகையும் வாவியுஞ் சோலையும் வண்மையுள்ள
கற்று புரமுந் தமிழ்க்கூட லங்கயற் கண்ணியுட
பொற்று மரைக்கு நிகரான தீர்த்தம் புவிக்கில்லையே.

35. எழுவே னுதிக்குமுன் பொற்று மரைதனி லேபடிந்து
தொழுவேன் கயற்கண்ணி பாதத்தை யேகாலன்
[சூலத்தையே
கொழுவாய் மடக்கி யவன்கையில் பாசத்தைக்
[கொண்டுகட்டி
உழுவே னெருமை கிடாவினில் நானிந்த வூர்முற்றுமே.

## தலைவி கூற்று

### வெண்பா

36. எங்கெங்குஞ் சென்றாலும் யேழையே னென்னுடனே
அங்கங்கு மெய்காவ லாகியே—தங்காமல்
பண்ணுவார் நீக்குவார் பாலிக்குஞ் சோணகிரி
மன்னவா, நீகூட வா.

## ஓடிவருந் தெய்வம்

37. உற்ற துணையுமில்லை உடன்பிறப்பு தானுமில்லை
பெற்றெடுத்த மாதா பிதாவுமில்லை—உற்ற துணை
ஆரென் றிருந்தே னறுமுகவ னோடிவந்து
நானென்று நின்றான் நமக்கு

### தலைவன் கூற்று

### கலித்துறை

38. சீரணி செங்கலை செத்தே நிகழச்சிலம் புகொஞ்ச
கோரணி கொள்வது மென்னகை யோகொடுங் காவ
வாரண கும்ப தன்த்தாளை கூடி மருவையிலே [னத்தில்
பூரண சந்திர னேசற்று நேரம் பொறுத்திலையே.

### வெண்பா

39. பஞ்சானுங் குஞ்சுமடி யேன்படும்பா டுங்கண்டு
நஞ்சா கிலும்கொடுப்பா ரில்லையேநல்—நாயகியே!
துஞ்ச மணிவிளக்கே சொக்கர்பா கத்தவளே
மன்னவர் நீகூட வா.

### பஞ்சாட்சர மகிமை

### வெண்பா

40. ஒவ்வெழுத்தே வித்தா யுக்ரமெனும் வேரோடி
அவ்வெழுத்தி லேமுளைத்து அஞ்சுகம்பாய்—வெவ்
பூத்ததே யிந்தப் புவனம் பதினலுங் [வெழுத்தும்
காத்ததே பஞ்சாட் சரம்.

### மாந்தைநகர் வள்ளலைப் பாடியது

41. மாந்தைநகர் வேந்தா மகுடத் தியாகியருக்
கேந்து தழும்பு யிரண்டுண்டு—வேந்தர்
குடித்தழும்பு காலிலே முத்தமிழோர்க் கீய்ந்த
படித்தழும்பு கையிலே பார்.

### தலைவனை நீங்கிய தலைவி கூற்று

### கலித்துறை

42. போமே பொழுது வருமே மதியம் புரட்டியங்கம்
வேமே மதன்சரந் தைக்குமே தைத்தபுண் வழியே
போமே தென்றல் புகுமேயென் பெண்புத்தி போய்விடுமே
கோமே தகப்புயனே மடவா பள்ளிக் கொண்டவனே.

### காதலுற்றத் தலைவன் தோழிக்குக் கூறல்

43. சுழியாணி முத்துவை டூரியம் பச்சைதுலங் குற்றநிணம்
மழியாத மாணிக்க மாதளம் பூவிரு வஞ்சிநல்லாய்

விழியால் மிரட்டியென் னுவியை வாங்கிவெறுங்
[கூட்டைத்தந்த
பழிகாரி போன வழிதேடி நெஞ்சம் பதைக்கின்றதே.

### முருகர் தோத்திரம்

44. அடிக்கினும் வேலுமயிலு மென்பேன் அறவே நாசினந்
தடிக்கினும் வேலுமயிலு மென்பேன் கடுங்காலனென்னைப்
பிடிக்கினும் வேலுமயிலு மென்பேன் பின்கட்டைமேல்
[மண்டை
வெடிக்கினும் வேலு மயிலுமென்பேன் செந்தில்
[வேலவனே.

### சீதக்காதிக்கு இரங்கற்பா

45. தேட்டாளை காயல் துரைசீதக் காதிசெழிக் கும்வச்ர
நாட்டாத் திசைக்ம்பம் நாட்டிவைத் தான்தமிழ் நாவலரை
நாட்டா னடியாக்கிப் புலவர்கள் வாயி லொருபிடிமண்
போட்டா னவனு மொழிந்தான் சமாதி புகுந்துகொண்டே.

46. விண்ணுக்கு மண்ணுக்கும் பேரான கீர்த்தி விளங்குகின்ற
கண்ணுக் கினிய துரைசீதக் காதி கமலமலர்
கண்ணுக் கிசைந்த வதனசந் திரோதய சாமியெண்சாண்
மண்ணுக்குள் ளேஒளித் தான்புல வோர்முகம்
[வாடுதற்கே.

### பரத்தையர் கூற்று

47. சித்தாடைசோர அரைநாண் தளரச் சிலம்புகொஞ்ச
பெத்தார் முன்போன மதக்களி றேஉன் பிள்ளையென்று
யெத்தி யழைத் தவராார்மடி மேல்மடி வைத்தவரார்
முத்தங் கொடுத்தவ ரார்சொல்லி வாவென்
[முலைதரவே.

### செவிலித்தாய் கூற்று

48. திருவுத்த முட்ட திருவாரூர்த் தியாகர் சிறப்புடனே
ஒருமத்த கத்தில் பவனிவந் தார்கண்ட மொன்றுடையார்
மருமொய்த்த கூந்தலு மாஞரும் தாமு மகிழ்ச்சியுடன்
இருபத்து நாலு மதயானை கொண்டங் கெதிர்கிற்பளே.

### தலைவிக்குச் செவிலித்தாய் தலைவன்னூர் அண்மையைக் கூறியது

49. கத்தடி யான வனங்கடந் தோமினிக் காவிரிசூழ்
சித்துள்ள வாவியுஞ் சோலையுங் காணிது சோலைக்கப்பால்
புத்திடங் கொண்டவர் ஆரூரர் கோவிலும் பொன்மதிலுஞ்
சுத்திடங் காண்மக ளேயிளைப் பாறவுந் தாவளமே.

### திருப்பரங்குன்றத் தெழுந்தருளியிருக்கும் முருகனைப்பற்றிப் புகழ்ந்து பாடியவை

### கலித்துறை

50. ஏட்டுக்குள் ளாடும் எழுத்தாணி போல யிருளடைந்த
வீட்டுக்குள் ளாடும் விளக்கொளி போல மிகுந்ததமிழ்ப்
பாட்டுக்குள் ளாடும் பழம்பொருள் போலென்னேரமென்றன்
கூட்டுக்குள் ளாடும் குமரா திருப்பரங் குன்றத்தனே.

51. ஈராறு கையும் மயில்வா கனமும் அறுமுகமும்
மாறுக வந்தெனை ஆட்கொள் வாய்வெற்றி வேல்முருகா
சூராதி சூரரை கொன்றே வதைத்தருள் கொற்றவனே
மாறாத செல்வந் தருவாய் பரங்கிரி மன்னவனே.

### உலோபியரை இகழ்ந்து பாடியது

52. பாட்டுக்குப் பாத்திரம் நல்லோரைப் பாடி பதம்பெறவாழ்
மோட்டுக் குலாமரைப் பாடி யென்னமுழத் துண்டு
[முண்டோ ?
வீட்டுக்குத் தானுண்ண சோறுே வெள்வாய்க்
[கொடுவெத்திலையோ
யேட்டுக்குச் சேதங்கண் டாய்வெள்ளை நாவி லிருப்பவளே.

### வெண்பா

53. சொல்லக் கிடைத்திடுமோ சோறு சலத்தானே
அல்லல் பிறப்பறுக்கும் ஆரியனே—நல்ல
ஒருகோடி சந்திரனுக் கொப்பா மகனே
யிருகோடி கால மிரு.

### ஏழுரை நாட்டுச் சனியன் நீங்கப் பாடியது

### கலித்துறை

54. எட்டிற் புரத்திலடங்காத் துயரத்தை யெண்ணியெண்ணிக்
கூட்டிற் கிளியது போலுழன் றேன்கொடும் பாருலகில்
சேட்டைத் தினஞ்செப்பு மேழுரை நாட்டுச் சனியன்கையில்
தீட்டிக் கொடாதையம்மா கூடல் வாழுங் கயற்கண்ணியே !

### அங்கயற்கணம்மை தோத்திரம்

55. வழுத்துண்ட சீர்த்திக் கயற்க ணம்மேநின் மணி
[யிதழ்ச்செம்
பழுத்துண்ட தாலுஞ் சிவந்ததி ருல்நின்ப வளச்செவ்வாய்
வெழுத்துண்ட பீறி ஒருதா துளங்கனி மெள்ளவந்து
முழுத்தெண்ட னிட்டுக் கிடைப்பதொப் பர்முத்து
[மூக்குத்தியே.

### வெண்பா

56. மாட்டிடையன் தங்கை வல்லக்காட் டுத்தில்லை
ஆட்டிடைய னுக்கோபெண் டாகினள்—கேட்டியளோ
குட்டி மறிக்கவொரு கோட்டானை பெற்றெடுத்தாள்
கட்டிமணிச் சிற்றிடைச்சிக் காண்.

### கண்ணயந்துரைத்தல்

57. ஆலமோ வேலோ அலைகடலோ அம்புயமோ
நீலமோ மாறன்னெ டுங்கணையோ—கோலமலர்
வாவிச்சோ லைக்கறையில் வந்துநின்று சந்திரா
காவிச் சேலைக்காரி கண்.

### புலவர் வறுமையில் வருந்தி யுரைத்தல்

58. சுற்றுத வூர்தோறுஞ் சுற்றவேண் டாம்புலவீர் !
குற்றால நாதரென் றேகூறில்—வற்று
வடவருவி யானேன் மறுபிறவிச் சேற்றில்
நடவருவி யானேன் நமை.

### ஔவையார் பாடியது

59. மானமுள தேமழை யுளதே மானிலத்தில்
தானமுளதே தன்கை யுளதே—நானிலத்தி
லெற்றோ மிளைத்தோமென் றேமாந் திருப்பாரை
யெற்றோமற் றெற்றோமற் றெற்று.

### கட்டெறும்புக்கும், மிளகாய்க்கும் சிலேடை

60. கடித்திடலால் சுருக்குக் காட்டுதலால் பாரில்
இடித்திட லால்சோறுக் கிடலால்—படித்தவளோர்
நட்டணைய மேவுபொன் னம்பலத்தம் நாட்டில்
கட்டெறும்பை யொக்குமிள காய்,

## மலைக்கும் 'சிற்றெறும்புக்கும் சிலேடை

61. அண்டமுற் றோங்குதலா லங்கடித் திடலால்
மண்டவனை யார்ந்து மலிதலால்—தெண்டிரைக்குள்
பார்புகழும் பொன்னம் பலசாமி நன்னாட்டில்
மேருநிகர் சிற்றெறும் பாமே.

## நற்றாயிடத்துச் செவிலித்தாய் கூறல்

62. இரும்புழுத புண்ணுக் கிடுமருந்தங் கென்னோ
கரும்பனையா யென்ன கலிகாலம்—விரும்பிக்
குடந்தைக்கும் பேசுரன்மேல் கொண்டமய லல்லால்
மடந்தைக்கும் பேய்பிடிக்கு மா.

## முருகர் தோத்திரம்

63. வேலா யுதனே! விளங்கு மயில் வீரனே!
காலா யுதம்படைத்தக் கையோனே!—சாலப்
பருத்த மயிலேறி வரும்பாகர் பிரானே!
யொருத்தரில்லை நீவா துணை.

## தியாகேசர் தோத்திரம்

64. ஆறு ரிலையே யயனுந் திருமாலுங்
காணு ரடிமுடியைக் காண்டதற்கு—மேனு
ளிறைவை திருவாரூ ரெங்கள் பிரான்சென்ற
பறவைதிரு வாசல் படி.

## வேலங்குடி யானைப் பாடியது

65. ஞாலமகிழ் பூங்கொன்றை நாட்டில் வேலங்குடியில்
ஆலய மேகொண் டமர்ந்தருளும்—நீலமுகில்
வண்ணனே! சாம்பிராணி வாசனே! வாக்கருளி
யெண்ணுளுங் காப்பா யெனை.

## தேனிமலையானைப் பாடியது

66. தேனிமலை தந்தமயில் சேவகா! விண்ணோங்கு
தேனிமலை மேவுகுரு தேசிகா!—தேனி
மலைக்கும் படிபூவார்ந் தோயசுர செல்வம்
நிலைக்கும் படியெனக்கு நீ.

### இதுவுமது

67. எங்கெங் கிருந்தாலும் யெவ்விடத்தில் சென்றாலும்
துங்கமயி லும்வேலுந் தோன்றுமே—திங்கள்
மலைக்குமரா ! வேணியான் மைந்தா ! தென் தேனீ
மலைக்குமரா ! நீயோடி வா.

### தியாகேசர் தோத்திரம்

68. பாரோர் புகழவரும் பங்குனி உத்திரத்தில்
ஆரூரர் வீதிக் கணுகினர்—நேரே
பணிசர்ப்பம் பூண்டு நற்பொற்பதத் துக்கிண்
கிணிச்சத்தங் கிண்ணென்னுங் கேள்.

### உலோபியைப் புகழாதேயெனல்

69. குன்று மலையுங் குவிய வழிநடப்ப
தென்று தொலையுநமக் கென்கோவே !—யென்றுங்
கொடாரை சங்கென்றுங் கோவென்றுஞ் சொன்னு
விடாதோ நமக்கு யினி.

### ரெகுநாத சேதுபதியைப் பாடியது

70. சிற்றம் பலவன் றிருஞான சம்பந்த
னுற்ற தமிழுக் குரையாணி—வெற்றிபுனை
தேவைரெகு நாதர்க்குச் செல்வப் பிதாவென்னவே
பூவுலகில் வந்தானிப் போது.

71. கண்ணன் கொடுப்பானோ? காமதேனும் நகருமோ?
நண்ணயஞ்சேர் சங்கநிதி நல்குமோ?—யின்னிலத்தில்
வேதமுணரந்தணருக்கும் வித்வ சனர்க்கும்மேல்
போதகுரு மன்னவனைப் போல்.

72. சீதரனுந் தென்குழந்தைச் செல்வமகி பாலனெங்கோன்
போதகுரு சாமிமகிழ் போசனே—நீதநிறை
தந்திரயோ காசின்ன தம்பிமா ராவுலகில்
யிந்திரனைப் போல்வாழ்ந் திரு.

73. விந்தை பரவும் விறல்சேது ராசனுமே
தந்தமரி யாதைநீ தான்தரலாம்—யிந்த்ர
விசையரெகு நாதா ! விசையரெகு நாதா!
விசையரெகு நாதா ! விழி.

74. நாயகனே மாதேவி நல்குசே யாவதிய
தூயநல மேவுகின்ற சோதியே—நேயமுறை
பன்னுமுதி யோர்தாம் பரவ னருளும்
மின்னுபொன் னம்பல வி.

### துறைசை சுப்பிரமணிய தேசிகனைப் பாடியது

75. நன்றுறைசை வாக மங்கள்நாளுந் தழைத்தருளுந்
தென்றுறைசெய் சுப்ரமண்ய தேசிகனே-யென்றுந்
தியானித்து வாழ்த்தி யிறைஞ்சுமன் பர்க்குமித்
தியானித்த லத்திலுள தாம்.

### இதுவுமது

76. பெற்றேன் கருணைப் பெருக்கா லுயர்தவப்பே
றுற்றே னறிவாலு மோங்கினேன்—நற்றமிழ்நூல்
மாதுவளர் தென்றுறைசை வாழ்சுப் பிரமணிய
நாதனிரு தாட்டெரிச னம்.

### இதுவுமது

77. கண்டேன் கலிநீங்கி னேன்மகிழ்ச்சி யானேன்காண்
கொண்டேன் மனதின் குறைதீர்ந்தேன்—வண்டார்பூங்
காமனெனும் விப்பிரசி காமணியாய் வந்துதித்த
ராமையா வின்பவத னம்.

78. பண்முதுபா வாணருக்குப் பைந்தருப்போ லேயுதவுஞ்
சண்முகவே லாயுதமால் தன்சுதனு—யுண்மைமிகும்
சோமா மதிவதனு சுந்தரா பூங்குவளைத்
தாமா நீ லேஞ்சோன் றுதா

### கெவுரிவல்லவ மகாராசர்பேரில் அழகிய சிற்றம்பலக் கவி பாடியது
### ஆசிரிய விருத்தம்

79. நாவிற்கொண்ட வாணிதல் செல்வியர் மனங்கள்போல்
மிருகபட முற்று விசையம்
மிஞ்சியுயர் பஞ்சகதி கொண்டுமறு மண்டலிகர்
வேந்தர் படைத்த ளிப்ப
மேவியிட சாரிபோ யாதித்தன் தன்னுடைய
வெம்பரியை வெற்றி கொண்டு
மீறுமொரு லெட்சவாம் பரியின்மேல் வச்சிர
விளங்குபொற் கனலைவீக்கி

வெயின்மருவு நித்தில் முகப்பணி தரித்துச்சி
மேலுமர பட்சி கோத்து
வெண்டைய மணிந்துபிர சண்டமா ருதவுக்கிர
வேகத் தெழும்ப லாகை
மேற்கொண்டு நாயநாயக் கர்ப்ட் டாணிமார்
மிக்கான ராவுத்தர்மார்
மேன்மைதிகழ் தேவமார் மல்லரவல் லர்களோடு
மிருசேர்வை காரர்முதலாய்
வீராதி வீரரணி யணியாக விருபாலு
மேபரி நடாத்தி வரவும்
விஞ்சக லிந்திர விமானமென நவமணி
விளங்குபொற் சிவிகை முதலாம்
விகளசி தமதான தண்டிகைகள் சாடரட்டுடன்
மேளுக்கள் லட்சமதனில்
மீதான மக்கள்மரு மக்கள்மார் மைத்துனர்கள்
மிக்கபா ளையக் காரரும்
பொற்கொண்ட மந்திரிகள் கர்த்தர் காமாசிகர்
பொருந்துதா னுபதிகளும்
போதமிகு மட்டவனை மார்கள்ரா யசகாரர்
புகழுமுத கலைவாணரும்
புனிதமிகு நால்வேத வேதியரு மேவரப்
பூரியெக் காள மூதப்
பொங்கமிகு பம்பையொடு திண்டிதுந் துமி குதக்கை
புகல்சிக்கி மேளமுளவற்
புதமருவு நாகசுரம் வீணைசர மண்டல
போன்றநவ பத்துமார்ப் பரிப்ப
புயலி லோர்புய முழங்குவ தெனக்கரிகள்மேல்
போட்டுமும் முரசிரட்டப்
புணரியின் முழக்கென செயபேரி யோட்டைமேற்
புவிபுடைத் திடவதிர்ப்பப்
பூரண சந்திரவத னசுரதசங் கீதநடப்
பூவையர்கள் நடம்விளைப்பப்
புகழ்பெருகு ழுனுமடால் சிம்மடால் கெருடடால்
பொருமீன டாலுலெட்சம்
பொன்றுவர முசுமுதார் சுபையதா ரவுலுதார்
புகலிகும தாரும்வரவே

புஞ்சமிகு ரஞ்சித மிகுந்திடு மடந்தையர்
புகழ்ந்தயினி சுற்றிவரவும்
புவனமுயர் வெள்ளி தங்கத்தடிக் காரரிரு
புடையுமக லாதுவரவும்

80. சொற்கொண்ட வில்லம்பு சரபோகி சஞ்சாவி
தோமரஞ் சவளமுசலம்
சுண்டிவில் வேல்கள்வாள் தண்டுசக் கரம்வெடி
துப்பாக்கிநே ரிசம்வல்லியஞ்

சொல்லரிய ஈட்டிமுதல் வல்லவர்கள் ஒருகோடி
சூழ்ந்துவர வியோட்டிகள்
துலக்கிவர மஞ்சள்பா வாடைவெஞ் சாமரை
துலங்குபொற் கவரிவீசத்

தூயபொன் அடப்பைகா ளாஞ்சிகுஞ் சங்குடை
சுருட்டிகள் பிடித்துவரவுஞ்
சோமா! பராக்கு ரெகுராமா! பராக்குசெய
சுமுகா! பராக்குமிக்காஞ்

சொல்லரிச் சந்திரா! பராக்கென கட்டியஞ்
சொல்லிவர வல்லபுகழ்சேர்
சுபகரவி லாசன்வந் தானிரவி குலதிலக
குரவ சகாயன் வந்தான்

சுந்தரமிகுந் தவபிரா மணன்வந்தான் வச்சிர
தூலமார்க்கண் டன்வந்தான்
துரைராச ராசன் வந்தான் வந்தானெனத்
தோன்றவொரு சின்னமார்ப்பச்

சொர்ணமய மாகத் தரித்தபீ தாம்பரச்
சோதியொடு பொற்பணிகளுஞ்
துங்கமிகு நவரத்ன வணிகளும் ஆயிரஞ்
சூரிய ருதித்ததொப்ப

மற்கொண்ட குங்குமக் கும்பமுலை வல்லியர்கள்
மலரில்வண் டென்னமொய்ப்ப
வளமருவு வெள்ளியவு தாவைத்த பட்டத்து
மால்யானை மீதிலேறி

வையகம் விளங்கவரு தெய்வேந்திர னென்னவே
மன்னருங் கொண்டாடவே
மதுரைவரு கௌுன்மண்டார் பேட்டிசெய் திடவும்
வரவுமக் கவுனர்துரையும்

வருபவனி கண்டுகளி கூர்ந்திவன் திக்கெலாம்
வருகின்ற மன்னருக்குள்
மகாமண்ட லாதிபதி யிவனிலா திலையென
மகிழ்ந்துபட் டாளருடனே
மற்றும்வெகு துரைமார் களுஞ்சூழ வெதிர்கொண்டு
வந்துசம பேட்டிதந்து
மராடந் துலுக்குதமி ழிங்கிலீசு கன்னடம்
மருவுபாரிசு தெலுங்கு
மதிமருவு நாகர்முத லானபா ஷைகளொடு
வார்த்தைகள் பயின்றுமெச்சி
மணமருவு மாலிகைத் தரித்துநீ யெக்காலும்
வாழியென மிகவுமேதான்
மகாவரிசை செய்திடவு மேயொரு குடைக்குளிம்
மானிலத் தரசுபுரியும்
மகராச ராசஸ்ரீ கௌரிவல் லவராச
மகாமண்ட லாதிபதியே.

### இலட்சுமணப் பூபதியைப் புகழ்ந்து பாடியது

வெண்பா

81. பூங்குவளைத் தாமனெனும் புண்ணியன்வீ ரப்பமுகில்
வாங்கும் வரத்தால் செனித்தகண்டா—மாங்குயில்வில்
மாராநம் லெட்சும ணப்பெருமா ருள்கர்ண
தாரா செகமனுநீ தா.

[இதுவுமது]

வெண்பா

82. துங்கமிக் கங்கைகுல துல்லியன்வீ ரப்பனருள்
சிங்கமென வந்துதித்த சீதரா!—வெங்குமகிழ்
மன்னுநம் லெட்சு மணப்பெருமா ளோங்குகொடைக்
கன்று சுபமங்க ளம்.

[இதுவுமது]

சீட்டுக் கவிதை

ஆசிரிய விருத்தம்

83. செகசக்கிர பதிரத்தின கிரீடபதி மிகுதிவ்விய
சிம்மா சனுதிபதினைங்
தெக்ஷண திக்கபதி மனுபதி தானபதி
தேவைநக ராதிபதியாங்

இடமருவு பூமண்டலத் திறைவ ரெதிர்கொண்டு
திறைதந்து இறைஞ்சுபாதன்
செயமேவு நீதிபதி யாதிபதி ரெகுநாதச்
சேதுபதி பாடல்கொண்டோன்
தகதகென் றெழுகதிர்ப் பிறப்பைமிகு மாகத்
தனிமயிலக் கடவுளருளால்
சற்குண விலாசப் பிறசங்க விங்கித
லட்சணப்ர பந்தமுதலாய்
தமிழ்க்கட லனைத்தையுங் கரை க்கண் டிலக்கிய
சிலாக்கியக்கவி பொழியுமேகந்
தனதனெனு மல்லைக் குழந்தைநா வலன்மிகத்
தான்மகிழ்ந் தெழுதுமோலை
சகலவித குணதுல்லிய குங்குமக் கும்பநற்
றுணைமுலைக் கமலையகலா
துலவுமக மேருப் புயாசலன் றிறல்மருவு
சுமுகமதி வதனதுருவன்
சுவால கிருஷ்ணனென வரும்வால சீவகன்
துரைராம சாமிபுதல்வன்
சுந்தரமி குந்துவளர் நாராய ணேந்திர
துரந்தரனே திரிந்துகாண்க
சகலசன வுபகார ரெட்சகன கொடையினிற்
றுன்கர் ணுவுதாரன்
தமிழ்க்கவிகள் சொல்கின்ற வித்து வசன
ரன்றியும்யோக் கியதுல்லியன்
தாருலகி லுனதுபுகழ் ஓங்கவே புவியுளோர்
சகலருங் கொண்டாடநீ
தகரொன்று பொன்ஐந்து குறையாது விப்போது
தந்திங் கனுப்புவாயே.

[இதுவுமது]

ஆசிரிய விருத்தம்

84. பூமேவு கமலா சனத்தனுங் காருலவு
பொதியமா மலைமுனிவனும்
பொறியுடர்ப் பையுற முனிவனொடு கற்புலி
முனிவனுந் தேவருந்
தேமேவு பொற்குவடு சிலையாய்க் குனித்திடுந்
தேவனு மகிழ்ந்துபுகழுந்

தேனுலவு சோலைமலை மாமாய னேயான்
செப்புவின் ஐப்பமின்று
நாமேவு செந்தமிழ் முழங்குங் கருங்காலை
நகராதி பதியானமால்
நதிகுல சிலாக்கியன் வீரப்ப முகில்பெற்ற
நரபுத்திர தனகுபேரன்
மாமேவு புயசயிலன் லட்சுமணப் பெருமாள்
விமலன்மத சவுந்தரீகன்
மைந்தர்பதி னாறுபெற் றிந்திரனைப் போலுலகில்
வாழ்ந்தினி திருக்கவென்றே.

[இதுவுமது]

ஆசிரிய விருத்தம்

85. வங்கங் கலிங்கங் குலுங்கந் தெலுங்கம்
மகதமா ராடமச்சி
வளர்சீன தேசமொடு தேசமைம் பத்தாறும்
வந்துதிறை தந்துபணியத்
துங்கமிகு தீவுதீ வாந்திரமொடு செகமெலாந்
துலங்கவே வைத்துநாளுஞ்
சுபமுலவு மிங்கிலீசு கொடிகள்தனை நாட்டிவளர்
துணைகவுனர் கலைக்கட்டர்கள்
தங்கமக மேருவென (ஓங்குபல) தாசில்தார்
சகலரும் புகழ்விவேகா !
மதுரை விரப்பமால் பெற்ற புத்திர
சலாக்கிய குபேரதுல்யா !
சிங்ககண் டாகையும் திறல்வச்சிர தேகமுஞ்
செழித்துவளர் விக்கிரமார்க்கா !
சீருற்ற லெட்சுமணப் பெருமாள் நராதிபா !
செகவிசைய மனுநீதனே.

குழந்தைக் கவிராயர் அரங்கநாத சேதுபதி மீது பாடியது.

சீட்டுக்கவிதை

ஆசிரிய விருத்தம்

86. சிங்கா சனாதிபதி மகுடபதி நீதிபதி
தேசாதி பதிமகபதி
செயமருவு சக்கரபதி பூபதி தாரைபதி
சேதுபதி பாடல்கொண்டோன்

கங்காப் பிரவாகமெனு மதுரப் பிரபந்தநாற்
கவிமாரி பொழியு மேகங்
கனதைபெறு மல்லையா திபன்மால் குழந்தைக்
கவிராசன் எழுது மோலை
நங்காம தேனுவெனு வானந்த மாதவன்
நற்றவசு செய்து பெற்ற
நதிகுலத் துரந்தரன் ரெங்கனு தேந்திர
நராதிப னேதுரந்து காண்க
மங்காத திருமுக விலாசப் பிரபந்தம்யாம்
மகிழ்ந்து னதுமேல் பாடினோம்
வரவழைத் தேனையுங் கேட்டுள மகிழ்ந்துநீ
மகாவரிசை செய்கு வாயே.

இருளையும் கடலையும்பற்றிப் பாடியது.

கலித்துறை

87. கல்லொன்றே றண்டெழுவேநீர் தரங்கிமுன் கண்டுமுனிச்
சொல்லென்ற ரெகுநாதன் தேவைதரு சுரும்பினிலா
வில்லொன்று வானுதலீர்! செப்பிதன்னுட்டு மேவுதலால்
அல்லொன்று நீலக் கடலோடு செப்பத் ததிசயமே.

மலைவர்ணனை

கலித்துறை

88. கோங்கமய மாம்ரெங்கம் பல்லவ ராசன் குளிர்வரைமேல்
மாங்கலையா வும்பரப்பி மணிக்கொண்கன மால்கொண்டு
மீன்கன முத்தின சரமாக் கோத்து விரைக்குமுதம்
தான்கனி வாய்கங்குல் மாதுக்கு மாலை தரித்தனனே.

சாமிநாத சேதுபதிமீது பாடியது

வெண்பா

89. தோய்ந்தான்மேய்த் தான்குடையாய் தூக்கினான்
[மேன்மேலும்
சாய்ந்தான் எரிந்தான்பின் சாப்பிட்டான்—வாய்ந்தபுகழ்
மன்னு வரத்தின் வருசாமி னுதேந்திரா!
பொன்னு வரையிலேகாய் பூம்.

90. காலையிலே ஐந்து வயதாம்...........
வேலையி லேழு வயதாம் மீனவி லோசனிக்கு
மாலையி லொன்பது வயதாம் மன்னுலகு பதி
னுலவீணர்வழிக்கு மிப்படியே யெந்த னூளைக்குமே,

## பாலைநிலக் கொடுமை

### கலித்துறை

91. வலஸ்திரிபால் யொத்துவாரா மற்றும் பிச்சிமன் னன் [வெற்பில்
நலஸ்திரி பாலையெவ் வாறுசென் றுன்நல்ல நாயகரே!
பலஸ்திரி வீட்டுக்குப் போகவிட் டேவழி பார்த்திருந்த
குலஸ்த்திரி தன்மனம் போலே கொதிக்குங் கொடுஞ்சுரமே

## ஆமகனது இயல்பு

### வெண்பா

92. சிங்கந் துணைத்தேடி செல்லாது சினவேங்கை
யெங்குந் திரிந்துமிடந் தேடாது—பொங்கார
ஆனதுறை யறிந்துநீந் தாது ஆமகனும்
தானே தனக்குத் துணை.

## அரங்கநாத சேதுபதிமீது பாடியது

### விருத்தம்

93. நெய்யுண்ட வாயா! தென்சோ லைமலை
நிதமும் மறவாச் சிந்தையான்
வையமகி ழானந்த மால்பெற்ற புத்திர!
மாற்கண்ட வச்சிர தேகா!
மங்காத நதிக்குல துரந்தரா திவ்வியமிகு
வசனப் பிரசங்க நிபுண!
தையலர்க் கதிமோக புருடபாஞ் சாலா!
சரச வுல்லாச மதன!
தந்திரமிகு மதியூகி பட்டியப் பாடகித்
தங்கட் கும்மதி விவேகா!
துய்யமலர் மாதுமக லாதபுய பூதரது
துரந்தர சவுந்த ரீகா!
துதிதங்கு வாணிநித மதிதங்கு மேருநிகர்
துரைரங்க நாத முகிலே.

## பெறமணையனூர்பேரில் ஆசிரியம்

94. சகலசன ரெட்சகா! புராதன! காவியுடை
சாற்றுசல் லாப வரதா!
தரணிபதி னுலுமே வந்திறைஞ் சிக்கிறு
பைந்தமெஞ் ஞான ரூபா!

சுகலளி தாமருவு காராளர் பங்கிவனீ
தோன்றிவினை யாட வுன்னைத்
துதித்தவர்பூ சனைசெய்யக் கருணைகூர்ந் தவர்கள்
சொற்கெதிர் சொல்மெய்த் தெய்வமே!

பகரறிய மதுரிதக் கோவைத் தமிழ்சேது
பதிமீதி லெங்கள் தாதை
பாடியு னருள்பெறச் செவ்வூரை வாங்கிப்
பதியில்வந் துற்ற நாளாய்

இகலரசர் திறையிட் டிறைஞ்சவரு கெவுரிவல
வேந்திர மகராசன் ஞால
மெங்குஞ் செழித்திட செங்கோல் செலுத்துநாள்
இப்புது மையாய்த் திசைக்கே.

வெண்பா

95. கந்தா! கடம்பா! கதிர்வேலா! மாமலையா!
மைந்தா! சுவாமி வடிவேலா!—சந்தக்
குறமக ளாசைகொள் நற்குமரா! வெற்றிபெறு
அறுமுகவா பழனிவே லா!

வெற்றிலைக்கும் வேசிக்கும் ஒப்பிட்டுப் பாடியது
சிலேடை வெண்பா

96. கொள்ளுகையால் நீரிற் குளிக்கையா லாளேறி
இள்ளுகையால் கட்டிக் கிடக்கையால்—தெள்ளுதமிழ்
தித்திக்குஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
வெத்திலையும் வேசியுமா மே.

வள்ளல் வடுகனுதக் கவிராயர்மீது பாடியது

97. அன்னமிடு உன்வீடு சத்திர நீயதற
கன்ன தான சோமனைப்போல்
அண்டினவர் நம்பினவர் தங்களையும் யெங்களையு
மடியில்வைத் தூட்டி யன்னம்

இன்னமுணு இன்னமிடு இன்ன மொண்ணு
யென்றுப சரித்து நாளும்
இப்படிக் கிப்பழைய சித்தம் பலம்போய்
எடுக்கவரு புலவர் நீர்காண்

முன்னமொரு பஞ்சம் கரண்டாக மூடி
முக்கால் படிவிலை பஞ்சமாம்

மூலத்தை அடியோடே பேர்த்தெறியு மனதான
மும்ம தாசர வேழமே!
மன்னர்கொண் டாடும்பிர சட்டக விராசனே !
மதுரகவி ராசன் மைந்தா !
மல்லையூர்வளர் வடுக னாத கவிராசனே !
மதுர கவிமொழி மேகமே !

### வள்ளல் வடுகநாதபூபதிமீது பாடியது.

98. எல்லைக்கு மடிசெலுத்து மெல்லைக்கு மளவுதரு
மெல்லாங் கீர்த்தி
மல்லைக்குள் வளர்வடுக நாதன்தாள்
வைத்த வானைக்
கொல்லைக்கோ ரிலையுமில்லை காயுமில்லைப் பூவுமில்லைக்
கூட்டிக் குத்தக்
கல்லைக்கோ ரிலையுமில்லை அவன்கொடுத்த அனதானக்
கணக்குத் தானே.

வாழ்வீமன் கவிராசன் வடுகனா தேந்திராதி
வழங்கும் போதனம்
காழ்மிகு பொற்பணதி வேளின்கை யானாலும்
அழிப்பன் இன்று
நாளை யெனவும் புகலான் குணத்தையும் கண்டலவோ
னுடார் தண்ட
கோள்கையிற் குடியிருந்த ராசுரா குருவுந்தேவ
குருவுந் தானே.

99. கலைவிரித்த தமிழாளி வடுகனா தேந்திரனுடன்
கருது வாழை
யிலைவிரித்துச் சோறிட்டான் சோத்துமேல் வைத்தகறி
யெண்ணப் போமோ
மலைபெருத்த வயிறெப்ப னுண்டு மகனுண்டு
மற்றைச் சேடன்
தலைவிரித்த பூதமுண்டு வேப்பமிடு மவன்கொடுத்த
சாதந் தானே.

100. நீதாகோ மாகாமா னோராரும் வந்துபணி
பாதாசே ராசோழா பாண்டியா
மகராச னேகெவுரி வல்லவரா சேந்திரா
சேகராச னேசெயம்செயம்.

## மங்கைபாகக் கவிராயர் சிட்டநாதனைப் பழித்துக் கூறியது.

### காப்பு.

101. பார்ப்பார்கள் வீட்டில் பழங்கல முருட்டியே
 பால்தயி ரெலாங் குடித்துப்
பறைச்சேரி யில்சென்று மாட்டெலும் புகளெல்லாம்
 பல்லால் கடித்து நக்கிக்
கோப்பான குறவர்தலை சாரையில் நுழைந்துபோய்க்
 குடிசைக் குள்ளே புகுந்து
கூழெலாந் தின்றுவிளை யாடிவரு குக்கலே !
 கூறுவின் ணப்ப மொன்று
சாப்பாடில் லாமலே பெண்டிதனை யூரிலே
 தான்வழுங் கத்தொ டுத்துச்
சல்லியும் பில்லியுங் கல்லியுஞ் சொல்லியே
 சாண்வயறு தான்வ ளர்க்குந்
திப்பாக யாஞ்சவுந் தரபாண்டி யன்மகனை
 செந்தலைப் புலைய னாகும்
செத்தநாய் தின்றுவளர் சித்திநா யகமட்டி
 சீண்டலை மிகக் காக்கவே.

### செங்கீரை

102. கனகவெள் ளாட்டி மார்கள்சிறு நீரினால்
 கால வென்னீ ராட்டியே
கந்தையா லேதொடைத் தொட்டடைக் கரியினால்
 கண்ணுக் குள்மையு மிட்டு
நினவாக வேகழுதை விட்டையை சுட்டுமுன்
 நெற்றிக்கு நீறு மிட்டு
நித்தமுந் தலைசாரை மண்ணெலாஞ் சன்னியே
 நீணி லக்காப் பணிந்து
தனதாக உச்சியில் தூமநெய் போற்றியே
 சாண்டு தனையும் புகட்டித்
தாய்களு நாய்களும் பேய்களும் கூடியே
 தக்கமுட் டுச்சி மோக்க
சினமான குப்பையில் செங்கண் வளருங்குழ
 செங்கீரை யாடி யருளே
செத்தநாய் தின்றுவளர் சித்திரு யகமட்டி
 செங்கீரை யாடி யருளே.

## தாலாட்டு

103. குடுகுடு மெனநட முடுகிய குழிநரி
தாலோ தாலேலோ
குசவர்கள் குசுவிய குசுவினில் மசுகுணி
தாலோ தாலேலோ
மடையர்க ளிடையர்கள் தடியினி லிடியுணி
தாலோ தாலேலோ
விடுகழு தையை நிகர் விதியிலி மதியிலி
தாலோ தாலேலோ
வெகுவெகு குடியினில் விழுபிள்ளை யழுபிள்ளை
தாலோ தாலேலோ
கடைகடை தொறுநுழை களிசிறை வுளிசிறை
தாலோ தாலேலோ
கத்தப மெனவரு சித்தி நாயகா
தாலோ தாலேலோ.

## சப்பாணிப்பருவம்

104. சுட்டிடும் சூளையில் சுடுசாம்பல் வாரியே
தொண்டர்தலை மீதில் கொட்டத்
தோலடி பறையர்கள் காலடிப் புழுதியைத்
தோணவோ மீதில் கொட்ட
மட்டிடும் கயவர்கள் கொட்டாப் புளியினால்
முழங்காலில் மீதில் கொட்ட
முச்சிலிப் பாகவரு குச்சிலி யரெலா
முகந்துமிக மீதில் கொட்டத்.
திட்டியே தாய்களும் தந்தையுங் கூடியே
சீயென்று குப்பை கொட்டச்
சினமான வலையரும் நுளையரும் புலையரும்
சென்றுவா குமியில் கொட்டச்
சட்டமிடுங் குண்டியில் தேள்கொட்ட வேபெரிய
சப்பாணி கொட்டி யருளே
தத்தாலி கிடையர் வருசித்தி நாயகம்
சப்பாணி கொட்டி யருளே.

## முத்தம்

105. எட்டா துயர்ந்த வேப்ப முத்து மேனிக் கிசைய குருந்த
ஏங்கும் புகலும் புங்க முத்தும் [முத்தும்

தட்டா துயர்ந்த கொட்டைமுத்துந் தானே வளர்செங்
[துருக்க முத்துஞ்
சருவுங் காட்டா மணக்கமுத்துந் தளருஞ் சித்தா
[மணக்குமுத்துங்
கட்டாய்க் கழுவியெடுத்த முத்துங் கழுவா திருந்த
[களிச முத்துங்
காஞ்சமுத்தும் பச்சை முத்துங் காண மாட்டி
[விலேக்குவிக்கு
முட்டா ளப்பூலேயா சக்கிலியா முத்தந் தருகமுத் தந்தரு
முறட சித்த நாயகமே முத்தந்தருக முத்தமே. [வாயே

## வரானே

குட்டிச் சுவரே நீவருக கோழைச் சவமே நீவருக
கோட்டான் முகமே நீவருக குறும்பா சிமுளே நீவருக
கொட்டுக் குலாமா நீவருக கொண்டைப் பயலே நீ வருக
சுண்ணிக் கலேயே நீவருக சுணங்கல் வாலே நீ வருக
காட்டான் புடுக்கே நீவருக சவங்கல் பானே நீ வருக
சட்டிச் செருப்பே நீ வருக தாசி மகனே நீ வருக.

## அம்புலி

106. கூசாம லேதினமுஞ் சுடுகுவர் அவனுமோர்
குறளிவா யால் சுடுகுவன்
கூனென் றுன்னேயும் சொல்லுவா ரிவனேயுங்
கூறுபடு கூழையென்பார்
பேசாத நக்கலா மென்பார்க ளிவனேயுஞ்
பேச்சரிய நக்கலென்பார்
பெண்டிகள் சட்டியில் காச்சுவ ரிவனேயும்
பேசுகுற டாக்காச்சுவார்
வீசுந் துடுப்பினல் கிண்டுவா ரிவனேயும்
மேல்வாயி லேகிண்டுவார்கள்
வீரா மகப்பையால் மோப்பார்க ளிவன்மேவு
பெண்டாட்டி யைஒப்பர்கள்
ஆசையுட னுதலால் நீயுமிவ னுஞ்சரி
அம்புலி ஆடவாவே
அத்தனுய் அசுரை நிகர் சித்தனு யகனுட
னம்புலி ஆடவாவே.

### சிற்றில்

107. காஞ்சைக் கொம்பை யடுப்பெடுத்துக்
கள்ளி விறகு தனைமாட்டிக்
கனலைக் கொளுத்தித் தீயொட்டிக்
கள்ளுங் கரியும் நிறைச்சுவைச்சுப்

பேஞ்ச சிறுநீ ருலையேற்றிப்
பெருக்கத் தானே யெரியவிட்டுப்
பின்னும் கொதிக்கப் பதம்பார்த்துப்
பேசாமல் தான்வடித் தெடுத்துச்

சாஞ்சே யிருக்க யிறக்கிவைத்துச்
சாண்டு புளிச்சா தத்தையும்
காட்சித் தட்டாள் மாட்டெலும்பைத்
தகைத்துத் தானே கறிசமைத்துத்

தேஞ்ச யகப்பை யால்படைப்போர்
சிறுவர் சிற்றில் சிதையேலே
செத்த பிணச்சித்தி னுயகமே
சிறுவர் சிற்றில் சிதையேலே.

### சிறுபறை

108. ஒன்னலாருன் தலையை வெட்டவே போகையில்
உத்தயாந் தவில்முழங்க
ஓரியும் கூகையும் நாய்களும் நரிகளும்
ஊளையிட் டேமுழங்க

பின்னையும் உன்னுடைய பெண்டாட்டி யவுசாரி
பெத்தமக ளும்முழங்க
பிள்ளையும் கொள்ளிவைத் தள்ளிவாய்க் கரிசியிட்
டேனமாப் பிளைமுழங்கப்

பன்னியே நீவரும் படையினர் பக்கலின்
பறைமேள மேமுழங்கப்
பத்தியுற முறைகள் சுத்தியே தானிவளு
பாராட்டி யேமுழங்கச்

சென்னியில தியபதி உன்னுடல் முழங்கவே
சிறுபறை முழக்கி யருளே
செத்தனைத் தின்றுவளர் சித்திநாய கனுமட்டி
சிறுபறை முழக்கி யருளே,

### சிறுதேருருட்டல்

109. கண்டபே ரெல்லாரும் உன்னுடைய மேனியைக்
கட்டை போலே யுருட்டக்
காசலைய தானஉன் பிள்ளைமாப் பிள்ளையைக்
காகங்க் ளுண்டு ருட்டப்
பெண்டாட்டி தன்னையும் பெத்தமகள் தன்னையும்
பேய்பி சாசுகள் உருட்டப்
பெத்ததாய் தங்கை தமையன் தம்பிதன்னையும்
பிணநாய் கள்தின் றுருட்டக்
கொண்டாடும் உன்மாமன் மச்சினனை யும்பகைவர்
கூடியே தானு ருட்டக்
கோடான கோடியாங் கொள்ளிவாய்ப் பேய்களும்
கோட்டானு முண்டு ருட்டத்
திண்டாடு முன்னுடைய வெண்டலை யுருட்டவே
சிறுதே ருருட்டி யருளே
செத்தநாய் தின்றுவளர் சித்திநாயக னுமட்டி
சிறுதே ருருட்டி யருளே.

முற்றும்

### அழ. குழந்தைக் கவிராயர் இறந்தபோது அவர் பேரில் சரமகவி குமாரசுவாமிக் கவியனியற்றியது

### சரமகவி—வெண்பா

சீரார் செயவருடம் சேரப் பசிமாதம்
ஏரார்நால் தேதிவெள்ளி யென்றநாட்—போரார்
அமரபட்சம் சட்டி திதியம் மிருகசீரப்
பேர்குழந்தைச் சாமிசொறக்கங் காப்பு.

110. என்று காண்பேன் தம்பியென்றே
யிசைக்கும் வார்த்தை யெப்போதுஞ்
சென்றுங் காலைக் கடன்முடித்துச்
சிறந்த வில்வக் குடலைகொண்டு
என்று தினம்போற் சிவபூசை
யுண்மை யுடன்செய் பவரினியார்?
பொன்றினல் கொண்டு வரப்போமா
முருகா புகலுதி நீயே

111. பாதக் குறட்டி னடியழகும்
பண்பா யுரைக்கு மொழி யழகும்
படிக்குஞ் சந்தப் பாவழகும்
பகுத்துப் பகரும் பொருளழகும்
நீத மாக ஞாயபத
நிலைக்க வுரைக்கும் சொல்லழகும்
நிமல பூசை நியமமொடு
நிதமுஞ் செய்யுங் கையழகும்
வேத மொழியால் மூவர்களும்
விளங்க வுரைத்த அடங்கல்முறை
விதியின் படியாய்ப் பகரழகும்
விளம்ப ரென்று லழகாமோ !
ஓதலெவர்க்கு மோது வித்தல்
உங்கடறம் போல் காண்பதென்னே !
யுயிருக்குயி ரேயுடற்றுணையே !
யுயர்ந்த வரன்று ளுற்றனையே.
அருகாற் சவுக்கை நடுவாக
அமைத்த வூஞ்சல் பலகையின்மேல்
அழகார் மெத்தை தலையணை திண்
டதிலே அமைத்து நடுவிருக்க
ஒருகாற் போலத் தினங்கண்டு
உள்ளங் களித்தே னுடற்பிறந்தேன்
ஓகோ வன்ப தாண்டிலெழுந்
தோடி யரன்று ளுற்றுவிட்டீர் !
மருகாற் பிறக்க வருவீரோ !
வாஞ்சை மிக்கு தென்செய்கேன் !
மாயோன் மருகன் அருள்பெற்றேன்
வாரே தங்கு பாரேனோ ?
முருகா தேவற் குற்றதுவை
முற்றுங் கடிந்த படியேயென்
முயற்சி வீண்போ காதன்றி
முடிவுற் றருவீர் மொய்கழலே.

112. பெண்டீர் பிள்ளை சுற்றமுற்றும்
பெறலாம் பிறப்பைப் பெறலாமா
விண்டி ரில்லை யொருவசனம்
வீணாய்க் கடத்து வு.........

கண்டீர் சொற்க வாசலையும்
கயிலைக் கரசன் கழல்சேர்ந்தும்
கொண்டீ ரினியான் காண்பதென்னுள் ?
குழக்கர சேயென் கோமானே.

113. இல்லைத் தலத்துள் நடனமிடுந்
தேவ தேவன் சிவகாமி
வில்லைப் பழிக்குந் தனத்தனையாம்
வல்லியுட.........
மல்லை நகரத் தேயிருந்து
வந்தோன் மிதுலை மாநகர்வேள்
கல்லை யிரும்பை யுருகிடவே
கற்றோன் குழந்தை கவியல்லால்.

114. வந்து பரனைத் தொழுதிருக்க
வந்தா ரிந்த யுகபரத்தார்
நொந்து மனதும் புண்ணாகி
நோக நோக்கிற் கேட்டிலதால்
யிந்து ...... மடவியரும்
யேக மாக வேயிரைந்தார்
தந்து படித்த சகோதரவென்
சாமி குழந்தைத் தமிழ்க்கடலே.
[மன்மத வருடம் சித்திரை மாதம் முதல்
குன்றக்குடியார் தினக்வி]

குன்றக்குடி முருகர் தோத்திரம்

இருவிகற்ப நேரிசை வெண்பா

115. அந்திபகல் மாலையினும் யான்மற வேன்னினைத்
தந்திமு கற்கிளைய சண்முகா—செந்திருமால்
தன்மருகா சங்கரனார் தந்தசுதா கந்தகுகா
நன்முருகா யென்றேற் றென்று.

116. நாவே நினைத்துதிக்கு நன்னெஞ்ச மேதிக்குங்
கோவே குமர குருபரனே—வாவேயென்
முன்னாக வேமயிலில் மொய்குழல்தெய் வானைவள்ளி
நன்னாக நீகவெனை நாடு.

117. நாடிற் றுயர்வுநன் மைமிக வுண்டாகும்
தேடிற் றமதுகழல் சேர்க்குமே—வாடி

இருக்க மனஞ்சகியா தெந்தைகந்த வேளன்
பருக்கமுத மான்குக்ன் பால்.

பாரோர்போற் றித்துதிக்கும் பன்னிருகை யான்குகனைக்
காரோதி தெய்வானை காந்தனையே—சீரோங்கு
கந்தனையென் கண்ணுங் கருத்தைக் கடவுடரும்
மைந்தனையெக் கா்லுமற வேன்.

118. மறவா திருந்தும் வருத்தமே யானுத
பிறவா திருக்கவருள் பெம்மான்—உறவா
ருமையன்றி வேறுகதி யுண்டோ வெனையுங்
கமையாக முற்றிலுமே கார்.

பிறவாதிருக்க

(இதுவுமது)

விருத்தம்

119. கார்மேக வண்ணன் மருகா முருகையன்
பார்மே லவர்க்குக் குறைகளுண் டாகொலும்பா
நீர்மே லெழுத்து நிலையற்றகாய னீர்மைகண்டு
ஆர்மேல் விருப்பம்கொளேன் குன்றை மேவுவனே.

நிலை பெற்றவாழ்வுபெற

(இதுவுமது)

வெண்பா

120. பார்த்தேன் வயிராக் கியபத்திப் பேரன்பைப்
போர்த்தேனு மைத்தொழுது போற்றுவேன்—ஆர்த்
வருசூர் முடிகாத்த வள்ளல் முருகோன் [தேன்
கருமேக் வண்ணன் முருகு

121. என்ன சனன மெடுத்தாலு
மினியா னவைவேண் டேனவை முற்று
முன்ன தருளே யல்லாது
ஒருவர் செயலா லுண்டாமோ
தன்ன தாகப் பாவித்துத்
தடுத்தாட் கொள்வீர் சரண்செய்தேன்
மன்ன ராயா சரண் சரணம்
வடிவேற் குன்றை மலைக்குகனே.

(இதுவுமது)

அறுசீராசிரிய விருத்தம்

122. ஆறு படைவீ டுநிறைந்தாய்
அசுரர் குலத்தை யுங்காய்ந்தாய்
மீறுஞ் சமணை வேரறுத்தாய்
வேந்த ரிந்திரன் முடிவீழ்த்தாய்
கூறு முகிலை விலங்கிடித்தாய்
கொடுத்த செண்டால் நிதியெடுத்தாய்
ஏறுந் தகரைப் பலம்பொடித்தாய்
யெந்தா யெந்தாயா தரிப்பாயே.

ஆதரிக்க வேண்டுதல்

[இதுவுமது]

123. எடுத்த யிந்தச் செனனமதி
லிம்மிசை யாலே யிடைந்தெய்த்தேன்
ஏது மறியேன் யான் சிறியே
னிருக்கு வரையிற் சுகந்தந்து
தடுத்தே னழைத்துக் கொண்டருள்வீர்
தகுந்த மோட்ச மதுபோதுஞ்
சாமி நாதா குன்றைவரை
தனியே நின்ற தனிமுதலே.

[இதுவுமது]

124. அடுத்த வெனது குலகோத்திர
மதுதான் விளங்க மைந்தர்கட்கு
வறிவு கல்வி நல்லொழுக்க
மனுகூ லஞ்செய் தாண்டருளித்
தொடுத்த படியே முடித்தருளுந்
தோகை மயில்வா கனத்தரசே
தொன்று தொட்டு மென்றுமுமைத்
தொழவுஞ் செய்வீர் சோதியனே.

உனையே துதிக்கவரம் வேண்டுதல்

[இதுவுமது]

125. சோதி யான பழம்பொருளே
சுந்த ரேசர் தருமுதலே
சொல்லுக் கிசைந்த நவரசமே
துதிக்குங் கருணைப் பெருங்கடலே

ஆதி யான திருப்பரங்குன்
றதனோ டாறு படைவீடு
மமர்ந்த வாழ்வே குன்றைநகர்க்
கரசே யானைக் கிளையோனே.

## செட்டியார் ஊருணி விநாயகர் கவி

அழகு

[இதுவுமது]

126. சலத்தினிலே சிறந்தபெருஞ் செட்டியா ரூருணிநேர்
செகமே லுண்டோ
நலத்தினிலே வரசின் கீழ்க்கரை தனில்தான்
நலமே நல்கக்
குலத்தினிலே யுயர்ந்திடுநற் குழந்தைவேற் கவிஞனன்பு
கொண்டு யிந்தத்
தலத்தினிலே மேல்மிதுலைத் தனத்திலே கணேசரையே
தாபித் தானே.

127. என்னதியு மின்னதிக்கு யிணைசொலவும் போகாது
யிதற்கு மீதே
தன்னதெனவும் பொருந்தும் தன்மைநிறை செட்டிகுளந்
தன்னின் கீழ்ப்பால்
முன்னமிவ்வூர் செய்பலனே மூதாக்காள் செய்தவமோ
முக்கண் நாதன்
வன்னதலத் தரசினீழலடி யார்கள்பெற்ற
வரந்தான் மன்றோ.

128. எப்பொருளைத் தொடங்கிடினுங் கைப்பொருளாம்
யிப்பூ வுள்ளார் [கணேசனையே
மெய்ப்பொருளென் றேமதித்து முன்வைத் தட்சதை
மெய்யிற் சாத்திக் [யருக்கு
கைப்படும்நெல் லிக்கனிபோல் காண்கவெனத்
துதித்துள்ளக் கருத்தாய் நோக்கில்
அப்படிக்கே யடைதறிண்ணம் ஐங்கரனை
வணங்கியின்ப மடைகு வோமே.

129. சம்புபசு பதிக்குமுன்னாய்ப் பின்னாய் மத்தி
தானான கெசமுகனைச் சரண மென்றால்
அம்புவியி லவர்க்கடமக் கரிதான
பொருளுளதோ யாவு நல்குந் தானே

நம்பு நம்பு மனக்குரங்கே ஐயறிவும்
ஒன்றாகி நாடு நாடு
தெம்பு தெம்புஇது சரதமினி
செட்டிகுளத் தைங்கரனைச் சேவிப்பாயே

130. முன்செய்த தவக்குறையோ யானறியே
னிருமனையாள் முடிந்த பின்பு
யென்செய்வ தென்மனது களையாது பாலர்வளர்த்
தெடுத்தே னின்னாள்
நன்செயலைக் கண்ணாரக் காணவில்லைப் பின்னெல்லார்
நடக்கு மோதான்
உன்செயலே செட்டிகுளத் துறை கணேசப் பொருளே
ஓதி னேனே.

131. மூத்தோர்முன் னோர்சொத்தை முற்றிலுமே தோற்று
மூர்க்க னானன் [விட்டான்
பாத்தோர்பி னுதித்தானும் அறுவழிக்கு முபகாரப்
பட்டோ னல்லன்
காத்தோம்பின் கந்தனையே திருச்செந்தின் முருகோனே
கருணை வைத்துச்
சேத்தோனே நின்மீதிற் செந்தமிழைச் செய்யவருள்
செய்கு வாயே.

132. முதற்பொரு ளாகிய முக்கண் மூர்த்தியாம்
இதற்கெது மறிதல் இகத்தி லீய்ந்திடுஞ்
சுதற்கென நாடியே தொழுநற் கன்னியர்
நுதற்கெதிர் காணவே நொடிக்குள் நல்குமே.

133. வழிவழி வந்திடும் வழக்கந் தன்னையே
பொழிபொழி வாணியைப் பொருந்து வித்துமே
தெளிவுடை யானெனச் செகத்திற் செப்பிட
விழியினாற் காணச்செய் வேத வித்துவே

134. மூவர்கள் அண்டர்க்ள் முனிவர் முன்னவர்
யாவர்கள் யாதினை நடத்தி லங்குறும்
தேவினைச் செட்டியார் குளத்திற் சென்றவன்
பாவினாற் துதிப்ப தைங்கரன் பாதமே.

### அங்க வருணனை

### அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

135. கலையார் மதிவே ணியுமைந்து
கமல முகமு நுதலுநுதற்
கண்ணுங் கருணைக் கணுஞ்சங்கக்
கவினுர் குழையும் செவ்வாயும்
மலையார் புயமும் விடமிடரு
மழுமான் கரமு ருத்திராட்ச
மணிவி பூதியாந் தளமுன்னூல்
மார்பும் புலித்தோ லுடையிடையும்
விலையார் செம்பொற் சீரடியும்
விளங்க விடைமே லெழுந்தமரர்
வேந்தன் றனைப்பார்த் திவ்வுலகில்
மிகவு மாரி பொழியவருள்
அலையார் நதிசூழ் மிதிலைநக
ரரனே யெங்கள் சிவயோக
வம்மை பாக முவந்தசித்தி
யழகா வுடைய நாயகனே.

### எல்லாமாய் நின்றவர் எனல்

136. பரனே சிவனே யிறையவனே
பரசு பாணி யுருத்திரனே
பஞ்சாட் சரனே சம்புபசு
பதியே நதியே சங்கரனே
வரனே சின்மை யானந்த
வாம தேவா திகம்பரனே
மணிமால் விடையாய் கயிலைவரை
வாழ்வே நீல மிடற்றனே
தரனே செம்பொற் சபைநடனு
சகஸ்திர நாமா ரூபமுத்தா
சதுர்வே தத்தி னுட்பொருளே
சகல புவன ரெட்சகனே
அரனே யுரனே மிதிலைநகர்
அரசே யெங்கள் சிவயோக
வம்மை பாக முவந்த சித்தி
யழகா வுடைய நாயகனே.

### சித்தியை வேண்டுதல்

137. மாயா யிமையப் பருப்பதத்து
வரலை புவனை திரிபுரையாள்
வாமி காமி யபிராம
வல்லி மலையத் துவசன்மகிழ்
சேயா யிலங்குங் கயற்கண்ணி
தெரிநாற் பத்து முக்கோணச்
சிறுவீ டுகந்த மாதங்கி
தேவி சிவி வாராயோ
வேயா யிசைந்த புயமடந்தை
விமலை நிமலை சரா்சரங்கள்
மேன்மேல் விளங்கும் படிகாக்கும்
வேத முதல்வி தொண்டன்யான்
ஆயா யினிய மிதிலைநக
ரமர்ந்த பூவை சிவயோக
அம்மை பாக முவந்தசித்தி
அழகா வுடைய நாயகனே.

### மாணிக்கவாசகருக்கு உபதேசித்ததுபோல, எனக்கும் உபதேசம் கொடு எனல்

138. நீதி யான பெருந்துறையி
னீழல் குருந்தின் கீழிருந்து
நித்தியா னந்தத் தொண்டருக்கு
நியம ஞான வுபதேச
மோதி யரஞ யிருந்துவள
ரும்பர் முதலே யொருபுலவ
ருன்னைப் பணிய நிதமுவரு
முறுதி யறிந்தே யுன்பதியில்
சோதி யான திருக்கோவில்
சூட்சித் திடுவை யானுமிங்கே
தோன்று வேனென் றுரைத்துடனே
தோன்றிக் காட்சி தந்திடுவாய்
யாதி யரஞ மிதிலை வந்த
வரனே யெங்கள் சிவயோக
வம்மை பாக முவந்தசித்தி
யழகா வுடைய நாயகனே.

### மிதிலை நகர் வருணனை

139. சொன்ன படியே யடியவர்க்குச்
 சூட்சி யுதவ நீயிருக்கச்
 சும்மா வுலவுந் தேவர்தமைத்
 தொழுதா லதனாற் பலனுண்டோ
 கன்னல் கதலி தெங்கொடுசே
 கரமுள் வருக்கை செறிதடத்தில்
 கவிகள் குதிக்கக் கனியுடைந்து
 கதித்த தேறல் கழனிபுக்கிற்
 சென்னெ லுவகை யாய்விளைந்து
 சிறப்பா ரட்ட லட்சுமியுஞ்
 சேர்ந்தே தனத னளகையெனத்
 தெய்வ லோகம் களித்துவரும்
 அன்னம் பயிலு மிதிலைநக
 ரரனே யெங்கள் சிவயோக
 வம்மை பாக முவந்தசித்தி
 வழகா வுடைய நாயகனே.

### இதுவுமது

140. கொண்டல் படியு மதிளுமம் பொற்
 குடஞ்சேர் சிகர கோபுரமுங்
 கோவில் வசந்த மண்டபமுங்
 கடலு மறையோர் சாலைகளும்
 வண்டர் பயிலும் பூங்காவும்
 வற்று நதியு நீதிமன்னர்
 மன்னு மாட மாளிகையின்
 வகுப்புங் குடிவாழ் மனைதொகுப்பும்
 தண்ட விரதம் பதிகளிறு
 தாவுங் கடைவீ தியுமடவார்
 சந்தக் களிப்புஞ் சனப்பெருக்குந்
 தமிழின் செழிப்பு மிகச்சிறந்தே
 அண்டர் பரவு மிதிலைநக
 ரரனே யெங்கள் சிவயோக
 அம்மை பாக முவந்தசித்தி
 யழகா வுடைய நாயகனே.

### நமன்வாய் வயப்படாதிருக்க அருள் எனல்

141. படைக்கும் விதியை மாதவனைப்
பஞ்ச தருவாழ் மகபதியைப்
பகர்முப் பத்து முக்கோடிப்
பலவா னவரை யிருடிகளைப்
புடைக்குந் தவத்து முனிவரைமுப்
புரிநூ லணியும் பூசுரரைப்
புவியி லுயிர்கள் யாவையுமே
புரந்து காக்கு முன்னவனீ
நடைக்குஞ் சரமா முகத்தானை
நனிவேற் குகனைப் பெற்றவனீ
நம்பு மெளியேன் சடத்தாவி
நமனால் அஞ்சி யோடாதே
யடைக்குந் தாளா நிமிதிலை
யரசே யெங்கள் சிவயோக
வம்மை பாக முவந்தசித்தி
யழகா யுடைய நாயகனே.

### உலக முதல்வன் எனல்

142. கந்த மான மலர்வாளிக்
காம னுடல மெரித்தநெற்றிக்
கண்ணா காலன் விழவுதைத்த
காலா சூலா பாணியனே
பந்த மான மூபுரந்தீப்
பற்ற நகைத்த வருட்கோபா
பஞ்ச பூத மயமாகிப்
பரிபூ ரணமா யகிலமெல்லாம்
சொந்த மான வுடலுயிரின்
தொகுப்பாய் நிறைந்து விளையாடுந்
தூயா கடல்சூழ் பூவுலகில்
சொல்ல வரிய வளம்படைத்தே
அந்த மான மிதிலைநக
ரரனே யெங்கள் சிவயோக
வம்மை பாக முவந்தசித்தி
யழகா வுடைய நாயகனே.

### ஆசைப்பறவையை நீக்க வேண்டுதல்

143. செகத்தி லாசைப் பறவையொன்று
திரும்பித் திரும்பித் தொலையாத
செனன மரண வனுபந்தச்
சேக்கை யுடலந் தனையெடுத்துச்

சுகத்தில் மடவார் மனைவாழ்வில்
துவண்டு துவண்டு தடுமாறுந்
தொழிலா லுயர்ந்து பரதவிக்கும்
துன்பக் கொடிய வினையகற்றி

மகத்தில் விளங்கு மிந்திரன்மால்
மறையோன் காணு நின்சரண
மலரை யணிந்தா யறிவிக்கு
மகிமை ஞானம் புரிந்தெளியேன்

அகத்தில் மாவாய் மிதிலைநக
ரரனே யெங்கள் சிவயோக
வம்மை பாக முவந்தசித்தி
யழகா வுடைய நாயகனே.

### உலகுய்ய, அருள்மழைபொழிய வேண்டுதல்

144. காட்சிக் கெளிய சிறுத்தொண்டன்
கையா லரிந்து கறிசமைத்த
க்ருணைப் புதல்வன் வரவழைத்துக்
காத்த பழைய கதைபோலச்

சூட்சிக் கதிரால் மடிந்துலர்ந்து
சோம்பும் பயிர்கள் மிகத்தெளியத்
தொகுத்த புவன மீடேறத்
துளிவான் பொழிய யினியருள்வாய்

மாட்சிக் கலைமா மதிபுனைந்த
மவுலிப் பரனே திரிநயன
வதனும் புயனே பசுந்துளவ
மணிமால் விடைமேல் வரும்பொருளே

ஆட்சிக் கனகஞ் செறிமிதிலை
யரனே யெங்கள் சிவயோக
வம்மை பாக முவந்தசித்தி
யழகா வுடைய நாயகனே.

### நீண்ட ஆயுள் வேண்டுதல்

145. வருடந் தோறு முறிக்கடனே
வாங்கிப் பிழைத்தாலு பதார
வட்டிக் காசுக் குங்காண
மாட்டா தினிமுன் னுங்கள் தந்த

பொருடந் தாற்போ தும்போதும்
போம்போ மென்றுர் வணிகரெலாம்
புலமைத் தரமோ மலிவாச்சுப்
புகல்வே றில்லை யாதலினல்

வருடந் தானே மிகப்பெய்து
வயலில் சாலி விளைவோங்க
வைத்தால் பெருமை யுனக்காகும்
மறுத்தால் சிறுமை யெங்களுக்காம்

அருடந் தார்வம் பெறவகில
மனைத்துங் காக்கும் சிவயோக
வம்மை பாக முவந்தசித்தி
யழகா வுடைய நாயகனே.

### நூல் ஆக்குவித்தோர் இன்னரெனல்

146. ஆதி முதலா யிம்மிதிலை
யாண்டோன் சிற்றம் பலக்கவிஞன்
அவன்தன் னேழாந் தலைமுறையில்
அமைந்த குழந்தைக் கவிவலவன்

ஓதி யிந்தக் கழிநெடிலை
உலகோர் வரம்பை யுணருவண்ண
முரிமையெங்கட் குற்றதென்றே
யுயரா வுடைய நாயகர்தம்

பாதி பாக மாகயிடப்
பாக மமர்ந்த பராசத்தி
பாதஞ் சிரத்தின் மேற்சூடிப்
பணிவோம் பூசை பணியியற்ற

யாதி யாக வடிமைகொண்ட
வரனே யெங்கள் சிவயோக
யம்மை பாக முவந்தசித்தி
யழகா வுடைய நாயகனே.

### பாட்டு முதனினைப்புச் செய்யுள்

147. கலையார் பரண்மா யர்நீதி
கருதிச் சொன்ன படிகொண்டல்
உலையார் படைக்குங் கந்தசெகத்
துற்ற காட்சி யுயர்வருடந்
தலையார் ஆதி முதலென்னச்
சாற்று மிதிலைச் சம்புவின்மேல்
நிலையார்ந் திடுநற் கழிநெடிலாய்
நிகழ்த்துந் தலைச்சேர் வையுநிறைவே.

### திருப்பரங்கிரி முருகர்மீது பாடியது

### பதினான்குசீர்க்கழிநெடிலாசிரியம்

148. நெஞ்சுத் தறுத்தாலு மொருஅட்சர மில்லாத
நிர்மூட ரான பேரை
நெடுந்தமி ழகத்திய னென்றுங்கொ டும்பர்களை
நீதியிற் சோழ னென்றும்
நெடுகிலும் வாய்வீசு நாறவாய்ப் பயல்களை
நிறைந்தகனி வாய னென்று
நெருக்கடிசெய் தேகுடி கெடுக்குங்கு லாமர்களை
நேயரெகு ராம ரென்றும்
அஞ்சாறு பணமுள்ள பஞ்சப சாசர்களை
அதிதன குபேர னென்றும்
அறிவுகெட் டலைகின்ற நாய்ப்பயல் களைத்தினம்
அப்பாசி யூகி யென்றும்
ஆயிரம் பொய்சொல்லும் வீணரைச் சொல்லினி
லரிச்சந்திர ராச னென்றும்
அரைக்காசு புலவருக் குதவாத லோபியரை
யருள்கொடைக் கர்ணன் என்றும்
வஞ்சகம் செய்கின்ற துற்குணம் கெட்டவரை
மருவிலாத் தரும னென்றும்
வழக்கோர மேசொலு ஞாயமில் லாதவரை
மரியாதை ராம னென்றும்
வன்புடன் கீரைவே ரும்பிடுங் காதவனை
மண்டுபல வீம னென்றும்
வருகின்ற புலவர்மேற் சள்ளென்று விழுபவரை
மதுரகுண சாந்த னென்றும்

தஞ்சமென வந்தவர் பசித்திருக் கவுமதைத்
　　தானுமெண் ணுமல் வீட்டிற்
சாப்பாடு செய்துபூ தம்போற் பருத்திட்ட
　　சண்டிக டாப்ப யல்களைச்
சத்திரபதி நீயென்று தமிழ்பாட நீதியோ
　　சண்முகா வாழ்வு தருவாய்
சங்கினந்தவழ் வீதியுலா வியதென்பரங் கிரிவாழ்
　　சங்கரன் புதல்வாகும ரேசனே.　　　[மயில்வாகன

### முத்தியடைய வழிகூறல்

149. எடுத்தசென்ன முத்திபெற யென்றுலோ நல்வழியொன்
　　றிருக்கு தையா
அடுத்தசெட்டி யார்குளத்தி லரசமரத் தடியின்கீ
　　ழாகு வேறித்
தொடுத்தபடி நடத்திவைக்க அடியரென்று வருவரெனச்
　　சொல்லிச் சொல்லிக்
கொடுத்து மின்ன முண்ராத கொள்கையென்ன
　　தன்மையினைக் கூறு விரே.

### இம்மைச்செல்வமடைய வழிகூறல்

150. மக்களுண்டு சந்தான வாழ்க்கையுண்டு தக்கசெல்வம்
　　வருவ துண்டு
மிக்கபுகழ் தானுண்டு விண்ணுகா ளிந்திரசெல்வ
　　மிகவு முண்டு
எக்காலுங் குறையர்து செட்டிகுளக் கரைவசித்
　　திருக்கு மெந்தை
பக்கலனு தினமறவா திருப்பவர்கட் கிகத்தினிலே
　　பலித முண்டே.

151. சிவமருள் கணேசநற் றேவ தேவனைப்
பவவினை ஒழித்திடப் பாரி லன்புளோர்
தவமது அலதுவே றல்ல தாமெனக்
கவனமே ஒன்றிடில் கற்குங் கைதவம்.

152. இகத்தினி லிப்பிற வாமை யீய்ந்திடுஞ்
சுகத்தினி லிதனின்மேல் யாது சொல்லுவீர்
மகத்தினில் பெறுவது பெரிது மானிடர்
அகத்தினில் ஐங்கரன் அன்பு தோன்றினே.

## மூப்புவரும் காலத்தில் காக்கவேண்டுதல்

153. உயிருள வரையு முடனதா யிருந்து
உண்மையு மூக்கமும் போக்கித்
தயிரது மத்தா லுடையுமா போலத்
தன்னுடல் கலக்கும்நோய் தன்னை
அயிலது விடுத்து அறுத்திட வல்ல
அப்பனே ஆறுமா முகத்தோய்
மயிலதி லேறி யுயிர்விடும் போது
வந்துநின் கழல்தரு வாயே.

154. தருவாய் தருவா யிருகழலைத்
தாயே நாயேன் தவியாமல்
குருவாய் அரற்குங் குறுமுனிக்குங்
கூறும் பிரண வப்பொருளே
வருவாய் வருவாய் அடியேன்நோய்
வருத்தம் தீர வடிவேலா
கருவாய் உருவாய் வருகாமல்
காருங் கருணைக் கடல்நீரே.

155. குன்றுக் குடியான் குமரகுரு பரமுருகா
கூறக் கேண்மோ
நன்றாக விருந்ததும்மை நாயடியேன் நம்பினது
நாவும் வாயு
மொன்றாக வெந்துநெடு நாளாக உணவுகுறைந்
துடலி ளைத்தால்
என்றாக முடிந்திடுமோ யானறியேன் நின்வாக்கா
லிசைத்தி டீரே.

## பிணி நீங்க வேண்டுதல்

156. அய்யனே யெந்தன் நெஞ்சினில் வாயுவு
மனுதினங் குடியதா யிருந்து
மெய்யனே செய்யும் வாதையென் னாலே
விளம்பிட முடியுமோ விரைந்து
துய்யனே பழனித் தலநிறை பொருளே
தொன்றுதொட் டுன்னடித் தொண்டன்
உய்யவே செய்ய உமக்கிது அரிதோ
உணவுதந் துள்ளநோய் களையே.

## கடனுகப் பணம் வேண்டிப் பாடுதல்

157. நால்வருங் காரி யத்தா நாடிவந் தென்பால் நீவிர்
சால்வதாய் லெட்டர்தன்னைத் தான்வாங்கிப் பொதுவில் [வைத்தீர்
ஏலவே வட்டிதன்னை யெவ்வேளை யெமைக்கேட் டாலுங்
காலமே தள்ளா தீய்வோம் யென்றதுங் காணுங் காணும்.

158. இப்படிச் செய்ய வேண்டாம்
மென்துகை தன்னை யீவீர்
எப்படி ரசீது கேட்டாலும்
தரத்தயார் தானே யாமும்
அப்படிச் செய்தி டாமல்
அற்பர்போல் அலையச் செய்தீர்
சொற்படி நடத்தல் காணுஞ்
சொல்லுவீர் பதிலெ மக்கே.

159. வெள்ளைய வணிக மாலிவ்
வேளையில் சிலவுக் கில்லை
யெள்ளள வேணு முங்களுக்
கீய்ந்திட மனதும் வல்லை
உள்ளதைச் சொன்னோங் கண்டு
ஒன்றுமே பதில்சொல் லாமல்
வள்ளல்நீ கொடுத்த னுப்பு
வாயெந்தன் வருத்தங் கண்டே.

160. கைமாத்து வாங்கித் தானே
கனதொல்லை யாகப் போச்சு
பொய்மாத்துச் சொல்ல வென்னுல்
போகாது புகலு மில்லை
செய்மாத்து உங்கள் பாலே
செப்பினோம் வாங்கித் தாரோம்
பைமாத்து அல்ல வென்று
பண்பாக உரைத்திட் டோமே.

## மிதிலைவாழ் மடந்தையரியல்பு

161. தாசிகளில் நூறதிகம் குடிப்பெண் டீர்கள்
தங்களிலே நூறதிகம் தாலிகட்டாத் தையல்
தோசிகளில் நூறதிகம் அறுத்த முண்டை
சொல்லவதின் நூறதிகம் வணிகர்குலத் தோகை

சீசியதில் நூறதிகம் வலையருடைப் பெண்கள்
செப்பவதில் நூறதிகம் அதிகம்படியாத் தெரிவை
யோசியதில் நூறதிகம் மல்லர்குலக் கணிகை
யொருங்கில்லை யிம்மிதிலை யுண்மையறி வீரே.

### மிதிலை, நடுநிலைமை நீங்கியது எனல்

162. கண்மூடி யேபூனைக் குட்டி பாலைக்
கருதலிவ் வுலகத்தார் காணு ரென்றே
உண்நாடிக் கொண்டிவ்வூர் முண்டை யெல்லா
முள்மகிழ்ந்து புணருகிறு ளூக்கத் தாலே

எண்ணுமற் கருகமணிக் கழுத்திற் கட்டி
யிருக்கை யிலேபிள்ளைகளை யீன்றே கொன்றுர்
நண்ணுச்சு யிம்மிதிலைப் பட்டி தன்னில்
ஞாயமில்லை நடுவுமில்லை நல்லோரு மிலையே.

### நீதியின்மையால் வரும் விளைவு

163. அய்யனே செந்தூர்வாழ் கந்தா யிந்த
யன்னீதங் கண்டதுகேட் டறிந்து மில்லேம்
வெய்யகொடுஞ் சூரன்வசங் கீண்ட வைவேல்
விட்டிவரை வதைக்காது விட்டு விட்டால்

செய்யதிரு மகள்வாசஞ் செய்கு வாளா
செந்நெல்விளை வாகுமா சிறப்புண் டாமா
துய்யமழை தான்பெயுமா மானி டர்க்குச்
சுகமுண்டோ நலமுண்டோ சொல்லு வீரே.

### வேசியர் இழிவுங் அதனுல் ஆகுங்கேடும்

164. சோரநா யகனைப் புருடனில் மேலாய்த்
தொட்டென்னைத் துளைதுளை யென்றுல்
சேரஅஞ் சுவனே மூடனு யுள்ளோன்
சிறுசினில் அறுத்திட்ட முண்டை

சாரமாய்த் தாலி கட்டிவாழ்ந் திடுதல்
தன்மையாந் தகாதுவிச் செய்கை
பாரமா யிவரை யெமன்கொண்டு நரகம்
படுகுழி வீழ்த்துவன் பாரீர்.

[இதுவுமது]

165. ஒன்பது துவாரத் தொருதுவா ரந்தான்
ஊத்தையு மிரத்தமுள் ளதனை
துன்படை யாட வருக்கதை யீய்ந்து
துகில்பணி பாத்திரம் தொகுப்பா
யின்புடை யில்லம் வண்டிமா டாடு
யெவற்றையுங் கைவச மேற்றுப்
அன்பது வாகச் சிலபிணி கைமா
றழிப்பர்கை முதல்அல்குல் அகலம்.

[இதுவுமது]

166. ஏமனுர் விடுத்த தூத ரிம்மாதர் என்றெண் ணுமலக்
காமனுர் வாதை யாலே கைப்பொருள் அவர்கட் கீய்ந்து
தாமனுர்க் கேவல் செய்து தரித்திரம் பிணியும் ஏற்றுப்
பூமனுர் ஆனுர் மேலோ யாமேலோ புகல்வீ ரென்ருன்.

[இதுவுமது]

167. மாதர்க் குழைத்துக் கைப்பொருளை
வழங்க லாலே வழங்கியென்றுர்
சூதர்க் கிளைத்து முன்பொருளைத்
தோற்ற தாலே சூதனென்றுர்
வேதர்க் குழைத்து கற்றறியா
விட்ட தாலே வேதனென்றுர்
நாதர்க் குழைத்துக் கதியடையா
நாயின் கடைய ராயினரே.

நெஞ்சினை விளித்துக் கூறல்

கீர்த்தனை

பல்லவி

168. ஏதுக்கு மயங்குகிருய் நெஞ்சமே—குன்றைக்
கிறைவனி ருக்கையிலே குறைவென்ன உனக்கு

அநுபல்லவி

பாதுகார்க்கு மொன்றும் பயப்படாதே ஒன்றுந் [தான்]
தீதுவராதே யென்றுஞ் செப்புமுருக என்றும் (ஏது)

சரணம்

சாதுக்க ளுறவாக்குந் தாரித்திரிய மதைப்போக்கும்
யாருக்கும் மேலாக்கும் அவர்கழல் காணியாக்கும் (ஏது)

திதுக்குடம் பெடுத்த தென்று திகைக்காதே
சித்தமே நீதெளி உத்தினக் குரைத்தேன் (ஏது)
அன்னை தந் தையுமில்லை யன்பார்பெண் டீருமில்லை
பின்னை யுறவோ ரில்லை பேசாதே யதுதொல்லை. (ஏது)

## அறுசீராசிரிய விருத்தம்

169. வந்த பிணியைத் தீர்த்துவிட்டால்
வலிவா தைகளுண் டாசொலுவீர்
கந்த நாதா வென்றுதினங்
கருதா திருந்தே னேகடையேன்
பந்த வலைக்கு ளகப்பட்டுப்
படாத பாடு பட்டுழுனே
எந்த வேளை யுமறவேன்
யேழைக் கிரங்கு மென்றேவே.

## தருணத்தில் காக்க வேண்டுதல்

170. தேவே அசுரர் குலந்தொலைத்த
செல்வா அமரர் சிகாமணியே
காவே யடியேன் றன்னையுநீர்
கையில் நெல்லிக் கனியேபோல்
பாவே பாடித் தினந்தினமும்
பணிவே னுந்தன் பாதமதில்
தாவே கிருபா கரவேளே
தருண மிதுவே தமியேற்கே.

171. பூட்டுக டோறும் சுத்தநீ ரதனுற்
பொறுக்கொணு வாதனை புரிதற்
கேட்டுக டோறுங் கந்தவுன் மேற்பா
வெழுதியு மின்னமு மிருந்தால்
நாட்டுக டோறு முள்ளபேர் சிரிக்க
நாயினுங் கடையனுந் திகைக்க
வாட்டும் வைவேல் விட்டுவா ருதிநீர்
வறண்டதே யதிலிது வலிதோ.

## தைரிய இலக்குமியைக் கொடுக்க வேண்டுதல்

172. எப்பவு முனக்கே தொண்டனு மானேன்
ஏனிந்த வாதனை யெனக்கு
முப்பவந் தானுந்தொ டர்ந்ததே யாஞல்
முத்தையா சித்தமே யிரங்கி

இப்பவும் வந்து என்முகம் பார்த்து
யெளியனுக் கொருவழி யியம்பித்
தப்பறக் களைந்து தயிரியங் கொடுப்பீர்
தமியனேன் வருத்தமுந் தவிர்ந்தே.

### மிதிலை விநாயகர் தோத்திரம்

173. சீர்பொருந் தும்மி திலைப்பதி யில்வளர்
செல்வவி நாயகன் ருள்போற்றி
பேர்பொருந் தும்கும்மி நாடகஞ் செய்யும்
பேரான பொய்யா மொழித்துணையே.

### மிதிலைக் குமரவேள் தோத்திரம்

174. மண்டலம் போற்று மிதிலைப் பதியினில்
வாழ்ந்திடு மாமயில் வாகனத்தோன்
கொண்டலென் ஞளும் பொழியஅருள்செய்யுங்
குமர வேள்பதங் காப்பாமே.

### ஆவுடைநாதர் தோத்திரம்

175. தாவும் வெள்ளை விடைமீதிற் பவனிசெய்
தற்பர ஞமிதி லைப்பதியில்
ஆவுடை நாதர் பாதாம் புயத்தைநிதம்
அன்பாயென் ஞளும் முடிக்கணிவேன்.

### சிவயோகவல்லி தோத்திரம்

176. ஆலமுண் டோரிடப் பாக மதிலுறை
அன்னை மரகத மெய்யாளைச்
சீல முடன்ப ணிந்தார்க் கருளுஞ்
சிவயோக வல்லி பதந்துணையே.

### கையில் காசில்லாது பாடியது

177. கைதனில் காசொன் றில்லைக்
கடனுமே தருவா ரில்லைப்
பொய்சொல்ல நாவோ யில்லைப்
புகலும்மை யன்றி யில்லை
மெய்சொல்வா ரொருவ ரில்லை
மேற்சொலென் ருலுமில்லை
அய்யனே திருச்செந் தூர்வாழ்
அப்பனேநீ யருள்செய் வாயே.

## ஆலையில் இடுங் கரும்பானேன் என்று பாடியது

178. காலையிலு மாலையிலு முச்சிப் போதுங்
கந்தரென்றே கைகுவிப்பேன் கனிந்து பாடி
ஓலையிலே யெழுதிவைத்தே னுமக்கென் மேலே
உண்மையுண்டோ யில்லையோ யுரையு மையா
வேலையிலுந் துயிலையிலும் நின்ற மத்தை
விளம்பிடுவே னல்லாது வெறுப்ப துண்டோ
ஆலையிலு மிடுங்கரும்பாய் ஆக்கி விட்டால்
ஆர்காப்பா ரிவ்வுயிரை அந்தோ அந்தோ.

## பழனியப்பச் செட்டியின் நோய்தீரப் பாடியது

### கலிவெண்பா

179. செட்டிப் பழனியப்பன் செய்தரும மேதருமம்
கெட்டியார் யாமுரைக்கக் கேளுங்கள்—அட்டியில்லை
ஆவுடை நாதருக்கும் அம்மைசிவ யோகவல்லிக்
காவுப்பசு மடமுண் டாக்கிவைத்து—வேகமாகப்
பாலா லபிடேகம் பண்ணும் படிநடத்தி
மேலாக நாதசுரங்க மேமுழங்க—கோலா
கலமாய் நிலையங்கி கண்மணிக்குச் செய்து
நலமாக நாகா பரணனே—பெலமாகச்
சாற்றியலங் காரமது தான்கண்டு சங்கரியைப்
போற்றித் துதித்துப்புகழ் கொண்டான்—நாற்றிசைகள்
யெல்லாமுந் தானறிய வின்னும்நந் தாவனந்தான்
யெல்லா மலரும் யெடுத்தணிய—உல்லாச
மல்லிகை முல்லை மருவுமருக் கொழுந்தும்
அல்லும் பகலுமய்யன் அன்னைக்கும்—நல்லியல்பாச்
செய்யமன மேபடைத்த சீமான் மகன்நோயை
அய்யமில்லை நீர்தீர்த் தருளுவீர்—வையம்
பழிக்கு முமக்கும் பழியும்வந் துசேரா
ஒழிக்கும் பிணியை ஒழியும்—விழிக்குண்மணி
காண்பதுபோலே யெவர்க்குங் காட்டுமும தருளைப்
பூண்பதுவே வாணன் பொறுப்பன்றோ—ஆண்பிள்ளைகள்
யெல்லார்க்கும் புத்திவரும் எந்தாய் செகதீசா
கல்லார்க்கு நல்லறிவைக் காட்டுமிது—வல்லார்நீர்
அல்லாது வேறுதெய்வம் யாதிருக்கு தையாசொல்
நல்லார்க்கும் பொல்லார்க்கும் நண்பனே—யெல்லாம்
உமதுசெய லல்லா லொருசெயல்வே றுண்டோ
யெமதுமனம் வேறுசொல்ல யெண்ணு—தமைவாகக்

[இதற்கு மேல் காணப்படவில்லை]

### பழனி முருகனைப் பாடியது

180. வேண்டியன் பொருளைக் கிரியெனு மேக
மொன்றுநவ ரசச்சூற் கொண்டு
மீண்டியுன் றிருமெய்யெனும் வெற்பினி
லென்றுசந் தத்தமிழ் மாரிபெய்திட
பாண்டியன் றனுபூதித் தருளையனே
அப்பனே யத்த னேதமிழ்ப்
பாண்டியன்சுரந் தீர்த்தபஞ் சாட்சரப்
பழனிவாழுந் தெண்டாயுத பாணியே.

### [இதுவுமது]

181. கரந்த லோபர் தனந்தரு வாரெனக்
கண்டு போகுங் கவியரங் கேற்றினின்
றிரந்த போது மவர்மன காசொன்று
மீய்ந்தி டாரிவ் விடும்பை யொழிந்திடச்
சுரந்த செல்வமுங் கல்வி யுள்ளமுந்
சொந்த மாய்க்கொடுத் தெந்தனை யாட்கொள்வாய்
பரந்த வாரி மடுத்துண்ட வேலனே
பழனி வாழுந்தெண் டாயுத பாணியே.

### [பாடிய பாடல்களைத் தொகுத்துக்கூறி, அவையடக்கமுங் கூறியது]

### அகவல்

182. ஆதியாம் பகவ னருளுமைங் கரனே
சோதியா மெவைக்குத் துலங்குமுன் னவனே
அடியார் மனத்தி லமர்ந்திருப் பவனே
கொடியா இடத்தனு காதகுஞ் சரமே
மெய்யாம் மிதிலை மேனகர் செழிக்கப்
பொய்யா மொழியா ரெனப்பெயர் புனைந்து
மாதமும் மாரி மழைமிகப் பொழிந்துஞ்
சீதள மாகச் சென்னெலும் விளைக
கோவில் குளங்கள் குறைவிலா தோங்க
நாவில் சரசுவதி நடனம் புரிய
திருத்தேர்த் திருவிழாத் தேவர்கள் மதிக்கத்
திருக்குள நடுவிற் றெப்பமண் டபமும்
அந்தணர் தெருவு மருமறை முழக்கமும்

பந்தமார் க்ஷத்திரியர் பருமண வீதியும்
வைசியர் மனைகளும் மாநிதிப் பெருக்கமும்
முசியா தனந்தரு முறைசூத்திரர் தெருவும்
மடமுடன் கடபம் மாபசு மடங்கள்
நடமிடு மனைகள் நந்தா வனங்கள்
பாடகச் சாலைகள் பண்பார் சோலைகள்
கூடகோ புரங்கள் கொத்தள மேடைகள்
மாப்பலாத் தெங்கு மாதுளம் வருக்கை
தாப்பெலாம் வகுளஞ் சண்பக முல்லை
மருவுமருக் கொழுந்து மலர்ந்திடுஞ் சிவந்தி
தரும்விளா மிச்சவேர் தான்வெட்டி வேரும்
எங்குபார்த் தாலு மிவைகள்வா சனைகள்
தங்குகல் மிதிலை தனக் கரசான
ஆவுடை நாதர் அவரிடப் பாகம்
மேவு சிவயோக வல்லிமென் கொடியும்
திருப்பரங் குன்றத் திருக்குஞ் செல்வனும்
மருப்பொலி செந்தூர் வாசமா னவனும்
எங்குஞ் சிறந்த ஏரகத் தையனும்
தங்குமா வினங்குடி தனிலுஉற பவனும்
குன்றுதோ றாடல் நின்றிடுங் குருவும்
நன்று பழமுதிர் மலைநற் றேசிகனும்
ஏக வடிவா யிருமனை யாருடன்
பாகத் தமர்ந்த பரஞ்சுடர் முருகரும்
தண்டிகே சுரரும் சனிபக வானும்
எண்டிசை யோர்மணிந் திடுபரி வாரரும்
திருக்கொலு விருக்கும் சிறந்தசன் னிதியின்
பெருக்க மென்னுவல் பேசிடப் போகா
ஆகினும் ஆசை யதுமனங் கேளாது
பாகினு மினிதாய்ப் பாடலா மென்று
நாகம தாட நாக்கிளாம் பூச்சி
தாகமா யாடும் தன்மையைப் போலும்
வாரியை நேர்கவி வாணர்முன் சிறியேன்
கூறிய பனுவலில் குற்றம திருக்கினும்
குழந்தைகள் குளறிக் கூறிடு மொழியை
உளந்தய வாக ஒப்புமால் போலக்
கொள்வரென் றெண்ணிக் கூறின திதனை
தள்வரோ கல்வித் தரந்தெரிந் தோரே
வான மளாவ வயங்குகோ புரமுடன்
ஆனந்த மாக அமைந்திடு மதிளும்

கயிலையில் வசிக்கும் கடவுளர் பதியிது
அயிலைப் பிடித்த அய்யன் தலமிது
காசிக் கதிகங் காணுந் தலமிது
மாசிலாச் சிதம்பர மாகுந் தலமிது
சீரார் திருவா ரூரிற் சிறப்பிது
ஏரார் சீர்காழி யென்னுந் தலமிது
ஆயிரத் தெட்டு அமர்சி வாலயங்கள்
போய்வரும் பலனும் பொருந்துந் தலமிது
இத்தலத் தினையா னெடுத்தியம் பற்கு
அத்தலந் தானிக ராகுமென் றுரைத்தேன்

### தைப்பூசத்துக்கு மதுரைசென்று பாடியது

### வெண்பா

183. வளர்பரிய தாவி மாதந்தைப் பூசம்
உளமகிழ்வாய் யான்மதுரை யுற்றுப்—பழமறையு
மால்வேதன் தேடரிய மாசோம சுந்தரிடம்
பால்வளர்மீ னாட்சி பதம்.

### [இதுவுமது]

184. கண்டேன் பணிந்தேன் கலியைக் கடத்தவருள்
கொண்டேனென் உள்ளங் குளிர்ந்திட்டேன்—பண்டே
செய்தவினை போச்சு சித்தம் தெளிவாச்சு [தான்
உய்வழியீ தாமே யுணர்.

### திருப்பரங்கிரி முருகனைப் பாடியது

185. எத்தனை குற்றங்க ளிடையிடைச் செய்தாலு
மத்தனையுந் தான்பொ றுக்கு மாறுமுகர்—சித்தர்
மகிழுபரங் கிரியில் வாழ்வோ யடியேன்
மகிழும் படியருளு வாய்.

### [இதுவுமது]

186. பரங்குன் றஞ் சென்றேன் பழம்பொருளைக் கண்டேன்
தரங்குன்று தென் றுவரந் தந்தா—ருளங்கொண்டே
நின்றேன் கரங்குவித்தேன் நெஞ்சார வே துதித்தேன்
அன்றே கலிபோச் சகன்று.

### செல்வம் பெற்றபோது பாடியது

187. சுந்தரமீ னாட்சிதனைத் தோத்திரஞ்செய் தேதுதிக்கச்
செந்திருவை நோக்கியருள் செய்யென்றார்—அந்தவன்னை

வந்தாள்செல் வந்தந்தாள் வள்ளல்நீ வாழ்தியென்று
இந்தா விருந்தா ளிசைந்து.

### மிதிலை மக்களை விளித்துக் கூறியது

#### கலித்துறை

188. ஆவுடை நாதர் சிவயோக வல்லியென் அன்னை பொற்றாள்
பாவுடை வாணர் துதிக்கும் பொய்யா மொழிப் பாலருடன்
தேவுநற் சண்முகர் வள்ளிதெய் வானையு மேசிறக்கும்
சேவிடை யூர்தி வயிரவர் நற்சனி சேர்தண்டியே.

[இதுவுமது]

189. இந்த மிதிலைப் பதியில் வசித்திடு மீசர்கழல்
எந்த விடத்தி லிருந்தே துதித்திடி லுமெய்துமுத்தி
அந்த விதத்தை யறியாமல் மானிட ரானவர்கள்
சிந்தை முழுது மயங்கித் திரிவதென் செப்புமினே.

[இதுவுமது]

190. செட்டி குளக்கரை மேவும் விநாயகத் தெய்வ மொன்றைக்
கிட்டிமுக் காலும் வலம்வந்து தொழுதென்ன கேட்கி
லுந்தான்
அட்டியென் றது வுடனே தருந்தெய்வம் யானறிந்தேன்
சுட்டியினிச் சொல்வ துண்டோ வன்பாகத் தொழு
[மின்களே

### காமுகரை விளித்துப் பாடியது

#### வெண்பா

191. இந்தப் படிப்படியா யேறேணி போலிருக்க
அந்தப் படியறிய ஆற்றாமல்—சிந்தைவிட்டு
மாதர் வலைக்குள்ளாய் மாநிதியைத் தானீய்ந்து
வாதைபட லாமோசொல் வாய்.

[இதுவுமது]

192. நல்லறிவுந் தக்கசொத்து நல்கையில் தானிருக்க
புல்லறிவு மேலாடிப் போவதுண்டோ—வல்லையொத்த
மாமுலைவற் றிப்போனால் மாறிமுன்போ லாகிடுமே
காமுகற்கு மூளைகுறை காண்.

[இதுவுமது]

193. மூளை குறைந்துவிட்டால் முற்றுங் கெடுதியப்பா
யேழை மதியாற் கெடுதியெய்துங்—கோழைச்
சயரோக மேலாடுஞ் சாரும் இருமல்
அயலோர்சி யென்பா ரறி.

பரத்தையர்மனைசென்று, மீண்டு பாடியது

கலித்துறை

194. பாணர்க்கே விறலா ளாகிப் பண்ணேழும் பாடி நின்ற
காணர்க் கரிய சோதிக் கடவுளே! சுந்தரேசர்!
வீணர்க்குள் வீணன் யானே விழிக்கின்றேன் விறலி
[நின்றுள்
பூணர்க்கே யின்பங் கொடுத்தே புண்ணியா புகுவிப்பாயே.

பசுமாடு வாங்கியபோது பாடியது

விருத்தம்

195. ஆவிற்கு நாற்பத் தைந்து அதுகொடுத் தடியேன் வாங்கி
நாவிற்கு உருசை தேடி நாயினுங் கடையே னந்தோ
தீவிற்குத் தீவு நாடித் திரமாய் மூவைந் துக்கும்
பாவிற்கு வாணன் வைக்கல் பருத்தியின் கொட்டை
[மூன்றே.

பால் இல்லாதபோது பாடியது

196. அறுபத்து மூன்று ரூபாய்
ஆச்சுது அனுபோ கத்து
ஒருபத்து மாத மில்லை
ஒடுக்கித்தன் பால்கன் றுக்கு
தருவது மில்லை செத்த
தன்மைபோல் மடியி ருந்தால்
திருவருள் செய்தல் நன்று
திருப்பரங் குன்று ளோனே.

197. உன்னையே தினமும் நம்பி
உன்னையே நாளும் நம்பி
அன்னையே தந்தை யேயென்
றடிமையான் அரற்றல் கண்டு

பின்னையோர் கெதியில் லேனைப்
பிதற்றிடச் செய்தல் நன்றோ
யென்னையே கைவி டாதீர்
யென்றுநின் னடிமை யானே.

[இதுவுமது]

198. காத்தனை யென்னை முற்றுங்
காப்பது கடமை யன்றி
நீத்தனை போல நெஞ்ச
நினைப்பது உணவை யிய்ந்து
தீத்தனை பிணியை அய்யா
தீரமாய்ப் பாலை நல்கிப்
பாத்தனை கைவி டாதீர்
பழனிவாழ் பரம மூர்த்தி.

[இதுவுமது]

199. இப்பசு விரங்கி யெனக்குண வளிக்க
யெம்பெரு மான்தந்த முருகா
முப்பொழு தாகக் கனக்குதே யில்லை
முத்தையா சித்தம திரங்கித்
தெப்பலாய்க் கறக்கச் செய்திட வேணுஞ்
சேவகா சித்தனென் றறிய
அப்பனே பழனிக் கதிபனே எனக்கு
ஆதர வானுநீ யலவோ.

வைக்கோல்வேண்டிப் பாடியது

200. மாட்டுக்கு வைக்க வில்லை
வாங்கவும் வழியுங் காணேன்
வீட்டுக்கு வார பெண்ணும்
விழிக்குது சமைத்தி டாமல்
பாட்டுக்குக் கேலி யாக
நானுமே சமையல் செய்தேன்
பாட்டுக்குக் குறைக ளில்லை
பழனிவாழ் பரனே பாரும்.

நோய்நீங்கியபோது பாடியது

201. வந்திட்ட நோயை மாற்றினீர் உணவும்
வழங்கினீர் வாழ்வையுந் தந்தீர்

கொந்திட்ட குழலார் குஞ்சரி வள்ளிக்
கொடியிணை மணந்தகோ மானே
நொந்திட்ட போதே தந்திட்ட படிதான்
நோக்கமென் மீதினில் வைப்பீர்
நந்திட்ட முத்தின் மாலையைத் தரித்த
நங்கைமார் தங்களு யகனே.

### முருகனிடத்து எப்போதும் அருள வேண்டுதல்

202. வாரியைச் சுவற வேலையும் விட்டீர்
வளர்மக மேருவைச் செண்டால்
கோரியே யடித்தீர் குறித்தவைப் பெடுத்தீர்
குடிகளைக் காத்துரெட் சித்தீர்
மாரிபெய் யாததால் மேகத்தை விலங்கில்
மாட்டினீர் மண்டல மதிக்கச்
சாரியா யெதிர்த்து வளையினு லிந்திரன்
சலித்திட முடிவிழத் தகர்த்தீர்.

### [இதுவுமது]

203. எண்ணிய யெண்ணப் படியெலாஞ் செய்வீர்
யென்மட்டி லிரக்கமே யில்லை
புண்ணியா செந்தூர் வாழ்ந்திருப் பவரே
போற்றினேன் நாற்றிசை புகழக்
கண்ணில்லார் போலத் தவித்திட லழகா
கருணையை யெங்கொழித் திட்டீர்
நண்ணினே னடியேன் நாயினுங் கடையேன்
ரட்சிப்பீர் அமரர்நா யகனே.

### செட்டிமக்கள் இயல்பு கூறல்

#### தூது

204. வட்டிதர நோட்டெழுதி வாங்குவரோ வையகத்தில்
செட்டிமக்களே யெவருஞ் செப்புங்கள்—பட்டியுந்தான்
காணுது புத்தியினிற் கற்றவரை யேமாற்றிற்
றேணுது யிப்போச் சுகமாகும்—வீணுகப்
பேரெடுத்து மெத்தப் பிரபலந்தான் பெற்றதுபோல்
ஆரெடுப்பா ரிவ்வூரில் யாங்காணேம்—நேரில்
கண்டுபணந் தாவென்றுல் கட்டாயங் கையிலில்லை
கொண்டுவந்து தாரமென்று கூறியே—அண்டியண்டிப்

பேசயிலே வீட்டுக்குப் பேசிக்கொண் டேபோவார்
காசொன்று மீயக் கவலையில்லை—நேசமாய்ப்
பத்துநாட் சென்று பணம்வேணு மென்றாலும்
எத்துவாய்ப் பேச்செடுத் துரைப்பார்—வித்துவான்
என்னசெய்வான் கைச்செலவுக் கில்லாத தாலவரு
மென்னகாண் சொல்லிவிட்டுப் போமென்றால்—இன்னம்
சிலநாள் பொறுக்காட்டால் சீக்கிரமாய் ஈய
நலமாக நோட்டெழுதி நல்கில்—குலமாதர்
தங்களிடம் யான்வாங்கித் தாரமென்று சொல்லுவார்
தங்கள்முடை யாலெழுதித் தந்தபின்—மங்களமாய்
நூத்துக்கொன் றேகாலாய் நோக்கவட்டங் கண்டிரா
பாத்துக்கும் லோபர் பணம்வீசும்—சேத்துக்கும்
ஈது விடித்துக் கொண்டிவேன் பணமென்று
சாதுவாய் வீட்டுக்குத் தான்செல்வார்—ஈதுதான்
வாங்கநெடு நாட்செல்லு வட்டியதற்கு முக்கால்
பாங்கா வணிகர் பகுத்தறிவீர்—தாங்காது
தந்தமுதலை யென்பால் தாவென்றால் தந்தமென்று
தந்தம் வெளியாகத் தான்சிரிப்பார்—இந்த

[இதற்குமேல் காணப்படவில்லை]

### விருத்தம்

205. உணவுகளி லிசைதோன்றி உண்டிருப் பதுதா னென்றே
கிணம்வடியும் வேல் கொண்டு நீதியாய்ப் பண்ணி வாழும்
குணமுள வரசே தேவர் குடியினை நிலைக்க வைக்க
ரணங்கள மதிற்சூர் வென்ற நாதனே ரட்சிப் பாயே.

### வேங்கடேசு ரெட்டன் மீது பாடியது

#### கலித்துறை

206. திருக்கரங்கம் வருக்க வயில் செலுத்து படையான
சலக்கை யாமா
தருக்காங்கம் பயிற்றுதுரையி னசைவேங்க டேசுரெட்டன்
தழுவா நாளில்
அருக்கரங்கம் பாம்புகுந்தா ரம்புலியும் வெம்புலிபோ
லாச்சே கண்டாய்
உருக்கரங்கம் பாந்துடைக்க வுருக்காம்பி தந்தானென்
றுருகு வாளே.

[இதுவுமது]

207. கடிமுடிந்தா ருதவுமிள சைவேங்க டேசுரெட்டக்
கன்னன் சொன்ன
பொடிமுடிந்து தாளிவிடம் வருவதுனஞ் சகியாமற்
புகலு முன்னே
கொடிமுடிந்து தனித்திருந்த வரிவையிவ ளாமகனே
கூறு மென்சொற்
படிமுடிந்த தாவிலேயா நேரிலிவள் கைக்களவைப்
பார்த்தி டாயே.

208. தரும்புலிக்கு மருவ.........த்தாக்கும் வேங்கடேசு ரெட்ட
சாமி மாலை
வரும்பலிக்கு நினைத்தபடிக் கிப்போது தப்பாது
வலத்தி ருந்த
திரும்பலிக்கு ரலைப்பார்க்கிற் செயமடிபெண்ணே மதனன்
செங்கை யாலெய்
அரும்பலிக்கு மென்னபயஞ் சுகமாக வாழ்வாயுன்
னதிர்ஷ்டந் தானே.

விருத்தம்

209. வேலையி லேதுயில் முகுந்தன் போலும்
வேங்கடேசு ரெட்டன் விந்தையாக
வாலையிலே தானடந்த செய்தி தன்னைச்
சொல்லையிலே வண்டு பாயுஞ்
சோலையி லேயித முருந்தச் சொல்லையிலே
முலையையெட் டித்தொடப் பாவாடைச்
சேலையி லேயமு தெழும்பிச் சிந்தையிலே
மயங்கியதென் சிந்தை தானே.

210. விகடத் தந்திமதி காய்மார வேள்விடுக்கு
மந்திரந் தைத்தூடு ரவ்வென்
மகடத் தந்திவலை யாடுங் கட்புனல்
வடியத் தந்தி யிசைவெறுப் பாவளோ
சகடத் தந்தி பரித்திரள் கூட்டிய
சத்துருத் திரட்டைக்குத் திடத்தரும்
புகடத் தந்தி யுதையச் சயதரா
பூதரா! வேங்கடேசு ரெட்டந்திரனே,

211. புகடப் பாத வுனையே நினைந்தழும்
புல்கி யின்பந் தாரததென் சொல்லெந்தன்
மகடப் பாத வராபுரிந் தாண்மனம்
வஞ்சம் விட்டு மருவிப் புணருவாய்
சகடப் பாதக னுருயிர் மாய்ந்திடச்
சாற்று மாங்கவர்க் கென்ன வளர்ந்திடும்
விகடப் பாதங் கொடிச்சிறி மோதிய
வீர ராகவ னேயரங் கேசனே.

212. சுந்தரர் சுந்தரா தரங்கண்டிலே யந்தரா
சுகந்தா ரீரிப்போ தென்ன
விந்தரர் சுந்தரா வரப்பேதை யரிந்தரா
சகிக்கு என்னசொல் லாகுமோ
சுந்தரர் சுந்தரா வென்னு மாதர்
சுதந்தரா பாதரா புத்தி ராபுய
மந்தரர் சுந்தரா வுடையார் சுந்த
மருது பாண்டிய ராச கிரீடியே.

213. கொண்டலாய்ப் பைங்கிளிக் கூந்தலிற்
கொண்டலாபங் கூறுவ ளாயிது
கண்டலாபங் கனிவீறு தெறலகற்
கண்டலாது கனிவா யரும்புமோ
குண்டலா கண்டலா மீனவர்
குலசேகரா வுடையார்வேள் சுதாகரா
மண்டலாதி பதிராச சேகரா
மருதுபாண் டியராச கிரீடியே.

214. .........ராண மாமுலைகளுக் குத்தானவா
வண்டள புத்தலே...............
லானவாறு மறியா னிவள் கண்ணீ
ரான வானு மரியாணமின் னுரன்றோ
வானவர் கண்டலர் மண்டலாதிபர்
மானவா வளவா மதுராபுரி
மீனவா விசையா மீனகேதனு
வேங்கடேசு ரெட்டம ராயனே.

215. போர்க்கலக்க முற்றவருக் குதவும்
வேங்கடேசு ரெட்டன் புனைதாரான்
ஊர்க்கலக்க முற்றகணை மதன்றொடுத்தா
லாற்றுவளோ வோகோகிண்.........

சார்க்கலக்கம் மியன்கடைந்த செப்பல்
தானே திரண்டதனுத் தினூடே
வார்க்கலிக்கண் ணிருகுத்தாள் வண்டினங்காள்
கண்செய்தி வழு............

### விரகதாபமுற்ற தலைவி கூற்று

216. எந்தனஞ்சும் மாயிருக்கை யில்லை
யிறைவோ னுண்ண
வந்தனம்சும் மாசகிக்கற் றென்மனஞ்
சகியாநிற்ப வழுத்தக் கேண்மின்!
கந்தனஞ்சு மாறுமுகந் திருவுரர்க்
கயல்வரவு காணேன் போன
சந்தனஞ்சும் மாவந்தாற் பூசலாம்
எனக்கும்தன் றனக்குந் தானே.

217. முத்துக் கந்தனைப் பெற்றவர் போலப்
பெண்பா லிலாசை போனபூ வரிசையால்
முத்துக் கந்தனை யுள்ளங் கொளாமலே
முளரித் தாளின் மனம்வைப்......கன்றுக
கொத்துக் கந்தனை யில்லாத பைந்தரு
குலவு வானவர் கோவான செ......
வித்துக் கந்தனை யானை முளித்தசை
வேல னேமலை வில்லிதன் பாலனே.

218. அடியக்கா மதப்பயலை பிடியடி
வில்லொடி யென்விழி யானம்பு
வடியக் காலின்மலரை வருத்திய
மாம தற்முச் சொல்லி
கொடியக்கா லென்னெனவே கோவ்லை
முருகன் வராக்கொடுமை பாலே
வெடியக்கா லென்னெனவே விலகுருன்
மதப்பயலும் வேளே தானே.

219. சங்கு முழங்குந் தமிழ்நாடன்
தம்மை நினைத்த போதெல்லாம்
பொங்கு கடலு முறங்காது
பொழுதோ நாளும் விடியாது

இங்க ளுறங்கும் புள்ளுறங்குந்
தென்ற லுறங்கும் சிலகாலம்
எங்கு முறங்கு மிராக்காலம்
என்க ணிரண்டு முறங்காதே.

### கொச்சகக் கலிப்பா

220. நஞ்சாச்சு வேம்பாச்சு நாவுக்கா காவெட்டிப்
பிஞ்சாச்சு நானுமக்குப் பேசவந்த வார்த்தையெல்லா
மஞ்சாச்செ னுங்கூந்தல் வல்லி சொன்ன சொல்லுமக்கு
பஞ்சாட் சரமாச்சே பஞ்சநதி நாயகரே !

221. அங்கா வித்தாரா யணைவதுகண் டின்பமுறு
பங்கா வித்தாரா பதியேயென் றேங்குவளோ
துங்கா வித்தாரா துணைமுலையா ராசைகொள்ளும்
செங்கா வித்தாரா திருமலைவே லேந்திரனே.

222. மங்கைக்கோ தண்டா வனமுலைப்பொன் பூத்ததடா
வெங்கைக்கோ தண்டா விதையமதன் கைப்படையோ
சங்கைக்கோ தண்டந் தகைவிதுரன் பின்தொடரச்
செங்கைக்கோ தண்டா திருமலைவே லேந்திரனே.

### தலைவி வாடைக்காற்றுக்கஞ்சிக்கூறியது

### கட்டளைக்கலித்துறை

223. வெள்ளைமுகக் குங்குழையா வாடை முகந்தாலெனது
பிள்ளை முகக்குந் தனத்தைப் பிள்ளைமுகக் கப்படுமோ
வெள்ளை முகக்கும் பிறையை வெண்ணெயென்று மேடை
கிள்ளை முகக்கும் புரணி புகக்கோள் நராதிபனே. [யிற்பைங்

### கட்டளைக்கலிப்பா

224. அன்றிலுக்கு மாங்குயிற்கு மங்கசவேள் கொண்டகணை
மன்றன் மலருக்கும் வருந்துவது மல்லாமல்
வென்றிபெறு கும்பமுனி மேவும் பொதியவரைத்
தென்றலுக்கென் செய்வேனன் சிங்கார வேலவனே.

225. முறுக்கி யெனைப்பார்த்து முனிந்தடையிற் கச்சை
யிறுக்கியடி யெந்தனிரு தனமேற்கைப் போட்டீர்
சுறுக்கையிங்கே காட்டாதீர் தூரகில்லு நானறியாச்
சிறுக்கியென்றோ ஏய்க்கவந்தீர் சிங்கார வேலவனே.

226. தூதெனவே கண்ணுத் துவண்டசிறைக் கோலமுமென்
மாதரசி போலவரு மாடப் புருவின்மேல்
சீதரனே ராகுமனத் தேவராகு நாதனுக்கென்
பேதைமதி யால்விளைத்த பெண்பழிபோ காதெனுமோ !

227. ஆரால் வருகுமென்றல் குவைத்துப் பார்த்திருந்து
வாரா தயருமெந்தன் மாதை நிகர்க்குங்கிர்
சீராம ஞகுமந்தத் தேவராகு நாதனுக்கென்
பேராசை மாற்றிடந்தப் பெண்பழிபோ காதெனுமோ.

(அம்மானை)

228. மட்டுமாக் குழல் வஞ்சி மனமகிழக்
கட்டுமா வொன்றுனது கச்சியிலே யம்மானை
கட்டுமா வொன்றுனது கச்சியிலே யாமாகில்
இட்டமாங் கனிகாய்ப்ப தில்லையோ வம்மானை
இல்லாமற் கல்லா லெறிவா ரம்மானை.

229. அறத்தமகன் றிருச்செந்தூர் ரமர்ந்தவடி வேலவன்ருன்
குறத்தியெனும் வள்ளிதனைக் கொண்டான்கா ணம்மானை
குறத்தியெனும் வள்ளிதனைக் கொண்டானே யாமாகிற்
றிறத்துடனே பூனைகுத்தித் தின்பனோ வம்மானை
தின்ருன்காண் பூனைகுத்தித் தினைமாவி லம்மானை.

230. அத்தியு ரிதரித்த வாலங்காட் டப்பருக்கு
நெற்றிக்கண் ணென்று நெருப்புகா ணம்மானை
நெற்றிக்கண் ணென்று நெருப்புகா ணுமாகில்
பத்தியருஞ் சடையி லிராதோ வம்மானை
படருமென்றே கங்கை பதுவிருந்தா ளம்மானை.

231. பூங்காவ னஞ்சூழும் புள்ளிருக்கும் வேலூரான்
பாங்கான தென்மதுரைப் பாணனேகா ணம்மானை
பாங்கான தென்மதுரைப் பாணனே யாமாகிற்
ருங்கா திழையெடுத்துத் தைப்பானோ வம்மானை
தையலுக்கு நல்ல சமர்த்தன்கா ணம்மானை.

232. எண்ணரிய கச்சியிலே வம்......ம்பரக்கடல்
அண்ணன் றிருமேனி தானுகாச மம்மானை
அண்ணன் றிருமேனி தானுகாச மாமாகில்
வண்ண முலையாலே வடுப்படுமோ வம்மானை
மாவடியில் வாழ்வார்க்கு .........தோவம்மானை.

233. மாவுறங்கின புள்ளுறங்கின வண்டுறங்கின தண்டலைக்
காவுறங்கின வேந்தன் மானிரு கண்ணுறங்கிலன் [கையணைக்
கோவுறங்கு கடைத்தலைக் குலதீப வள்ளைத் தட்டிதின்
ருவுறங்குபு காரஞ்சல் அஞ்சலென்ன வடுக்குதே.

வெண்பா

234. வாக்குக் கருணகிரி வாதவூ ரர்கனிவு
தாக்குக்கு மெஞ்ஞான சம்பந்தர்—போக்குக்கு
நக்கீரர் நாக்கு நயத்துக்குச் சுந்தரராம்
சொற்குறுதி யப்பரெனச் சொல்.

235. நேசரைக்கா ணுவிடத்தில் நெஞ்சாரத் தோத்திரஞ்செய்
யாசானு மப்படியே யனுதினமும்—வாச
மலையாளைப் பஞ்சணையில் மைந்தரைத்தன் னெஞ்சில்
வினையோரை வேலைமுடி வில்.

236. சங்குக்குச் சங்கிட்டாள் தாமரைக்குத் தாளிட்டாள்
கொங்கைக்கு வடங்கோர்த் திட்டாள்—தங்க
தமரிட்ட முத்தும் தமரிடா முத்தும்
எவரிட்டார் மங்கைக் கிசைந்து.

237. கனிவந்த சொல்லியர் வேள்கரு மாணிக்கன் கப்பை [வெற்பிற்
றனிவந்தன மொருவேட்டை யென்ருன் பின்பு தந்தி [யென்ருன்
முனிவந்த கோட்டுக் கலையதென்ருன் பின்முயல தென்ரு
னினிவந்து சிற்றெறும் பாணுலுமாமிவ னெய்ததுவே.

வெண்பா

238. ஆடெடுத்த கள்ளன் வரத்தாண் டவலை
மாடெடுத்துப் போகுதென்ன மாயமோ—தேடெடுத்த
தேனத்தார் போற்றுகின்ற தில்லைச் சிதம்பரைக்
கானத்தார் பார்த்திருக்கத் தான்.

239. வண்டேநீ சொல்லுவாய் செஞ்சொன் மலைமருந்தைக்
கண்டேயென் சொல்லினைக் கஞ்சொல்லித்—திண்டோள்
கல்லணிதா மஞ்செங்கா ரங்கொண்டு வைகாமல் [பொற்
வல்லைகளி னெஞ்சின் வா.

240. மாலடிசூ டுந்தலையு மண்ணிட் டுறுபதமும்
பாலுடைய காயொடரிபண் பாடுதலும்—நீடுலகில்
வேதமுதன் முத்தீசர் மேவுகச்சி நன்னாட்டில்
தாதனூர் தென்னமரந் தான்.

241. என்று வடியுமெனக் கீசன் திருமுடிமேற்
சென்று குடியிருந் திங்களே—யென்று
செருப்புக்குத் தோல்வாங்கும் சென்னியர் களங்கன்
பொருப்புக்குத் தோலாப் புயம்.

242. நீல மழைமுகிலோ நீலமணிக் குன்றமோ
கோல நிறைந்த குரைகடலோ—சோலையிளங்
காயா வனமோ கழுநீரோ கண்ணமங்கை
மாயா வுனது வடிவு.

243. நச்சம்போ வேலோ நகைத்துப் புரமெரித்த
தச்சம்போ வென்னென்று சாற்றுவோ—மச்சுதர்
வாவிசோ லைக்கரையில் வந்துநீ ராடுசந்திர
காவிசே லைக்காரிக் கண்.

244. கரியை யுரித்தீர் காமனைக்கண் ணாலெரித்தீர்
நரியைப் பரியாய் நடத்தீர்—விரிசடையீர்
துண்டமதி யைச்சிரத்தில் சூட்டினீர் விலைகடைந்
துண்டநஞ் சைப்போன்ற தும்.

245. வடுவிலாப் புன்கிரிவாழ் சோமனைக் கொன்ற
நடுவிலாப் பாவி நமனே—கெடுவாய்
கரப்பாரைக் கொல்லாமற் கையேத்து நித்த
மிரப்பாரை யேன்கொடுத்தா யின்று.

246. மலைதகர்ந்து போமே வற்றுமே கெங்கை
யிலைத்திரோ நோடி யொளிப்பனே—யுலகிலுள்ள
மன்னர் மடவரே மந்திரிமார் சாவரே
உன்னியொரு ஞானியுள தா கில்.

247. காதல் கவருடல் கள்ளுண்டல் பொய்மொழிதல்
ஈதல் மறுத்த லிவையைந்து—போதிற்
சினையாமை வைகுந் திருநாடா செம்மை
நினையாமை பூண்டார் நெறி.

248. கொற்கையான் மாறன் குலசே கரப்பெருமாள்
பொற்கையா னைகதை போதாதோ—நற்கமல

மன்றலே வாரி மணிவாசலை யசைக்குந்
தென்றலே யேன்வந்தாய் செப்பு.

249. மாட்டிடையன் றங்கை வல்லக்காட் டுத்தில்லை
யாட்டிடைய னுக்குப்பெண் டானத்தைக்—கேட்டீரோ
குட்டி மரிக்கவொரு கோட்டானைப் பெற்றெடுத்தாள்
கட்டழகி காமாட்சி காண்.

250. நீறுவாய் நெற்றி நெருப்பாவா யங்கம்இரு
கூறு வாயெங்குங் கொளுத்துவாய்—மாறுத
நட்டமாய்ச் சோறு நஞ்சாவாய் நாயேனை
யிட்டமாய்க் காப்பா யினி.

251. மிக்கபுகழ் கொக்கின் மீதேறிக் குயில்கூவுந்
திக்குபுகழ் நேமத்துத் தென்புறத்துக்—கப்புறத்துக்
கானுமைந்து கூடைகட்டக் கட்டுக்கொ டியறுக்குங்
கூன்குறத்தி கூழ்கொண்டு வா.

சொக்கேசர்மீது பாடியது

வெண்பா

252. மைக்கார் முகில்மதில்சூழ் மாமதுரைச் சொக்கேச
ரெக்காற்செய் திருவிளையாட் டென்னக் கேள்—மிக்கோ
அக்கெலும்பு மாடரவு மழகுபெறத் தானணிந்தே [ரே!
யக்காளை யேறினும்.

253. மாண்டவுரு வேயென் வறுமையைநீ கைக்கொண்டு
ஆண்டவுருத் தாவென்றால் வாய்திறவாய்—மாண்டதிலு
மில்லாம லேத்த விழுக்கன்றோ வாய்திறந்து
சொல்லாமற் போதற்றுணிவு.

254. மண்பட்டுமோ வெய்யிலிலே வாடுமோ புல்லர்
கண்படுமோ மேனி கசங்குமோ—விண்பரவி
மெச்சியப்பா லும்புகழும் வீறுபுக முடைய
கச்சியப்ப னைப் படைத்தக் கால்.

கள்ளர்கை நன்னூல்

வெண்பா

255. கவ்டிகளா கத்திரியுங் கள்ளர்கை நன்னூற்
சுவடியிருந் தாவதென்ன சொல்லீர்—குவலயத்திற்
காட்டிற் கெரிந்தநிலாக் கண்ணிரண்டு மில்லாதான்
வீட்டிற் கெரிந்த விளக்கு.

256. கோடுபுலா லம்புரியர் கொம்பனைசை சேரவென்றால்
மாடுதின்னி நம்மைமறுத் தாரோ—மாடுதின்னி
தன்பொழுதும் போச்சே தையலரைச் சேராம
லென்பொழுதும் போச்சே யிருந்து.

தலைவனையடைந்ததலைவி காமனை விளித்துக்கூறியது

257. எய்யவரு காமா ! வுனக்கிங் கிடமில்லை
யுய்யவந் தானோ டுறவானேம்—பையநட
தேரைவிடு பூவைமுடத் தின்றுவிடு கைக்கரும்பை
மீனையொரு காச்ச வில்.

258. குரும்புமுது புண்ணுக்கு மருந்தைக் கோன்குற்
றிரும்பவருந் தீராப் பழிகள்—வரும்பழியைத்
தீரவருள் செய்கின்ற செல்வனரு ணசலத்தைச்
சேரமனம் வைக்கநீ செப்பு.

259. கப்பணந் தந்தான் குடந்தை காவலான்
உப்பணந் தந்தான் உறையூரான்—முப்பணமும்
வப்பணமாய் மாறிவயிற் றுக்கிரை வைத்தே
னப்பணம்போ லாகவ் வா.

260. தாயிலாப் பிள்ளையைப்போற் குரணியி லேதவிக்க
வேயீன்ற முத்தரையென் வெட்டிநான்—பேயர்களே !
யெத்தனைநா ளானு லிடையன்பா லைக்கவிழ்த்தா
லத்தனையும் வேனு மவர்க்கு.

261. குருவார் சிலபே ரிருப்பார் பலபேர்
கெடுவாய் நமனே கெடுவாய்—படுபாவி
கூவத்து நாரணனைக் கொன்றாயே கற்பகப்பூங்
காவைவெட்ட லாமோ கழிக்கு.

களம்பாடியது

262. அய்யன் அகளங்கற் காற்று தடல்வேந்தர்
கையுந் தலையுங் கவராதே—யுய்ய
வணங்கினமை யாலெமக்கு வாய்த்ததே யென்று
பிணங்காத் தெத்துண்ட பேய்.

தலைவி தோழியரைப் பார்த்துக் கூறியது

263. கண்டான் கரிகாலன் காவிரிசூழ் நாடெல்லாம்
வண்டுங் கரும்பு மலருமே—யொண்டொடிக்கைப்

பூவையரே! மாறற்குப் போய்த்தேட வேணுமோ
பாவையர்மே லேவும் படை.

264. திரையின் முறையுணர்ந்து தெவ்வரெலா மீண்டிவ்
விரையின் முறைக்கடக்கலாகா—வரைகமழற்காற்
போர் வேந்தர் போர்மாளப் போர்வா ருரைகளித்த
தேர்வேந்தன் றஞ்சைத் தெரு.

விநாயகர் வணக்கம்

வெண்பா

265. ஆதிபக வன்றருளு மைங்கரன் கணேசரையே
நீதிதவ றுதுகித முக்கால்—லியாதிபெறச்
சுத்திக்கைக் கூப்பித் தொழுவார் சுகம்பெறுவார்
பத்திக்குத் தக்க பலன்.

குன்றக்குடி முருகவேள் வணக்கம்

எழுசீர் விருத்தம்

266. அக்கினிச் சுவாலை யாக வர்யெரிந்தா
லாற்றுவ தெச்சலத் தாலே
கைக்கினி தான கந்தனே வுந்தன்
கருணைநற் கடலது வதனுல்
முக்கியந் தீரு மலாதுவேர் மருந்தால்
முடியுமோ முடிந்திடா வதனுல்
உக்கிய வுடலை யொழித்துயி ருன்பால்
ஒடுங்குமுன் னுணவுதந் தாட்டே.

[இதுவுமது]

267. எத்தனை கோடி தனங்கள் தானியங்க
ளிருந்தென்ன யெடுத்தருந் தாது
கைத்தலத் தமர்ந்த நெல்லியங் கனிபோல்
கண்டுகொள் கவலைநீங் கலைதேய்
பைத்தலை நாகத் தணைமிசை துயிலும்
பச்சைமால் மருகன் கண்பார்க்கில்
யித்தனை யலாது யெளியன்செய் பிழைதா
னென்னமோ யின்னல்தீர்ந் திடுமே.

[இதுவுமது]

268. காலையிலு மாலையிலு முச்சிப் போதுங்
கந்த ரென்றே கைகுவிப்பேன் கனிந்துபாடி
ஓலையிலு மெழுதிவைத்தேன் உமக்கென் மேலே
உண்மை யுண்டோ? இல்லையோ யுரையுமையா?

வேலையிலுந் துயிலையிலுந் நின்நா மத்தை
விளம்பிடுவே னல்லாது வெறுப்ப துண்டோ?
ஆலையிலு மிடுங்கரும்பாய் ஆக்கி விட்டால்
ஆர்காப்பா ரிவ்வுயிரை யந்தோ! யந்தோ!

[இதுவுமது]

அறுசீர் விருத்தம்

269. இதமிதஞ் சொல்லச் சொல்ல
நின்மன திரும்போ! கல்லோ!
விதவித மாவொன் றொன்றாய்
விளைகின்ற வியாதி நீக்கி
யிதபத வரிசை தோன்ற
வெளியனுக் குணவை யீய்வை
சதவிதந் துதிப்பேன் பாவால்
சண்முகத் தம்பிரானே.

[இதுவுமது]

எழுசீர் விருத்தம்

270. வயிறதில் வலியு மலசலக் கட்டும்
மன்னி யிடுப்பினிற் கடுப்பும்
யுயிரதி லிருந்து பசிப்பிணி தாங்கா
துழலுது மண்டையி னீரும்
பயிரது செழிக்கப் பாய்செலு மதுபோல்
பண்ணுது மூக்கிரு கண்ணும்
தைரிய மாக யிவையெலா நீக்குஞ்
சண்முகத் தயாநிதி தானே.

நேரிசை வெண்பா

271. தெண்டபா ணித்துறைமால் செப்பினே னென்பிராதைக்
கண்டறுப்போம் நீயுங் கவலைகொள்ளேல்—தொண்டனே
யென்று ரதுசரியென் றெண்ணி யிருக்கின்றேன்
நன்றாய்கண் டிப்பறிந்த நாள்.

272. அன்னை தந்தை சற்குரு தெய்வமது வுமாறுமுகன்
தன்னைநம்பித் தானடிமை தானிருக்க—முன்னைவினை
தன்னால் வரும்பிணியோ தற்காலத் தின்பிணியோ
உன்னாலாம் நண்ணா துறை.

273. ஆறுபடை வீட்டி லமர்ந்தாய் அதுவன்றி
மாறுபடா தன்பர் மனத்திருப்பாய்—நீறுபுனைந்
தேற்றிப் பணிவேனை யிப்பிணிவா திப்பதுண்டோ.
மாற்றிவிடச் சீக்கிரத்தில் வா.

### அறுசீர் விருத்தம்

274. வாய்வெளி யலாது மறுவழி செலுத்த
வாய்க்குமோ வயறது வளர்க்க
நாயினுங் கடையேன் படுந்துயர் மெத்த
நம்பினேன் நம்பினேன் நாதா
தாயினுந் துணையே சண்முகத் தரசே
தவிக்கின்றேன் தானுண வருந்த
காயிதே நெருப்பாய் உரிசைதோற் றலேயே
கந்தமா மணிஉரைக் கருதே.

### எழுசீர் விருத்தம்

275. உணவதைக் கொடுத்தா லுலகத்தி லிருந்தது
முமக்கதே யரியது வானல்
பிணமதாய்க் கிடத்து முடலினை யுயிரைப்
பேரருட் டிருகழல் பிணையாய்த்
துணையெனக் கார்ப்பீர் தொழுமடி யேனைத்
தோகைமா மயில்மிசை தோன்று
மிணையிலாப் பொருளே யேழையிங் காளா
யெங்தையே கந்தனே யின்றே.

### தன்குறை சாற்றல்

276. நெஞ்செறிவைத் தீரு நெடுமால் திருமருகா
பஞ்சையுமக் கெதிரோ பக்தசன ரெட்சகரே!
ஆறு தலத்து மடியார்கள் தன்விடத்தும்
ஏறுமயில் வாகனத்து மெங்குநிறை வேலிடத்தும்;
அன்புவைத்த தென்பழனி ஆண்டவனே னென்பன்
என்புதசை வற்றியினைத் தமைநீர் கண்டிருந்தும்;
வாய்வயிறு வெந்ததுடன் வாயுவும்வா திக்குதையோ
தாயில்லாச் சேய்போலத் தவித்திடவும் நீதியுண்டோ!
உன்னடைக் கலமென் றுரைப்பேனைக் கைவிட்டால்
பின்னையெவர் காப்பார்சொல் பேராங் குணக்கடலே!
இச்சீவன் றிரேகத் திருக்கும் வரையேனும்
உச்சிதமா யுண்டிருக்க உன்கிருபை செய்யாயோ!

அஞ்சுதே யென்செய்வேன் யாவர் துணைசெய்வார்
நெஞ்சிற் கவலை நினைவுதடு மாற்றமெல்லாம்
பஞ்சையெனக் குண்டானால் பாரிற் சகிப்பேனோ!
கொஞ்சநாள் தானே குவலயத்தி லென்வாழ்க்கை
உப்புபுளி மிளகா யொன்றும்உத வாவிட்டால்
எப்படிக்கு யான்பொசிப்ப தெந்தாய் முருகையா
மண்டும்பெல மிகுத்த மாசூரரை வைவேலால்
துண்டுதுண் டாக்குந் துரையே! யின்று;
பன்னி ரண்டு கண்ணாலும் பார்த்தால்......
சென்னி யோரா றுடைய செல்வனே!
ஏழை யழுதசத்த மேருதென் காலமோ!
வாளைவென்ற கண்ணிகுற வள்ளிக் கிசைந்தோனே
உள்ளிருந்த யென் துயர மெல்லா முரைத்துவிட்டேன்
கள்ளிருக்குங் கூந்தல்தெய் வக்கன்னி மணவாளா!
ஆராத துயரமதை யாரிடத்தி லேஉரைப்பேன்
நேராக வாராயோ நெஞ்சிரங்கிப் பாராயோ!
தீராயோ! என்கவலை தீர்க்கமுடி யாவிட்டால்
தாராய் சீக்கிரத்தில் தன்றுள் நிழலெனக்கே;
ஆதிசிவன் கண்ணிலிருந் தாறுபொறி யாகவந்தோய்!
நீதிச் சரவணத்தில் நேர்ந்தாய் குருவானோய்!
சத்தியெந்தன் அன்னைகரந் தன்னா லெடுத்தணைக்கும்
அத்தினமே ஆறுசிரமு மங்கை பனிரண்டாகப்
பன்னிரண்டு கண்ணுடையாய் பன்னிரண்டு காதுடையாய்
சென்னியோ ஒன்றுடையேன் செப்புமொழி கேளாதென்
தாமுகா சூரனைத்தான் சங்கரித் தானிலையோ?
தாருமாறாய்க் கிரவுஞ்சந் தன்னைத் தகர்க்கலையோ?
மாபெலசூ ரன்தன்னை வதைத்துமலை யாக்கலையோ?
காவென் றிடுஞ்சயிந்தன் கால்தளையை நீக்கலையோ?
இந்தக்கலி காலத் தெவர்கண்ணா லுங்காண
அந்தமுள்ள சேவலதை யறுத்துச் செய்கறியை!
சன்னிதியில் வைத்தவிழ்க்கச் சடுதியிலே முன்னுருவாய்
இன்னிலத்தார் காண வெழுந்ததுவுங் கூவலையோ!
பாம்பென்றால் மேலாம் படைபயந்து ஓடுமதைக்
காம்பிரமாய்ப் பிடித்துக் கண்டதுண்ட மாய்நறுக்கி;
அதையுஞ் சமைத்தய்யன் ஆலயத்தில் வைத்தவிழ்க்கப்
பதையாதவை யுயிராய்ப் படமெடுத்து ஆடலையோ!
புளியமரத்தைவெட்டிப் போட்டெரித்த செந்தழலில்
ஒளியாலுங் காணஅதி லோடிவிளை யாடலையோ!
எல்லாம் வல்ல சித்த ரென்ற தெனதையன்

நல்லா யுமைத் துதித்தும் நான் பிணிக்கு ளாவேனே !
பட்டதுயர் போதும் படமுடியா தென்னாலே
இட்டமுடை யதெல்லா மின்னா ளனுபவித்தேன் ;
துட்டனே நல்லவனே துய்யவுல கமுரைக்கும்
கட்டமதைத் திருமய்யா கந்தகரு ணாகரனே !
இருந்த விடம்விட்டு யெழுந்திருக்க யோசனைதான்
திருந்த வொரு வேலைசெய்யத் திரேகவலு வுமிலையே !
நடக்கக்காலோய்ந்திடுதே நானெப்ப டித்திரிவேன் ?
அடக்கமு டியவில்லை ஆறுமுக யானுரைத்தேன் ;
இரக்க முமக் கென்றுமோ இவ்வாதை யுந்தீர
சிரக்கக்க னவில்வந்து செப்பவுந்தான் கூடிடுதோ !
பறக்குமயி லேறிவந்து பார்த்தா லிவைபறக்கும்.
இறக்கும் பொழுதிலரு ளீய்ந்தாற் பலனுளதோ !
இன்னஞ் சிலநா ளிருக்க விடமிருந்தால்
முன்னம்வா சீக்கிரத்தில் முத்தையாசித் தம்வைத்து ;
அல்லலிது தாங்காதென் றப்பனே நீரறிவீர் !
நல்லவிரு கழலை நாயேற்கு நல்குமையா !

வெண்பா

277. மாறியினிச் செனனம் வந்தாலும் நானடிமை
மாறியுமக் கேசெய மன்னிப்பீர் !—கூறினேன்
கைவிட்டி டாதீர் ! கடக்கப்போய் நில்லாதீர் !
மெய்விட்டுச் சீவன் விடில்.

விருத்தம்

278. ஆனாலும் கந்த ரடிமையெனப் பேரெடுத்தேன்
போனாலும் சீவனுமை போற்றும் படியருள்வீர் !
சத்திவடி வேல்பிடித்த சண்முக சடாட்சரனே !
முத்தி கொடுப்பவனே மூவுலகுங் காப்பவனே !
அத்திமுகற் கிளைய ஆண்டவனே ! யாறுமுகா !
சத்திதந்த செல்வமே! சண்டன் அணுகாமல் ;
எப்போதுங் காணியெனக் கீய்வ திருகழலே.
எப்போதே யப்போ தெதிரென்று கொள்வீரே !

கட்டளைக்கலித்துறை

279. கொள்வீர் குமர குருபரனே ! யென்ன குறைசெயினுந்
தள்வீரென் றெண்ணந் தரித்திரா தேதுமிலேன் தான
[றிவீர்

உள்வெளிக் காயினுமோர் குறை செய்திலன் உண்மையிது
கள்முத லாம்பஞ்ச பாதகஞ் செய்திலன் கந்தையனே !

[இதுவுமது]

280. கந்தகிரு பாகர ! கண்மணியே ! எந்தன் காலமெல்லாம்
உந்தமை நம்பிக் களித்ததல் லால்பின்னை யொன்றறியேன்
செந்திரு மாலின் மருகா முருகா சித்தம் நீவைத்து
வந்தருள் செந்திற் பதியாயென் தீவினை மாறுதற்கே.

[இதுவுமது]

281. எத்தனை செல்வம் இருந்தா லுங்கைவிட் டிறப்பதல்லால்
அத்தனை யும்பின் றுடர்வதுண் டோவல்ல வென்றறிந்தும்
சித்தனை தென்பழனித் தெண்ட பாணியைச் சிந்திக்கிலேன்
பத்தனை தன்னையப் பாதார விந்தத்திற் பாலிக்குமே.

[இதுவுமது]

282. கரந்துகொண் டிருந்த மாடு கன்றுக்கும் பால் கொடாமல்
இரந்தவர்க் கியா லோபி யினங்கள்போ லாவதென்ன
வரந்ததென் சினையா அல்ல வன்னெஞ்சா வடிவேற்கையா
தரந்தெரிந் தில்லேன் காணத் தக்கவாறருள் செய்வீரே !

[இதுவுமது]

அறுசீர்விருத்தம்

283. பணத்தையீய்ந் தம்பை வாங்கிப்
பாழிலே யெய்தால் போலக்
குணத்தை யானறிந்து மில்லேன்
குபீரென்ன வற்றிப் போமோ
கணத்தை யேபடையாக் கொண்டே
கந்தனே கருணை வாழ்வே
பிணத்தை யேகட்டிக் கொண்ட
பித்தர்போல் பிதற்றி னேனே.

[இதுவுமது]

பால்வேண்டிப் பாடியது

284. பாலது கொடுக்கக் கிருபை
பாலிக்க வேணும் பக்தன்
மேலது இளைத்தல் கண்டீர் !
மிகுதியாய் அன்பு வைத்துக்

காலது கடுப்பும் வெப்புங்
காணுது போகச் செய்தீர் !
மாலது அதிக முற்றேன்
மறக்கிலேன் யிறக்கு மட்டும்.

[இதுவுமது]

285. மாறியும் செனனம் வந்தால்
மாறுமோ உந்தன் வாஞ்சை
ஏறிமென் மேல தாக
வேழையான் எண்ணு வேறே !
தேறியிச் சென்மந் தன்னில்
தெரியுமோ தெரிந்திடாதோ
கூறினேன் குன்று தோறுங்
குலாவிய குமர வேளே !

[இதுவுமது]

வைக்கோல் வரப்பாடியது

286. பசுவினைச் சினைய தாகப்
பார்த்திடப் பண்ணி வைத்தீர் !
குசுகுசுப் பென்ற பேச்சேன்
குருபர குமரா வைக்கோல்
நசுபிசு வென்று பேசி
நான் பத்து ரூபா ஈய்ந்தேன்
இசுவையா யிருக்கு தையா
இச்சணம் வரச்செய் வீரே !

[உடனே வைக்கோல் வண்டியில் வந்தது]

எழுசீர் விருத்தம்

287. ஏழையேன் சித்தம் நோக
எதுவந்து நேர்ந்திட் டாலும்
நாளையென் றிருக்கேன் உன்பால்
நவிலுவேன் வேத நாதா
வாளைவென் றிட்ட கண்ணாள்
வள்ளிதெய் வானை வாழ்வே !
தாளையே பிணையாய்க் கொண்டேன்
சண்முகத் தம்பி ரானே !

[இதுவுமது]

### எழுசீர் விருத்தம்

288. எத்தனை சென்ன மெடுப்பினு நின்னை
யிதையத்தி லெண்ணியே யிருக்கச்
சித்தனே பழனித் தெண்ட பாணியே!
செய்திட வேண்டும்நின் அன்பன்
பித்தனைப் போலப் பிதற்றினே னெனது
பிழைகளை பேரருட் கடல்நீர்!
முத்தனே! சூரன் முடிதடிந் திட்ட
மூர்த்தியே! முக்கணர் சுதனே!

### கலிப்பா

289. எடுத்திடுஞ் சீவ னிறந்திடு மேனுந்
தடுத்திடு மறலி தானணு காமல்
அடுத்திடுங் குன்றைக் கரசனே! பாதங்
கொடுத்திடு மென்றே கூறின துளமே.

### வெண்பா.

290. பைத்தியங் கொண்டாய் மனம்போல் பண்ணிவைத்தா—[யென்னைச்
சயித்திருக்கப் போமோ? சகியேன்—செய்திங்நோய்
தீர்த்தா லுலகில் திரியவைப்பாய் தீராட்டால்
சேர்த்தால்நின் ருள்நிழலாச் சே.

[இதுவுமது]

291. முருகையா நின்பால் மொழிந்ததெல் லாம்வீணு
அருகை யாயென் றழைப்பாய்—இருகையால்
வந்தனம்செய் தேன தற்கு வந்தனம்பா லித்தீர்!
வந்தனமென் றேன்காரும் வா!

[இதுவுமது]

292. காரும்வா வென்றேன் கருணு கரக்கடலை
தீரும்வா வென்றேனென் தீவினையைப்—பாரும்வா
இந்த வருத்தமெவர் படுவ ரிவ்வுலகில்
கந்தாவந் தாதரிகு கா,

[இதுவுமது]

அறுசீர் விருத்தம்

293. ஏழைக் கிரங்காத தெய்வ
மெங்கெங்கு மில்லை யில்லை
நாளைக்குக் காப்ப தென்றால்
நாளோ நமன்றன் நாளோ
வேளைக்கு உதவாச் செல்வம்
வேணது இருந்தால் போல்நின்
நாளைக்கண் டிறைஞ்சு மன்பன்
தன்குறை தவிர்த்தி டாயே

அறுசீர் விருத்தம்

294. பழையபடி மேனிவற்றிச் சுருங்கிப் போச்சே
பன்னிரண்டு வீஷணத்தாற் பாரும் பாரும்
சளையாது வேழையெந்தன் மனநோ காமல்
சண்முகா இதுசமையஞ் சவூரிய மாக
அழையாமல் வந்தவிருந் தாகத் தானே
அப்பனே அடியன்முன் வந்தருளைத்தா! தா!
களையாமல் களைக்கு துள்ளங் கைவிடாதீர்!
கற்பகமே! யற்புதமே! கருணை வாழ்வே!

[இதுவுமது]

அறுசீர் விருத்தம்

295. உண்பாரைப் பார்த்துச் சும்மா
வுடனிருந் தெழுந்தேன்
கண்பாரும் பழனி வாழுங்
கடவுள்நின் கைவே லாலே
பண்பாருங் கடலுங் குன்றும்
பகர்சூரன் கிளையுங் கொன்று
திண்பா ரின்னேய் மேலோ
தெரிகிலேன் திறலவை வேந்தே.

[இதுவுமது]

296. இம்மா நிலத்தில் சும்மாதா
னிருக்க வைத்தா யென்தேவே!
செம்மான் மகளைப் புணர்வேளே!
சிறியேன் துன்பம் தீராயோ!

பெம்மான் சிவனார் தருஞ்சேயே!
பெருமாள் தனக்கு மருகோனே!
தம்மான் முடிக்குஞ் செயலுள்ளதோ
தருணம் நிதிநீ தந்தருளே!

சந்தம்

297. காலந் தெரிந்து மிந்தக்
கோலஞ் செய்கிறார் குன்றைக்
காவல னான கந்தனே—யிந்த
ஞாலம் புகழு மரன் பாலாறு முக
வேலன் சூரனை வென்ற
கால னென துடைய—(காலந்)
ஆலத்தை முன்னாளில் அண்ட ருய்யவு முண்டார்
அதைக்கண் டுமடி யேற்கு
அனுக்கிரக மென்ன விண்டா (காலந்)
வாலதெண் டாயுத பாணி
யென்று யனுதினமும் வாயாரத்
துதிக்கின்ற மாபத்தன் எனக்கண்டும் (காலந்)
கையில் காசில்லாது கலங்கி வருந்தவிட்டுக்
கடைப டாதிவனாலென்
றெண்ணிப் பொருளை யீய்ந்து (காலந்
மெய்யில் வருத்தம் வைத்து
விரைவிற் செல வழித்து
விடுவ தென்னபரி யாசமோ வெந்தன். (காலந்)
முற்றும்

தவம்

சந்தவிருத்தம்

298. மாடுபுற் றின்றி றந்தாலும் முத்தியோ?
மரமட்டை தின்றுழலுவீர்!
மண்டூக மீனமை ச[illegible]மூழ்கில் முத்தியோ?
வருந்தியே சலமூழ்குவீர்!
ஆடுதழை சருகுதின் றிறந்தாலு முத்தியோ?
அடவியிற் சருகுதின்பீர்!
அண்ணர்க ளிறந்தாலு முத்தியுண் டாகுமோ?
அவர்வர்கள் சன்னசமே

*வீடுதனில் மூசிகம் வங்கிலுறையில் முத்தியோ?*
*வீணிலே குகையி லுறைகுவீர்!*
*மென்குழவி பால்குடித் திறந்தாலு முத்தியோ?*
*விரும்பியே பாலுண்ணுவீர்?*
*ஊடுவழி யூடுருவி நாடிவழி யூடே*
*யுள்ளொழுகி மண்டி யுயிர்போய்*
*உறையும்வகை யறியாம லுழலுமவ ருபதேசம்*
*உண்மையிது காண் ஒக்குமே*

**தலைவனைப்பிரிந்த தலைவி மயிலன்னம் முதலியவைகளைப் பார்த்து இரங்கல்**

**எண்சீராசிரிய விருத்தம்**

299. *அற்கோ தையங்கண்ட வரவிந்த வதனன்*
*அனகன் பனைந்தாமன் அருளாளன் வரைசூழ்*
*கொற்கோ கிலங்காள் துலங்கோ திமங்காள்*
*தோகைக் குலங்காள் சுகங்காள் மிருகங்காள்*
*கற்கோ டிகொண்டுங் கணைத்தான் எறிந்தே*
*கதிரார் தினைக்கொல்லை காத்தார் பிரிந்தார்*
*தெற்கோ வடக்கோ குடக்கோ குணக்கோ!*
*சென்றார் நமக்கின்று நின்றோது வீரே*

**தோழி கூற்று**

**வெண்பா**

300. *கடத்தடக்கை கோட்டுக் கத்ததந்தி செற்ற*
*திடத்தடக்கைக் கோத்திரத்தை செப்பா—தடற்பிடிக்குப்*
*பிச்சித் தொடைசூட்டிப் பெற்றதே தப்பேதைக்*
*கிச்சைத் தொடைகொடா தே.*

**தலைவியின் பிரிவாற்றுமையைத் தோழி தலைவனுக்குக் கூறல்**

**வெண்பா**

301. *வேள்வீர வாழியோ வீயா வயலீர்!*
*வாள்வீர வேல்விழியோ வாழ்வ—ளாள் வாரே*
*யல்லோ வொழியா யழியா வுயிரிழவா*
*வல்லே வருவீர் வரில்.*

**தலைவி கூற்று**

**வெண்பா**

302. *நின்னைநினை மேன்மைநீ நானெனு மேன்மை*
*மன்னு மனனே மன்னுமே—முன்னமன*

மேனமானே நினை மெஞ்ஞான மஞ்ஞான
மோனமா ஞான முனி.

### தோழி கூற்று
### வெண்பா

303. சீர்மன் னுவீரா! திறனமாறு சீருறுகண்
ணார்முலை கண்டாழ மன்றியே—சீருறு
மார்சீரு முன்னி வரநினைதல் காரணத்தம்
பார்சீ குழன்வென்ற தால்

### வெண்பா

304. குடந்தை குருகூர் குறுங்கை யன்பிலாள்
இடந்திகழ் புல்லா ணிறைக்கூர்—மடம்பூண்
டறநின்ற கஞ்சவனந் தேவி வாணிக்
கிறைநூல்மா கீரஞ்சூழ் சேமா.

### தலைவிகூற்று
### கொச்சகக் கலிப்பா

305. மானே கிளியே மயிலே குயிலே வரிவண்டே!
கானே சுனையே கழையே வுழையே கான்யாறே
யானே றுடையான் பாதங்களிற்சென் றடையார்போல்
ஊனே வருமே யுயிரோ வெனுமெய் யுய்யாவே

### சந்தவிருத்தம்

306. உத்தமன் முத்தா னத்தினி டத்தோ
ருற்பவ மற்றோ ருயர்மாதை
வித்தக னெத்தா னத்திலும் நிற்போன்
வெற்பு நெறிக்கே மீள்வானே!
சித்திர முலைக்கே முத்து நகைக்கே
செற்றி தழற்கே திருவானப்
பத்தி விழிக்கே நெய்த்தக விற்கே
மட்ட நுதற்கே பட்டோனே.

### தலைவனையடைந்தத் தலைவி கூறுங்கூற்று
### விருத்தம்

307. கண்ணனார்தே டண்ணலாரென்
கண்ணினுள்ளார் மண்ணிலுள்ளா
ருண்ணிலாதா மாதை மூதா
ரோதிமங்காள் சாதகங்காள்

வண்ணனீலம் வாவியெல்லாம்
அலையுமாரங் கடலுமாரந்
தண்ணிலாவே வெண்ணிலாவே
தனியிராவே யினியிராவே.

## எல்லாம் விதிவழிநடத்தல்

### வெண்பா

308. இன்னானை இன்னாளில் இன்னபடி யென்றெழுதி
முன்னா ளமைத்தவன் மூடனோ—வன்னேகேள் !
பேறின்மை யின்பம் பிணிமூப்புச் சாக்காடு
வாறுங் கருவி லமைப்பு.

## நெஞ்சை விளித்துக் கூறியது

### வெண்பா

309. ஒன்றுக்குஞ் சஞ்சலிக்க வேண்டா முடையவன்றான்
கன்றுக்குள் விட்டுக் கறவானோ—வென்றைக்கும்
பித்துப்போல் மயங்கிப் பிதற்றாதே பேய்மனமே !
செத்துப்போ னானோ சிவன்.

## விருத்தம்

### இறைத்தன்மை

310. ஈறில் லாதவர் தானு யிருப்பவர்
எப்போது முள்ளவர் எல்லாமறிந்தவர்
மாறில் லாதவர் மாட்சிமை யுள்ளவர்
வளருந் தன்மை சுரூபம தானவர்
பேறில் லாதவர் பேரின்ப முள்ளவர்
பிறந்தி ருக்குஞ் சரீரமில் லாதவர்
ஆறு நாலு லட்சணம் உள்ளவர்
அவரே கருத்தனென் றறிந்துகொள் நெஞ்சமே !

311. இறந்து போஞ்சடல மென்றேயெண் ணாமலே
யின்ப மாய்கையில் வாழ்க்கையைத் தேடியே
மறந்து வேக பராபர சோதியை
மயக்க மான வலைபுகும் மாக்களே !
பிறந்த கோலமும் பின்படுந் துயரமுங்
......கண்டு பேணினர்
சிறந்த மோக்க வீட்டை வீரதின்
திட்டி யாகவுந் தேறுஞ் சனங்களே !

## திருமருகல் முருகன் தோத்திரம்

### கலித்துறை

312. அரைக்குங் கொடும்பிணி யென்செயும்
வேந்தன் அடலென்செயும்
வசைக்குமென் கொடுங்கோ னென்செயும்
பகைவா ளென்செயும்
இசைக்கும் பணிசெய்து நீயே துணை
யென்றுதிக்கிலெட்டுத்
திசைக்குள் புகழ்பெறு தேவா
திருமரி பாலகனே.

## எல்லாம் நீயேயெனல்

313. ஊர்கி ளைஞரும் வேந்தரும் மாந்தரும்
ஓர்பகையாய்
நேரும் பொழுதிலும் நீயே துணையென்று
நெஞ்சில்வைத்தேன்
சாருந் துணையும் என்றாயுமென் றந்தையுஞ்
சற்குருவும்
சேருந் துணைகளும் நீதான்
திருமரி பாலகனே.

## இதற்கிது அழகெனல்

### வெண்பா

314. கண்ணுக் கினிய மணிச்சபைக்குக் கற்றோரே
விண்ணுக் கினியமணி வெய்யோனே—வண்ணநறுஞ்
சந்த முலையாள் சயனத் தினியமணி
மைந்தன் மனைக்கு மணி,

## மங்கையர் காப்பு

### வெண்பா

315. கார்க்குமோ மங்கையரைக் கண்ணீரென் றுந்தூர்ந்துக்
கார்க்கும் அவள்மனமுங் காவலோ—பூக்கெந்தம்
உள்வேலி யிட்டு முடியுமோ கற்பென்னும்
உள்வேலி உள்ளுடைந்தக் கால்

## ஏலேல சிங்கனைப் பாடியது

### கலித்துறை

316. சுற்றங் குலாவும் மறையோ ரிடத்திற்றம் மடியார்
சித்தத் திலும்புக ழுண்ணு மலையர் செழுங்கிரிமேல்
அத்தம் படைத்துக் குடத்தில் வையாம லலைகடலில்
வைத்திங் கிருப்பது ஏலேல சிங்கனு மங்கையுமே.

[நிலவு]

### கட்டளைக் கலித்துறை

317. துள்ள வட்டங் கொண்டதென் மதுராபுரிச் சொக்கர்
[வெற்பிற்
கொள்ள வட்டங் கொண்டகொங்கை நல்லீர்குளிர் கால
[மெல்லாங்
தெள்ள முத்தந் தந்துவனு ராகபோகம் செலுத்தயிலே
வெள்ள வட்டக் கொடைபோ லேநிலவு வெளிப்பட்டதே.

[இதுவுமது]

318. சிட்டாலை ராமன் சிலைரா வணன் தலை சிந்திவிழ
நாட்டாமை யாகக் கணைதொடுப் பாரில்லை யோநடுச்
[சாமத்திலே
கோட்டையுந் தாண்டித் தலையாரி தன்னையும் கொன்று
[சென்று
வீட்டையும் பீறிக் கொண்டந்தர நிலவு புறப்பட்டதே.

[இதுவுமது]

319. எட்டாத கொம்பி லிருக்கின்ற தேனுங் கெட்டியெட்டிக்
கொட்டாவி கொள்ளும் முடவரைப் போலேயிக் குவலை
[யத்தில்
மட்டாரும் பூங்குழலாள் மின்னுளைச் சேர்ந்து மருகையிலே
தட்டானும் செட்டியும் போலே நிலவு தலைப்பட்டதே,

[இதுவுமது]

320. காரையி லேபிறந் தண்ணு மலையரைக் கண்டுவளை
சோரை யிலேகலை சோரையி லேதென்றற் றேய்ந்திளகி
ஊரையி லேமட லூரையிலே யெந்த னுளநிந்து
கூரையி லேபுகுந் துள்ளே நிலவு குதிகொண்டதே.

[இதுவுமது]

321\. தேம்பாளை வீசுஞ் செயதுங்க ராமன் செழுங்கிரிமேல்
பூம்பாளை வீசும் இருள்நீங்கி ஞன்புல் லாதுகொண்டு
காப்பாரை யுந்தப்பிக் கள்ளரைப் போலே கதவிலொன் றித்
தாப்பாளை யுந்தள்ளி உள்ளே நிலவு தலைப்பட்டதே.

[இதுவுமது]

தலைவி அயல்புறத்தாளாகத் தலைவன் வண்டை விளித்துக் கூறல்

322\. சோதி பரந்த சுரும்பினங் காள் அந்தத் தோகையிடை
பாதி மருங்கொடி யாதோ கலவீர் பதிஞலுகண்
வீதி விடங்கர்தென் ஞரூர் இறையவர் மேருவெற்பில்
ஓதி யிருந்து மறிவில்லை யோசொல்லு முங்களுக்கே.

கடுஞ்சுரம் சென்று மீண்ட செவிலித்தாய் கூற்று

323\. கனம்போ லருட்கொடை யான்கருமா ணிக்கன்கப் பல்
[வெற்பில்
அனம்போல் நடச்சியெவ் வாறுசென் ருள்பர பக்கனன்
[ஞல்
தினம்போட் டிரைந்து பரிசுபெருமல் திரும்பினர்தம்
மனம்போ லெரிந்து புகையெழும் பாலை வனந்தனிலே.

நற்ருய், தன் புதல்வனிடத்துக் கூறல்

324\. கொத்தலர் பாய்சதங் கையுந்தண் டையும் கொஞ்சிக்
த்தடி யிட்டுவரும் அய்ய னேதமி ழாகரனைச் [கொஞ்சித்
சித்தச ரூபனைத் தென்னமராயனைத் தேசிகனை
யெத்தி யழைத்து வந்தால் தருவேன் முலை யின்னமுமே.

இராமபத்திரன் மீது பாடியது

325\. செய்யா ருவகை வருராம பத்திரன் செய்கையிலே
மெய்யா யிருகுடம் தனம்வைத்து வாழ்ந்தன ருறுதந்தை
கையா டியதனம் பிள்ளை பொசிக்கக் கணக்கிதென்னே
அய்யா வுனக்களித் ததனல் என்னைவே ருக்கினையே.

தாய், நெறியினீங்கியப் பிள்ளையைப் பார்த்துக் கூறியது

326\. பாலாக்கி யங்கம் பசுநரம் பாக்கியப் பாவையரை
யேலாக்கி யென்னையும் ஏசவைத் தாயீ தன்றியிலே
மேலாக்கி யென்னையும் விளக்கெண்ணெ யாக்கியென்
[மேனியெல்லாம்
தோலாக்க வோமகனே பிள்ளையாய் வந்து தோன்றினையே!

### தலைவன், தலைவி நலத்தைப் புகழ்தல்

327. *காலப் புயலனை யான்கரு மாணிக்கன் கப்பவெற்பில்
ஏலக் கருங்குழ லாள்தந்த வாசையீ தென்னளவோ
மாலுக்கு மாரள வாய் மல ரோனுக்கு வாயளவாய்
ஆலத்தை யுண்டவர்க் குத்தலை மீதள வானதுவே.

### தலைவன், தலைவியின் நலம் பாராட்டல்

328. அலையுண்ட காவேரி யாற்றிற் றுயிலும் அரங்க வெற்பிற்
சிலையுண்ட வேற்கண்ணி கொங்கைக் கொவ்வாத [செவ்விளநீர்
குலையுண்டு உரிப்புண்டு சீவுண்டு மோதுண்டு சூத்துண்டு
விலையுண் டெரிப்புண் டுத்தண்ணீர் ததும்பவும் வெட் [டுண்டதே.

### திருக்குறுங்குடி நகர்வர்ணனை

329. அம்பெடுத் துத்தொடுத் திலராங் கேச ரானழிய
உம்பரொக் கம்பணிந் தேத்திய மாலுரத் தைந்தோங்கிச்
செம்பரத் தம்பூவைத் தீயெனக் கூவெனச் செண்பகத்தின்
கொம்பசைத் தேகுதித் தெங்கினிற் பாயுங் குறுங்குடியே.

### [இதுவுமது]

330. அரங்கும் அரங்கும் அரங்கைப் படைத்த ரங்கேசவெற்பில்
தரங்குந் தரங்குந் தரங்குன்றி லேறிய தாதுமையாள்
இரங்கும் இரங்கும் இரங்குமென் றேயெழில் பாருலகில்
குரங்குங் குரங்குங் குரங்கூச லாடுங் குறுங்குடியே.

### தலைவி, தலைவன்தார் பெருது இரங்கல்

331. விடையன் பிறந்தக வேதஞ்சை வாழ்வென்றி [மாலையிட்டான்
தொடையன் உகந்தனி யாதிருந் தாற்றொல்லை வட்டமதிக்
குடையன் சுடுவது மன்றியிலே கொள்ளி கொண்டு [நின்னை
இடையன் சுடச்சிற் றிடைச்சியைச் சுட்டதும் [எவ்வுண்ணமே.

### தலைவி, வேதியரைப் பார்த்துக்கூறியது

332. பதிநோக்கி யன்னையைத் தெண்டனிட் டேனென்றும் [பாங்கியரை
வெதிர்நோக்கி மாரரத் தழுவிக்கொண் டேனென்று [பொன்னின்
நதிநோக்கி வாழும் நவபுரிச் செய்துங்கன் னாட்டிலெந்தன்
விதிநோக்கிக் காளைபின் போறேன் எனச்சொல்லும் [வேதியரே.

### நலம்பாராட்டல்

333. நாப்பா வலரெனக் கருணையர் கோன்கஞ்ச நம்பிவெற்பில்
வீப்பாங் குழலிவள் தன் கொங்கைக்குத் தோற்றவே [முங்கொம்பு
சிப்பாய் பரகளாய்ச் சிமிழாய்ச் கிலமோ திரமாயிக்
காப்பாய்ச் சிங்க காடி வில்லாய்ப்பல் லக்காகக் [கடைப்பட்டதே.

### ஊழ்வினையை வலியுறுத்தல்

334. கலங்காத வீரிய ராலும் போகின்ற காலம் வந்தால்
மலங்காம லேவெல்ல மாட்டுவ ரோநல்ல வாழ்விருந்தும்
சலங்கரணக் கோட்டையிருந் துந்தலை பத்துந் [தானிருந்தும்
இலங்கா புரிநின்ற தோவெள்ளை நாவி லிருப்பவளே.

### தோழி, பரத்தையர்க்குக் கூறல்

335. வீரோ தையன் சிவந்தான் மழவேசன் வியன்சி லம்பில்
ஆரோ வரவிடுத் தாரறியே னம்பொன் மேருகிரி
நீரோ திருவுள நீரோ கனதனம் நீண்டசெழுங்
காரோ குழலுரு காரோ வுமைக்கண்ட காமுகரே.

### தலைவன், தலைவி குறிப்புணர்த்தினமையை நினைந்து வியத்தல்

336. மாலை வளர்த்த மதுரைநல் லான்கச்சி வாழ்வையன்னூர்
சோலை வரிக்கிளிக் குள்ளமு தூட்டிச் சுடச்சுடவப்
பாலையெனக்குத் தருதியென்றாள் நன்றுபாலையென்றேன்
ஆலை மொழிச்சிறி யாள்சொன்ன சூதை யறிந்திலனே.

### செவிலிகூற்று

337. தண்டமிழ் சேகரன் பராக்கிரம பாண்டியன் தனிச்சிலம்பில்
வண்டனங் கோதையெவ் வாறுசென் றாள்நல்ல நாயகரே

கொண்டிருந் தாண்டபெண் வேறே யொருத்தனைக்கூ
[டிக்கொண்டால்
கண்டிருந் தார்மனம் போலே கொதிக்குமே கடுஞ்சுரமே.

### திருக்குறுங்குடி நகர்வர்ணனை

338. முழக்குங் கடலையடைத் திலங்கே சன்முடிகள் பத்தும்
விழச்செஞ் சரந்தொட்ட மாமா லுறைவில்நம் மேழிமள்ளர்
உழச்சென் றோடை செழுநீல மேய்ந்துதன் பாற்குடித்துக்
குழக்கன் று கண்டு மூச்சு விடாப்பூ மணக்குங் குறுங்
[குடியே.

### [இதுவுமது]

339. கட்டிய பச்சைத் துழாய்மா லரங்கர் கனகிரிமேல்
மட்டலஞ் சோலை மலரே பறித்தும் மலருங்கொண்டு
எட்டிய தெங்கின் இளநீர் களைக்கொண் டெழுந்தமந்தி
குட்டிக ளுங்கொண் டருங்கொம் பிற்ருவுங் குறுங்குடியே.

### [இதுவுமது]

340. திக்கிலெட் டில்குளத்திற்சயத் திற்றிடுக் கிட்டலறி
மைக்கணைக் குளச்சரந் தொட்டவரா அதையவ் வரவுசுற்றி
இக்குமுக் கிக்கனை தெத்தவை தெத்தெரித் திட்ட
[முத்தைக்
கொக்குமுக் கிவிக்கிக் கக்குமோ சோலைக் குறுங்குடியே.

### கனவிலும் எண்ணப்படாதவர் இவர் எனல்

341. மெய்யா ரறிவுங் குணமுமில் லாதந்த மெல்லியரைப்
பொய்யாக் கனவிலும் புல்குவ ரோவந்த போகத்திலும்
மையா ருந்தச்சன் மரப்பாவை சேர்வது வாசிசெம்பொற்
கைய்யா கலியுகரா யாசத் திறமை காவலனே.

### விருத்தம்

342. மங்கை யரனு போகத்தை
மன்னன் கண்ட சித்துவேருய்ச்
சங்கை கொண்டி ருந்தபோது
தான்வரைந் தெழுத லுற்ருள்
பொங்கிய வுதரஞ் சிந்தப்
போர்மதக் களிற்றின் கோட்டைச்
சிங்கத்தின் குறளி கவ்வச்
சிந்தையில் சுவையே தீர்ந்தாள்.

### அறுசீராசிரிய விருத்தம்

343. காரெனுங் குழல்கள் தப்பிக்
கருஞ்சிலை யாரந் தப்பி
நேரென வளர்ந்து நின்ற
வேழத்தின் கோடு தப்பிச்
சீரிய கரிய ரோமச்
சங்கிலி வழியே சென்று
சீரிய காம வித்தும்
செல்வத்தே கையை வைத்தாள்.

### கலிப்பா

344. சுந்தரத் துகில்புனை சுழியில் தைத்தன்ன
மந்தரக் குழலினுள் மாது வார்த்தைநீர்
அந்தர மன்மதன் அரச டங்கலுந்
தந்ததே யுனக்கெனத் தாரை வார்த்ததே

### தலைவன் நிலைவைக்கண்டு நெஞ்சிரங்குதல்

### வெண்பா

345. இந்த நிலவங்கே யெழுமே யெழுந்தக்கால்
கந்தமலர்ப் பூங்குழலாள் கண்டாளே—சிந்தைமிகத்
தேடுமே நாமிருந்த சேதிதனை யேநினைந்து
வாடுமே நோமே மனம்.

### வெண்பா

346. ஆறுறு மாறும் அறுமூன்று மாறைந்துங்
கூறுறு செய்யுங் குணத்தினள்—நேரே
நெற்றிக் கண்ணீசர் நிமலர்திரு நன்னாட்டில்
முற்றத்தே நிற்பாள் முகம்.

### விருத்தம்

347. சேடன்முடி நெளியவரு செம்பொற்றேர்
அழிவதோ அந்தோ அந்தோ
கேடகம்வா ளணிவலையுங் கிளர்உயரத்
தோன்றுவதோ வந்தோ அந்தோ
கூடகைவெண் கதையென்றார் சிறுவனுயிர்
கொல்வதே யந்தோ வந்தோ
வாடமரிலொ ருவர்க்கொருவ ருதவாம
லிருப்பதோ வந்தோ வந்தோ.

348. சாதிமார்க்கந் துறந்து ஊனுதவுணுண்ட
தார்வேந் தனுக்கழுவனோ !
தடமிடறு பாலனைத் தனிவைத்து மன்னவன்
தனைக்கொன் றதுக்கழுவனோ !
ஆதிமுடைத் தாலிதந்த ஆரிய னுயிர்கொண்ட
அரசன் தனுக்கழுவனோ !
அருங்கா னகம்புக் கிப்பிற மன்னர்
வேசியரா னதுக்கழுவனோ !

349. வேதநெறி தவறாத மைந்தனைத் தழுவியே
வென்றனல் புகன்றெழுந்து
வெள்ளங் குதிகொண்டு கொள்ளாமல் மண்ணுடி
வேட்டுவன் றனக்கழுவனோ !
நீதிமா மதுரேசர் மாமுடிக் குரியவர்
நிறம்புகழ் கொண்டராசர்
நெஞ்சிறு லஞ்சாத முன்செய்த தீவினைக்கழுவனோ !
உடைந்த நீர்மோர் தனக்கழுவனோ !

350. கோளரவஞ் சுமந்த விந்தப் புவிமீதில்
பாண்டிமன்னு கூறக் கேளாய் !
ஆளாயவ வர்படைத் திருக்கக் கற்பழியா
பாஞ்சாலி அணைந்த வீமன்
வாளரிபோ லருகிக்க மலைவெற்பி விருந்து
வந்த மாமன் றன்னைச்
சாளர வாசலைத் திறந்துவர வழைத்து
முலையாரத் தழுவி னாளே.

## கலித்துறை

351. காடாகு முல்லைக் கழியாகும் நெய்தல்கல் லாங்குறிஞ்சி
நாடா மருதம் அடரும்வெண் பாலை அடைந்ததெய்வங்
கோடா கண்ணன் வருணன் குகன் இந்திரன் கூறு
மாடாயா மீன்புலர வேடா நாடா மறவருமே. [துர்க்கை

## [இதுவுமது]

352. செருவத்திக ட்டும்துடருமொன் றேடொன்று சேந்திலை
மருவிக் குருமுய லெனுங்கட் டார்இந்த மாநிலத்தில்
ஒருவருக் கொருவர் பிரிந்தால்நொய் தாகுவர் ஒள்ளிலநா
வெருவப் பொருசிங்க மேசெழி யாதிரு வேங்கடமே. [யே

### கட்டளைக்கலித்துறை

353. நெறியார்முனி கன்னியார் கற்பு நீக்க நினைப்பதுமுன்
மறியேந்து பாணியி லோடேந் திருன்சிவன் மானிடரோ?
சிறியார் பிறர்மனைப் பாங்கெய்தி னுல்என்ன தீங்கெய்து
வெறியார் தம்புய னேசெழி யாதிரு வேங்கடமே. [மோ?

### வெண்பா

354. கோட்டு முலைப்பாலா யிக்குழவி யொன்றன்பின்
போட்டுவிட்ட தம்பலம்போ லானேனே—கோட்டுமுலைப்
பாலான தின்பிறகோ பாலன் பிறந்தபின்போ
நாலாம் பிறையானேன் நான்.

### விருத்தம்

355. காப்பில்லான் விரைத்த பூமி
கரையில்லா நிறைந்த வேரி
கோப்பில்லான் கொண்ட கோலங்
குருவில்லான் கற்ற வித்தை
மூப்பில்லா குமரி வாட்கை
முனையில்லா மன்னர் சேனை
ஆப்பில்லாச் சகடை போலே
அலையுமந் திரியுந் தானே.

### விடுகவிதை

### எண்சீராசிரிய விருத்தம்

356. கன்னுளன் வகுத்த திருக்குளத்தில் நல்ல
நகைமணிக் கோபுரமுஞ் செம்பொன் மேவும்
நன்னுக ஆகவினத் திரியில் நாக
மொன்று படம்விரித்து ஆடக் கண்டோம்
குன்னுத குளக்கரையில் மேய்ந்த பாம்பு
குளம்வடிந்தால் தன்வாலைத் தின்னக் கண்டோம்
அண்ணுவே புலவீர் இக்கதையை நீங்கள்
அறிந்துசொன்னு லுலகாளும் அரசர் தானே.

### [இதுவுமது]

### விருத்தம்

357. கானகத் திருந்து வாழ்ந்து
கைகளாற் குத்துப் பட்டு
மாடகக் கூட மேறி
மஞ்சனநீர் காலை புக்கு

மேனியிற் கபாடம் பூண்டு
　　வீதியி லோடி மீளும்
ஆனையு மல்ல கண்டீர்
　　அறிந்துசொ லரச ரேறே.

தலைவன் கூற்று

கட்டளைக் கலித்துறை

358. செஞ்சிப் பதிதனிற் சிரங்க ராயரைச் சேவைசெய்து
வஞ்சித்துக் கொண்டு போற பெண்ணே வழக்குக்
　　　　　　　　　　　　　　　　　　　　[காருதுணை
அஞ்சக் கலையுண்டு அம்புலிமா னுண்டு அய்வருண்டு
நெஞ்சிற் றுணிவுண்டு போதாக் குறைக்கு நிலவுமுண்டே.

வெண்பா

359. குடவன் கடிக்கக் குளிர்வாடை வீசக்
கிடவென்றி டத்தே கிடந்தேன்—மடநல்லீர்
மின்குறங்கு தீண்ட விதியிலேயே னயினேன்
என்குறங்கை யான்தீண்டி யின்று.

360. சலசலத்த பாயும் தலகாணி வைக்கோலும்
பரிவில்லா மச்சினிமார் பண்பும்—விரைவுடனே
அத்திக்கா யாக்கு மடவும் அகலாமற்
சித்தத்திற் செப்புமெனச் செப்பு.

361. சேலை யழகும் திருநீற்றுப் பொட்டழகும்
மாலைக் குழலியென வந்துநின்றாய்—லீலை
பறிக்குந் தமிழறிவாள் பாங்கிதனக் காமோ
குறிக்குநெறி குண்டமே கூறு.

362. நச்சித்தே ரேறி நடுக்காட்டில் வேட்டுவச்சி
பச்சைக் கொடியாட நின்றாளே—இச்சித்து
மேல வனங்கிளைந்து மீனென்று கொண்டுபுக்கு
மூல பலங்களைந்தான் முன்.

363. திறிதியெனக் குண்டத்தாள் தானுகை வொல்கி
நெறிபோல நீவந்து நின்றாய்—சிறுபுலிதான்
தீரப் பசித்தாலும் தின்னுப்புல் தின்னுமோ
நேரொக்க நில்லாதே நீ.

364. எருவாய்க் கிருவிரன் மேலேறிப் பாந்த
கருவார்க்கோ வந்த கலகம்—திருவாரூர்த்

தேரோடும் வீதிதனிற் செற்றுக் கிடக்கிறீர்
நீரோடுந் தாளர்க்கோ நீர்

## நூல்வல்லோர் கூற்று

### விருத்தம்

365. நெற்பதர் கழிக்குங் காற்று
நேரொக்கு முறையு மொவ்வா
பொற்பதர் கழிக்குஞ் சோதி
பொன்னுமா முத்து மாகும்
கற்பதற் கழிக்குஞ் சோதி
கற்றுணர்ந் தோரைச் சேர்ந்தால்
சொற்பதர் கழிக்கு மென்றே
சொல்லினர் நூல்வல் லோரே.

366. உண்ட தறுக்கும் வாசல்
ஓரிறை யதனின் மேலே
வண்டலுங் குழுவுஞ் சீயும்
உதிரமும் மாறு வாசல்
பிண்டதோர் பிளப்பி னுள்ளே
பெருங்கனி யிருக்கு தென்று
கண்டதோ ரீனஞ் ரெல்லாங்
கனியெனக் கருது வாரே.

## சோதிடம்

367. திங்களிற் றிங்கள் முன்னாள்
சென்மநாள் பகைநாள் தன்னில்
மங்கையர் மூன்று நாளும்
வளர்பிறை உதித்த நாளும்
பொங்கிய வம்மா வாசை
பூவையைப் புணர்வீ ராகில்
அங்கமு முயிருங் குன்றி
ஆருயிர் இறப்பர் தாமே.

## உழவின் மேன்மை

### கலிப்பா

368. வெங்கோபக் கலிகடிந்து வேளாளர் விளைவயலில்
பைங்கோலால் முடிதிருந்தப் பார்வேந்தர் முடிதிருந்தும்
சங்கோபக் களித்தானைத் தார்வேந்தர் தங்களுடை
செங்கோலுக் கெதிராங்கோ லேர்நடத்துஞ் சிறுகோலே.

[இதுவுமது]

வாழ்த்து

369. பார்வாழி நான்மறைநூல் பணிபாதத் திருவாழி
காார்வாழி வளவாணன் காவேரி நதிவாழி
சீர்வாழி பெருக்காளர் பெருஞ்செல்வக் கிளைவாழி
ஏர்வாழி வாழியெழுந்த தொன்பது வளநாடே.

சீர்காழிப் பெருமானைப் புகழ்ந்து, பாடியது

அறுசீர் விருத்தம்

370. ஆழித் தேவ ராலும்
கமலத் தேவ ராலும்
ஊழித் தேவ ராலும்
உலகங் காக்க வல்லவரோ!
வாழித் தேவர் திருமடந்தை
வையம் புரக்கு பெருக்காளர்
காழித் தேவ ரிவரன்றி
வேறுத் தேவர் விளம்பீரே!

உலகுநிலை பெறுவது

கலிப்பா

371. நீற்றோனும் மலரோனு நெடியோனும் என்கின்ற
தோற்றாளறிவாராலே உலகுதுயர் கெடக்கற்றோர்
மாற்றாத காவேரி வளர்நாடர் உழுநுக்கத்தில்
ஊற்றாணி உளதாகில் உலகுநிலை குலையாதே.

கீர்த்தனை

மணப்பெண்

பல்லவி

372. அப்படிக் கொத்த பெண் ஆகில் அவள்மீதில்
ஆசை கொள்ளத் தகுங்காண்

அநுபல்லவி

முப்பத்து முக்கோடி தேவர்கள் போற்றும்
முத்துக் குமர வேலா (அப்படிக் கொத்த)

சரணம்

உள்ளூரு மாகி ஒருதெரு வாகி
ஒருவய தாக வேணும்—தன்கைக்

குள்ள உடைமை பணங்கா செல்லாந்தரும்
ஒய்யாரி யாக வேணும்
கள்ள மதனக் கரிகர லீலைகள்
கற்றவ ளாக வேணும்—மன
தெள்ளள வாகிலும் நெஞ்சினில் வஞ்சகம்
இல்லா திருக்க வேணும் (அப்படிக்)

பூசி முடித்துச் சகலா பரணமும்
பூண்டவ ளாக வேணும்—ஒரு
காசெடைச் சந்தனம் சாந்து சவ்வாது இரு
காதில் மணக்க வேணும்
வேசிகள் போலே காசுபணத்தை விரும்பா
திருக்க வேணும்—நல்ல
பேசிய பஞ்ச வர்ணக்கிளி போலொத்த
பெண்மய லாக வேணும்— (அப்படிக்)

செண்பகம் பூநிறம் மெல்லியு மாகவே
செகப்பா யிருக்க வேணும்—சில
பெண்களுடன் கூடி சங்கீத வீணைகள்
படித்தவ ளாக வேணும்—இரு
பெண்களுக் கெல்லாம் தெய்வரம் பையான
பெண்மய லாக வேணும் (அப்படிக்கொத்)

## நீதிபோதனை

### மட்டு விருத்தம்

373. செண்டுமுலை மாதருடன் கூடிக் கூடி
செரியனென்று பேர்வாங்கித் திரியா மல்நம்
வண்டனிவன் வார்த்தையெல்லாம் பொய்யே யாகும்
வகைகெட்டாய் துகைகெட்டாய் வர்மங் கெட்டாய்
கண்டிதமாய் மாமனுடன் மச்சான் தானும்
கடைகெட்டா னிவனென்று கருதிச் சொல்வார்
மண்டலத்தில் புகழுகின்ற யீசா நீதான்
மறைக்காட்டில் அம்மானை வணங்கு வீரே.

## பரத்தையர் இழிவு

374. அள்ளியள்ளிப் பணங்கொடுத்து வெள்ளை வாங்கி
ஆனதொரு சுகங்கொடுத்து அரையாப்பு வாங்கி
ஒள்ளியதோர் கலைகள் தந்து நோய்கள் வாங்கி
ஊதாரி சிறுக்கியுடல் வாதம் வாங்கித்

தள்ளிவிடத் தள்ளிவிடப் போகே னென்றுங்
சண்டியாய்த் திரிவார்கள் சரசப் பேய்கள்
மள்ளியெனும் பரத்தையரை விட்டு நீங்கி
மறைக்காட்டி லம்மானை வணங்கு வீரே.

375. தெருவிலே புறப்படுவாள் முலையைச் சற்றே
திறப்பார்மெத் தெனநடப்பார் கீழே பார்ப்பார்
உருவிலே யிளைத்தோரைப் பார்ப்பா ராசை
உள்ளவர்போல் மயங்குவா ளுடல்மேல் வீழ்ந்து
சருவுவா ரழைத்துக்கொண் டுள்ளே போவார்
தான்பொருந்தும் பணவிலைக்குத் தக்க தாக
மருவுவார் பரத்தையரை விட்டு நீங்கி
மறைக்காட்டி லம்மானை வணங்கு வீரே.

376. காலுக்குக் காலாழி யெங்கே யென்று
கடகமெங்கே சவடியெங்கே கடுக்க னெங்கே
பாலுக்குப் பசுவெங்கே எருமை யெங்கே
பண்ணைக்கு மாடெங்கே பவள மெங்கே
மேலுக்கு மஞ்சளெங்கே யென்று தேடி
மெள்ள மெள்ளப் பறிக்குமந்த வேசி யாரை
மாலுக்குத் துணையெனவே நம்ப வேண்டாம்
மறைக்காட்டி லம்மானை வணங்கு வீரே.

377. ஆடிக்குச் சேலையஞ்சு வாங்க வேணும்
ஆடுபன்றி கோழிகரு வாடு வேணும்
வேடிக்கை மூக்குத்திச் சவடி வேணும்
மீன்காடை கவுதாரி வேணு மிந்தச்
சாடிக்குச் சாராயம் நிறைக்க வேணும்
தாரு மென்று பணம்பறிக்கும் சமர்த்தியான
வாடிக்கைத் தாய்க்கிழவி மயலை நீக்கி
மறைக்காட்டி லம்மானை வணங்கு வீரே.

378. பெட்டிகளில் புடவைகளை யெடுத்து டுத்திப்
பித்தளையை மேல்பூட்டிப் பிலுக்குக் கொள்வார்
பட்டிகளி லாடெடுத்தக் கள்ளர் போல
படுக்கமணைக் குள்ளாகப் பதுக்கிக் கொள்வார்
செட்டிகளை யினர்களைச் சேர்ந்தா யென்று
சினந்து தங்கள் சண்டையினில் திட்டிக் கொள்வார்
மட்டிகளாம் பரத்தையரை விட்டு நீங்கி
மறைக்காட்டி லம்மானை வணங்கு வீரே.

379. மூக்குபோல் பித்தளை மூக்குத்தி கண்டீர்
முலையிலே பலபேர்கள் கிள்ளக் கண்டீர்
நாக்கிலே சாராயம் நாற்றங் கண்டீர்
நாவிலே பணம்பறிக்கும் நயங்கள் கண்டீர்
பாக்கிலே கலந்திடும் பாஷாணம் கண்டீர்
பாயிலே பலபேர்கள் படுக்கக் கண்டீர்
வாக்கியமிடு பரத்தையரை விட்டு நீங்கி
மறைக்காட்டி லம்மானை வணங்கு வீரே.

380. வேசியரோ டிணங்கினல் வெட்கம் போகும்
மெய்யுடலும் சரிகலமும் மெலிந்தே போகும்
காசுபண முள்ளதெல்லாம் கரைந்தே போகும்
கண்காட்டி விழிகாட்டி மறித்துக் கொள்வார்
தேசமெங்கு முள்ளவர்க்குத் திருட னுகிச்
சிநேகிதமா யுறவாடிப் பகையு மாகி
வாசமலர்க் கண்ணுளை விட்டு நீங்கி
மறைக்காட்டி லம்மானை வணங்கு வீரே.

## மெய்யுறுப்புக்கள்

381. கண்ணுதலா லயனேக்குங் கண்களே கண்கள்
கறைக்கண்டன் கோவில்புகும் கால்களே கால்கள்
பெண்ணெருபா கனைப்பணியுந் தலைகளே தலைகள்
பிஞ்ஞகனைப் பூசிக்கும் கைகளே கைகள்
பண்ணவன்றன் சீர்பாடும் நன்னவே நன்னு
பரன்சரிதை தனைக்கேட்கும் செவிகளே செவிகள்
அண்ணல்பொலன் கழல்கள்நினை நெஞ்சமே நெஞ்சம்
அவனடிக்கீ ழடிமைபுகும் அடிமையே அடிமை.

## மாந்தர் கடன்

### கட்டளைக் கலித்துறை

382. கண்ணுண்டு காணக் கருத்துண்டு நோக்கக் கசிந்துருகிப்
பண்ணுண்டு பாடச் செவியுண்டு கேட்க பச்சிலையா
லெண்ணுண்டு சாத்த யெதிர்நிற்க நாமுண்டிவையிருக்க
மண்ணுண்டு போவதென் னேஉமை யேயிந்த மானிடமே.

### [இதுவுமது]

383. காணீர் கதியொன்றும் கல்லீர் எழுத்தஞ்சு வல்லவண்ணம்
பேணீர் திருப்பணிப் பேசினீர் அவன்புகழா ஙசப்பட்டு
பூணீர் உருத்திர சாதனம் நீறங்கம் பூசுகிலீர்
வீணீர் .........மருதப் பிரான்கழல் மேவுதற்கே

## நல்ல மந்திரம்

### கலித்துறை

384. ஓடா திருஒன்றை உண்ணு திருசெல்வ முண்டேனவை
நாடா திருவஞ்சம் நண்ணு திருநற் குருவருளைக்
கோடா திருவென் றுரையா றெழுத்தைக் குறித்துக்
[கொண்டு
வாடா திருமன மேயிது தானல்ல மந்திரமே.

## எழுபிறப்பினியல்பு

### அகவல்

385. வானவ ரேதவ நெறியில் முயங்கி
வானவர் மனிதரே மனிதர் குணமாகி
வானவ ரான்குலம் விலங்கில் அகந்தையாம்
அணுகவு யிர்பறவை யெனில்தா பரங்கள்
மீனமுட னிருவரையும் அறியா தாகும்
மானமுறகை யொப்போர் நீரில் வாழ்வோர்
வகுத்தனர் தன்குலத் தொழிலின் னன்றே.

## முத்திப் பதிகள்

### அகவல்

386. சோழ மண்டலம் நாற்பத்தி ரண்டுடன்
துய்ய பாண்டி பதினெட்டும் கொல்லியே
வாழு மாமலை யாளமீ ரேழுடன்
மன்னும் வேங்கிடம் வாழ்தொண்டை நாட்டுடன்
ஏழு மூன்றையும் இரண்டையுங் கூட்டியே
யிதனவ் வடக்கு பதினொன்றும் பாற்கடல்
யாழி யானகடல் நூற்றெட்டு மோதுவார்
அன்று தீவினை அன்றணு காதே.

## சோதிடம்

### அகவல்

387. ஆடித் திங்கள் ராவணன் பட்டநாள்
ஆனி முப்புரம் ஆவணி பாரதம்
வேடத் தான்புரட் டாசி யிரணியன்
வேதக்கோன் நஞ்சை யுண்டது மாசியாம்

பாடிக் காமனை யெரித்தது பங்குனி
பாரி லில்லம் யெடுக்கிலிக் குடிபுகில்
தேடிப் போட்ட திரவியம் சேதமாம்
செங்கை யோட்டில் இரப்பது திண்ணமே.

[இதுவுமது]

கலிப்பா

388. நன்னாளினில் மனைகோலிடில் நாணுருட ராசி
முன்னாகுதல் வலமாகுதல் முளரித்திரு வடையும்
பின்னாகுத லிடமாகுதல் பேயும்பிணி யடையும்
பெண்ணாகுதல் மண்ணாகுதல் போமேயுயிர் போமே.

[இதுவுமது]

விருத்தம்

389. செங்கதிரோன் பிறந்தநாள் பரணிஆ காது
செருமதிக்குச் சித்திரை செவ்வாயுத் திராடம்
பொங்குபுதன் அவிட்டம் பொன்மே லக்கேட்டை
வெள்ளிபூ ராடம் சனிரே வதியின்னாள்
மங்கையரு மணம்புணர்ந் தால்விதலை யாவள்
வழிநடக்கில் மரணம் மனையெடுக்கில் பாழாம்
செங்கமலத் திருமடவார் திருப்பூத்தால் மலடாம்
செழுங்குழவி பெற்றிடினும் செத்திடுந்திண் ணந்தானே

[இதுவுமது]

390. ஆதிரை பரணி யாறில் ஆயிலியம் முப்பூ ரங்கேட்டை
தீதறு விசாகம் சோதி சித்திரை மகமீ ராறில்
மாதனங் கொண்டார் தாரார் வழிநடைப் பட்டார் மீளார்
பாயிடைப் பட்டார் சாவர் பாம்பின்வாய்த் தேரை
[திண்ணம்.

சக்தி மகமாயிடம் குறை விண்ணப்பித்தல்

விருத்தம்

391. அதிகார மானகலி யுகமும்நா லாயிரத்
தையினூ றினில் நாலூறினில்
அன்பத்தி ரண்டினில் விரோதில் ருதுவருஷம்
அமருபங் குனிமாதமும்

சதிரான தேதியிரு நான்குடன் வெள்ளியும்
தகுந்திருக் கின்றநாளில்
தாரணியில் பலசாதி சனமவதி பட்டதும்
சாற்றிடவு முடியுமோதான்

ஒதியமர புளிய மரமொடு குருட்டுவேல்
உள்வீடு கொட்டாயுடன்
ஓட்டுவில் லையும்வீடு பொற்பட்டி தலைகீழாய்
ஒருநாழி வழிசென்றுதே

சதியாக வேவந் தகர்த்தனை நீக்கியே
தற்காத்து ரட்சிசமையம்
தயவுமிகு பொட்டணம் நகரதினில் வாழ்ந்திடும்
சத்திமக மாயிஉமையே.

## தலைவன் கூற்று

### விருத்தம்

392. வருக்கமுடன் கதலிவிளாய் மாமரத்தின்
கனிசிதறி வயலில் பாய்ந்து
பெருக்கமுடன் கடம்பவினால் நாட்டிலுள்ள
அதிசயத்தைப் பெண்ணே கேளாய்!
மருக்கொழுந்து மருக்களரு திருச்சடைமே
லணிந்திருக்கும் வாடை தானே
சிருக்குளத்தின் கரைதனிலே சிறுக்கிநின்று
களுக்கென்று சிரிக்கின் றாளே.

## [இதுவுமது]

### விருத்தம்

393. அஞ்சுரெண்டு மாறுமூன் றும்அறியாத பருவத்தி
லவளும் நானும்
செஞ்சடையாள் மாதரசி செப்புகிறேன் ஒருவசனம்
சொல்லக் கேளாய்!
பஞ்சணைமீ தினிலிருந்து பனிக்கா யிளங்கரும்பும்
பயத்தைப் போலே
கொஞ்சிவிளை யாடுகின்ற கோதையரைத் தேடிநெஞ்சம்
குதிகொண் டேனே.

## தலைவி வருகையை தலைவன் சாற்றல்

### பதம்

394. வந்தாளிச் சுந்தரி லீலா—கூடி
மருவுங் குமார வேல்மகி பாலா. (வந்தா)

மந்தர முலைகுலுங்க—சந்திர நுதலிலங்கச்
சுந்திர விழிதுலங்கத் தந்திர யிடையிலங்க (வந்தா)

சாடை மதனையேசிக் கூடிக் கலவிபேசிப்
பேடை ரதிநேசி வாடைப் பொடிகள்பூசி (வந்தா)

பேசி மயலைப்பூட்டி யோசைக் கின்னரிமீட்டி
வாச மலரைச்சூட்டி ஆசை தருசீமாட்டி. (வந்தா)

சம்ரமுகனே தீரா விம்ரகட்டிக் குமாரா
அமுர்தகுண வுதாரா குமரவேல்வசீகரா (வந்தா)

## பலாப்பழத்தின் சுளை எண்ண வழி

### வெண்பா

395. தொங்குபலா வில்சு ளையறிய வேண்டினக்கால்
அங்கிருந்த கொம்பி னருகிருந்த—முள்ளெண்ணி
நாலெட்டி னல்பெருக்கி ஞாயமாகா ணிக்கிய
தோலொட்டி நிற்குஞ் சுளை.

## பாச்சலூர்க் கிராமத்தாரை விளித்து, உல்குதத்துவத்துப் பொருளைக் கூறியது

396. வித்தொரு மரத்தை யீனும்
மரமொரு வித்தை யீனும்
பெத்ததாய் பிள்ளை யீனும்
பிள்ளையு மதுவே யீனும்
உத்தபால் தயிரை யீனும்
உயர்ந்ததாய் குழந்தை யீனும்
பத்திநன் றிலைவ தேதோ
பாச்சலூர்க் கிராமத் தாரே!

397. ஒருபனை யிரண்டு பாளை
ஒன்றுநொங் கொன்று கள்ளு
அறிவுடன் கொள்ளு வோர்க்கு
அதுவுங்கள் இதுவுங் கள்ளே

ஒருகுல முயர்ந்த தேதோ ?
ஒருகுலந் தாழ்ந்த தேதோ ?
பறையனைப் பழிப்ப தேதோ ?
பாச்சலூர்க் கிராமத் தாரே !

398. கொடுக்குமேல் குடுமி கண்டோங்
கோழிமேற் சூளி கண்டோம்
நெல்லுக்கு உரமுங் கண்டோம்
நீரில்கில் உப்புங் கண்டோம்
அப்பிலே மூழ்கி மூழ்கி
அலைகின்ற பரம ரெல்லாம்
பக்குவ மான தேது
பாச்சலூர்க் கிராமத் தாரே !

399. ஊருடற் பாம்புக் கூட்டி
உயர்ந்ததோர் சாலை கட்டில்
நீரிலே மூழ்கி மூழ்கி
நெருப்பிலே நெய்யைத் தாவிக்
காரியத் தவனைப் போலக்
கத்தியே வேத மெல்லாம்
பாரைவிட் டகலா தேனோ
பாச்சலூர்க் கிராமத் தாரே !

400. சந்தனம் அகிலும் வேம்பும்
தனித்தனிக் கந்தம் வீசும்
அந்தணர் தீயில் வெந்தால்
அதுமணம் வேற தாமோ
செந்தலைப் புலையன் வெந்தாற்
றிமணம் வேற தாமோ
பந்தமும் நீயும் வேறோ
பாச்சலூர்க் கிராமத் தாரே !

401. இடிஞ்சலும் தீயும் நெய்யும்
ஏந்திய தீபம் போல
இடிஞ்சலும் திரிநெய்யும் போனல்
ஏத்திய தீபம் எங்கே?
படித்தவர் இறந்து போனல்
முறைமுறை தழுவிக் கொண்டு
படிந்துநின் றலைவ தேதோ ?
பாச்சலூர்க் கிராமத் தாரே !

402. உறக்கமோ வுண்டு வேர்மூலத்
துள்ளது புரிகுமா ? சீவன்
இறப்பது வுடலோ டுயிரோ ?
இறப்பது ஆணோ ? பெண்ணோ ?
கறப்பது முலையோ ? பாலோ ?
காண்பது மனமோ ? கண்ணோ ?
பறப்பது சிறகோ ? காலோ ?
பாச்சலூர்க் கிராமத் தாரே !

403. நீய்ப்படக் கடைந்த வெண்ணெய்
சீவனும் வேறே மாய
மாய்ப்படக் கடைந்த தாயு
மக்களும் வேற தாமோ ?
மோர்ப்படக் கடைந்த வெண்ணெய்
மோருடன் கூடா வண்ணம்
பார்த்தெனக் கருள்செய் வீரே !
பாச்சலூர்க் கிராமத் தாரே !

404. மகங்கண்டத் தேககண்டந் தன்னை
மற்றொரு சுத்தர் காணார்
சுகங்கண்டான் துக்கங் கண்டான்
சுக்கில வழியே வந்தான்
முகங்கண்டான் புறமுங் கண்டான்
அவனுக்கே தார மென்றான்
மகங்கண்ட தேதோ சொல்வீர் !
பாச்சலூர்க் கிராமத் தாரே !

405. பறைவவ்வும் நாற்காற் சீவன்
பரிவுடன் முறைமை யுண்டோ ?
குறைவற நிறைவான் சாதிக்
குறிப்புடன் உளவாஞ் சீவன்
இறையவன் தேவ ரெல்லாம்
முறைமையிப் படித்தா னல்லோ ?
பறையனும் பார்ப்பானும் வேறோ ?
பாச்சலூர்க் கிராமத் தாரே !

### விநாயகர் பாடல்

### விருத்தம்

406. துஷ்டப் பிசாசுமுனி கிட்டவர வொட்டாமல்
தும்பிக் கையால டித்து

உத்தண்ட முத்தியைத் தூக்கிப் பிடித்திடும்
தொப்பனே தொப்பை வயிறு !
மட்டுப் படாதழைப் பந்தி யேறியெம்
மகாதே வர்வரும் அளவிலே
அச்சுவேர் ஆலிவேர் ஆக நினைத்திடும்
அப்ப னேநீ நினைப்பாய்
அப்பனே உன்னுடைய மெய்ப்பான வீரியம்
ஆருடன் சொல்லு வேன்கான்
அழகுபெறு மிருக்தவொரு சப்பாணி நாயகனே
ஐங்கர மிருந்த களிறே.

407. காலமே யெழுந்திருந்து
கான்முகம் சுத்தி செய்து
கோலமா நீறுகள் பூசிக்
குழந்தைகள் பசிக ளாற
பாடமும் சொல்லிக் கொண்டோம்
படியடி பட்டுக் கொண்டோம்
ஏனம்மா இந்தக் கோபம்
எங்கள்மேல் குற்ற மில்லை
சீடரை அனுப்பு மம்மா
திருவடி சரணம் தானே.

முருகன் பதம்

பல்லவி

408. உண்மை சொன்னே னய்யா
உன்ன டிமைக்குள் ளடிமையாய் (உண்மை)

அநுபல்லவி

உண்மை சொன்னே னய்யா கருக்குழி புகாவந்
தென்னைக் காத்தருள் வீரா (உண்மை)

சரணம்

உண்மை பூணூலா பரணமும் பொன்னடி தஞ்சம்
உனைக்காண வேணுமென்று கருதுமே யென்னெஞ்சம்
உண்மை முற்றுமென் வடிவெல்லாம் முகங்கொண்டு நாடி
மற்றொரு தெய்வங்களை நான்வாய் கொண்டும் பாடி
(உண்மை)

உண்மை கைவசமாய் நெல்லிக் கனியைப் போல
குலதெய்வமு நீயென்று தெளிந்து பாடிச்

சன்னதி கண்டு கொண்டேன் கண்டவுடனே
சௌவுபாக்கியம் பெற்றுக் கொண்டேன். (உண்மை)

செந்நெல் விளையும் குன்றை நன்னகர் தனில்வாழுஞ்
சிவனருள் சரவண பவனிலே கியாதி
சன்னதி பதுமாமலர் சிறந்த சரவணனை நீராடி
பக்தியுடன் கிரியை சுத்திவல மாய்நாடி (உண்மை)

குதிகொள்ளு மெனதய்யன் புதுமலர் தன்னைத்தேடி
குகனே குகனே சண்முக னேயென்று
கொண்டாடிப் பானுவைக் கண்டபங் கயம்போல்
முகமலர்ந்து பரவச மாகவே உருகி (உண்மை)

உள்ளங் குளிர்ந்து மோன சடாச்சரத்தை
மொழிந்துமுருகா முருகாமல் மருகா யென்றே
புகழ்ந்து ஞானகுரு தேசிகனை அருள்முகனை
வாழ்த்திநவிலுங் கவிக்குஞ்சர நற்றமிழரங் கேற்றி (உண்மை)

காணமலர் பறித்துச் சேவடிதனில் சாற்றிக்
கந்தா கந்தா வரந்தா வென்று
போற்றி சன்னதி கண்டு கொண்டேன்
கண்டவுடனே சவுபாக்கியம் பெற்றுக் கொண்டேன். (உண்மை)

### வெண்பா

409. மாசித்தே ரோட்டிவைத்து மாசனங்கள் சூழ்ந்துவர
பூசிக்கு மர்ச்சகரும் போற்றட்டிற—றேசிகனும்
தானிருக்க தொட்சுத்தா னமுறிந்து போனசியல்
மானில்ஆர் சொல்லுவார் மாண்பு.

### கட்டளைக் கலித்துறை

410. முல்லாக் கமலத்தில் முன்னிற்க லாகாதென் றெண்ணி [யென்றே
சில்லாவை விட்டு மலைமேல் சிபத்தில் மறைந்திருந்து
பொல்லாப் பயல்களைப் போக்கடித் தேயிப் பூதலத்தில்
நல்லார் குருகையில் வந்தே யிருக்குமநற். றேசிகனே.

### வெண்பா

411. அல்லும் பகலும் அனுதினமும் சிந்திக்கக்
கல்லாய் மனதைக் கனிவிப்பா—யெல்லோர்க்கும்

நீயொருவ னிப்புவியில் நிட்சமா யிப்புவியில்
தாயகமா யாதிநா தா.

### வெண்பா

412. நாராய ணாய நமவென் றவனடியைச்
சேராரை வெந்துயருஞ் சேர்ந்தாப்போல்—பாராருங்
கொற்றவனைப் பார்மடந்தை கோமானை வாய்மைநெறி
கற்றவனைச் சேர்ந்த வவர்.

### வெண்பா

413. என்னிதயத் தேனென்றும் இருக்கும் இருக்கும்
தன்னிலுமே வீற்றிருக்கும் தப்பாது—பொன்னனைய
பூமாது புவிமாது புனிதர் குழைக்காதர்
மாமால் பதத்தாள் மறை.

### குழைக்காதர் திருவிழாவில்

414. வினியோகங் கொடுப்பதிலே வேசியர்
முகம்பார்த்து விளைந்த தேங்காய்
சனியான மாதருக்கு மாங்காய்
சூத்திரர்க் கெலுமிச்சங் காய்மெத்த
.......................................
அனியாயங் குழலூதிக் கடுத்த
கணிகையர்க்கு முன்போலா குந்தானே.

### கலித்துறை

415. மிகமண் டலஞ்செய்து மாசறப் போக்கி விளக்கியெழு
சிகமண் டலம்வெண் ணிலவெறித் தாலுந் திருவயிறு
புகமண் டலம்விளங் குங்குழைக் காதர் பொலிந்ததிரு
முகமண் டலத்தினுக் கொவ்வாத சோதி முழுமதியே.

### விருத்தம்

416. அருமறைப் பொருளா யிலகுமுச் சுடராய்க் கண்டமாயரிதா
யருளிக் கொண்ட திருமலி கமலமாதுவாழ் மார்பாதென்
திருப்பேரை வாழ்ந்தோங் குங்குணக் கடலே கருநிற
[முகிலே
இருவினை யதற்குன் வருந்திடா யதருள் ஏற்பதுபார்
[மெய்ப்பொருளே.

### அகவல்

417. ஆண்டதிருப் பேரை அரிமகரக் குழைக்காதர்
தாண்டவமாய் நூற்றெண் மறையும் பாடினேன்
ஆண்டதிருக் கோலத்தில் அரிகேச வன்றானும்
தீண்டதிரு வுத்தியானத் திருஞன் சேரவைத்து
வேணுமென் றேஅர வணையிலத் துயில்வாழு
மரிகேச வர்மனை அமரர் போற்றும்
விரஞ் செறிந்த திருமாது கேள்வனை
மெஞ்ஞா னமணி விளக்கே வேதக்குரல்
மிகவே மிகமுழங் கும்பே ரைநெடுங்
குடைக்கா தர்கொலு வாய்மெய்க் கத்திறை
கொளித்த மணி பதித்த சிவிகையின் மேல்
வரு பவனி தெரிசித் தோயே
அந்தண ருக்கோ நல்லருந் தவர்க்கோ அன்னயோ யெராய்
வந்ததற்கோ மறவாதியற் கோமாகாக் குழைசேர்
சுந்தரத்தோ ளனுக்கோ தொண்டர்கள்
க்காச்சந் தணச் சோலை
குருகைப் பிரான் வந்து சந்தித்ததே.

### வெண்பா

418. உன்னைப் பிரமுட்டை உண்டுழுத் தயவேளன்
தன்னைப் புகழ்ந்துவருந் தான்பட்சி—மன்னு
புலமைக் கவிராசன் போற்றவருள் செய்தான்
வலங்கல்லி யாணிமன்ன னே.

### விருத்தம்

419. வடவிருக் கத்தினில் வாழும்வா ரணமாய
முகத்தோனை வழுத்திப் போற்றித்
திடமுடன் மாசித் தெருவில் சிறப்பாக
வாழுமுற் றயவே கேண்மோ
இடனைக் குந்தனை யல்லால் இப்புவியில்
வேறில்லை யெந்த நாளும்
அடவுடன் பட்சிக் கவிராசன் தன்னை
ஆறுவ துன் அருள் பெற் றேனே.

### கலித்துறை

420. தப்பாது வர்க்குச் சிவசுப் பிரமணியன் தழைச் சிங்கத்து
எப்போதும் லட்சுமி வாங்கா திருப்பவ் ளென் பெருமாள்

முப்பாலுஞ் சோறு முசியாமல் உண்டு முருகாமின்
கற்பக விருச்சம் போலே யிருக்கக் கண்டு தலைக்கே.



கலித்துறை

421. வாதித்த சூரனை வடிவே லெடுத்து வளைந்து கொண்டு
சாதித்துதைந்த தயாபர னேயென் சஞ்சலத்தைச்
சோதித்துப் பார்த்துத் துயர்தனைத்தீர்த் தருள்நாத [தொகை யுடனே
ஆதித்த வாரத்தில் வருவாய் பழனி ஆண்டவனே.

கலித்துறை

422. அந்தணர் வாச மதுவேமணக் கும்பொழு தந்திப்பட்டால்
செந்தமிழ் வாசம் தெருவெங்கும் வீசும் சேவற் கொடி
கந்தன் இருக்கும் தலந்தோறும் எங்கும் கமகமவெனச்
சந்தண வாசம் வீசும் பழனித் தலமெங்குமே.

ஈயத்தகாதவை

423. தன்மனையவளை யடைக்கலப் பொருளைத் தன்னுழை [யடைந்துளோன்றன்
மன்னுதன் மரபினெழுகிய வைப்பை மனையவள் [குணர்ந்தவான் பொருளை
இன்னுயிர் விடுக்கு மெனக் கொடுந்துயர மெய்தினு [மீந்திட லாகா
...............................................

அருப்புக்கோட்டையிலிருந்து தென் குருகூருக்குப் பட்சி வந்ததைப்பற்றிப் பாடியது

கலித்துறை

424. அருப்புக்கோட் டையிலிருந்துஅன்புடனே தென்குருகூர்
மருப்பவள வாயானை வந்து நித்தந்தொழ வென்றுஞ்
செருப்புக்குடை யில்லாமல் செறிவெயிலில் வழி நடந்து
பருப்புச்சோ றுண்பதற்குப் பவுசுடனே பட்சிவந்தான்.

[இதுவுமது]

ஆசிரியவிருத்தம்

425. ஆச்சரிய மான திரு நெல்வேலிச் சில்லா
அடங்க லொன்பதுதா லுக்கா
அதிலுள்ள குடிகளைக் கட்டாய மேசெய்து
அனியாயு மாக வேதான்

ஆருக்கு மேற்காத ஒவ்வொரு குடிகளை
அக்கிரம வலாட்டி யாக
அன்புக ளில்லாத சமிந்திரிக ளிடத்திலும்
ஆசைகள் மிகுதி கொண்டு

மாச்சரிய மாகககன லஞ்சங்கள் வாங்கி
வைகுண்ட மனைவ ருத்தி
வகைதுகைக ளின்படிக் கணக்குமூ லங்களாய்
வாக்குமூ லங்க ளாயும்
வந்தவர லாறதனை க் கண்டதே நமதுடன்
வழியான ருசுவு மாக்கி
வைத்திட சிரஸ்ததார் சன்னிதா னத்தின்முன்
வருவிசா ரணையில் வைக்கப்

பேச்சரிய மான அய்க்கோர்ட்டில் வக்கீல் மிரொப்
பிய சலவன துரைக்குப்
பீசுகள் அய்யா யிரம்போய்க் கொடுத்து வழிப்
பின்படிசிலவு மேத்துப்
பெரிதான பாரிஸ்டர் வருகிறார் வருகிறார்
என்று டெல்லி கிறுவில்
பேசிட்டு வந்துவக் கால்த்துப் பிடித்துப்
பெரிய துரைகச் சேரியில்

பூச்சொ ரிந்தது போலாகச் சட்டமும்
பொருத்திவைத் தெழுதி வைக்கப்
பிடிக்கவுங் கொடுக்கவு மலர்களு மதிகாரப்
பேர்வீசுந் தகுமை யில்லை
போவென் றுரைக்கவவன் வெட்கியே பட்டணம்
போனதே கவுண மென்றார்
போர்டாரு மிவைதனைத் தெரிந்துணை மொய்த்தார்கள்
புகழ்ந்தார்கள் வரத ராசனே.

### கட்டளைக் கலித்துறை

426. காராளன் வங்கி சந்தான வயோக்கியங் கடல்மலைக்கும்
பேராளன் கீர்த்தி கவுரதை முத்திரை பெற்றவனு
தேராளன் எங்கெங்கு மாளையப் பெந்திரஞ் சுமுகன்பெற்ற
வீராதி வீர வாளவந் தானுக்கு விண்ணப்பமே.

## சுப்பையரென்பாரைப் புகழ்ந்துபாடியது

### வெண்பா

427. சித்திரமுஞ் சற்றே சிரமசைக்கு மோங்கியக
லுத்திரமும் நீராய் உருகுமே—வித்தகனைச்
சூடுகின்ற கங்கைகொண்டான் சுப்பய்யர் பாகவதம்
பாடுகின்ற ராகமதைப் பார்த்து.

## எல்லாம்சிவன் செயல்

428. கூலி விழிபிதுங்கிக் கோபுரத்துட் பொற்பதுமை
தானுமதைச் சுமந்த தன்மைபோல்—நானுந்தன்
றுங்கச் சிவனிருக்கத் தன்றலையிற் பாரமென்று
தேங்கித் திரிந்தலைவ தென்.

429. சித்தாடை கீறிச் சிலந்திகாட் டியசெங்கை
செய்யு முத்துதவு செங்கை
செய்ய மேனி கொண்ட செங்கை வித்தாணம்
வேந்தன் மணிசூட்டிய செங்கை
எழுமேக சிறைமீட்ட செங்கை முளைவாரி
அன்னந்தருஞ் செங்கை முத்தமுதிட்ட செங்கை
முன்கைச் சந்தணமாயுறைத்திட்ட செங்கை
நற்றுண்மை தன்மாரியே சொரியும்
ராசனே யென்னை யென்று ரட்சிக்கவந்த
முத்தைய பிள்ளையின் றெடுத்த ஆழ்வார்
பிள்ளை கர்றுவுதாராகுபேர பாக்கியவானே.

430. சீர்மேவு தென் குளந்தாபுரி பதியிலுறை
திருவழுதி யீசர் பங்கில்
சேரும் ஆவுடை நாயகிக் கெவுரி
அபிராமி திவ்விய ராசன் குமாரி
வார்மருவு கனதனச்சிற்றிடைச் சிவஞான
மந்திர ஓங்காரி நின்னை
மனதிலனு தினமும்நின் அடிமை யொருவிண்ணப்பம்
வன்மை யொன்றுளது கேண்மோ
தாருலவு புயசயில கங்கா குலாதிபதி
தர்ம முத்தப்ப ராசன்
தனையனென வருமாறு முகமால்
சகோதரன் சுவாமி குற்றாலலிங்கம்

பார் மருவு நீடூழிகாலமும் வாழ்கவருள்
பாலித்து மென் மேலுமே
பராசரற் கவிவாணர் சதாகால மும்புகழ்
பாக்கியமிக அருள் புரிவையே.

[நாயகியைச் சிறப்பித்துப் பாடியது]

கட்டளைக்கலித்துறை

431. நீயே துணையென்று நானிருந் தேனென்னை நீமறந்தாய்
தாயே யெனக்கொரு தஞ்சமுண் டோசங்கு சக்கரத்தால்
வேயீன்ற முத்தர்க்கும் விண்ணவர் கண்ணுக்கும் மேதி
நாயேன் றனக்கும் பதிறு லுலகுக்கும் நாயகியே. [னிக்கும்

பெருமாள் பேரில் விடுகவை

[இதுவுமது].

432. விண்ணும் புவனமுங் கொண்டாட மாறன்முன் வேதவிரி
த்தென்னும் பொருள்முற்றும் பட்டோலை கைக்கொண்
[டெழிதிவெளி
பண்ணுந் திரத்தி னிற்கைமா றுண்டோ நம் பழவடியார்
கண்ணுங் கருத்து நிறைந்தாய் மதுர கவிதெய்வமே.

[திருக்கோளூர்ப் பெருமாளைச்சிறப்பித்துப்பாடியது]

கலித்துறை.

433. துதிதவழுஞ் செழுந்தமிழா லறிவிலரை முகந்திருத்தித்
[துடர்ந்துவெந்தீக்
கதிதவழுங் கொடுங்குச்சில காசியனை வோர்ந்துங்கடைக்
[கண்பாராய்
நிதிதவழும் படமகளிர் விளையாடு மணிமாட நீடுமேவான்
மதிதவழுந் திருக்கோளூர் வைத்தமா நிதியேபூ மடந்தை
[யானே.

434. பூவலைய முழுதும்போ யழிவிலரைச் சேடனென்று புகழ்
[வேன்செஞ்சொற்
பாவலரைப் போலுனது பாததா மரைவிரும்பிப் பாடு
[வேனோ
நாவல ரைமறைத் தமிழ்மாலை புனைவேத நாதர்நேமி
மாவலியாற் சென்றிருக்கும் வைத்தமா நிதியேபூ மடந்தை
யானே.

435. விரகிரண மணிமகுட மெனவிளங்கு முலையார்மீ தாசை
[யேறி
நரகில மூந்தியமா பாவிகரை யேறும்வகை யினிதுகூறும்
தெரியுமுது மறைப்பொருளைத் தெரித்தகவி பாடலிரு
[செவியாற்கேட்க
வரியரவில் நடனமிடும் வைத்தமா நிதியேபூ மடந்தை
[யானே.

436. பாலைக் கவர்ந்த மொழிமட மாதரைப் பற்றிநித்த
ஆமலைக் கரும்பென வாடுவ னேஅண்ட மூடுஉலாவு
சோலைக் கருங்குழல் பூமாது கேள்வித் துணரிலஞ்சி
மாலைக் கடவுள் தொழும்புகு மூர்வைத்த மாநிதியே.

437. தேனைத் தொடு முனிமை யென்பார்செறி வேற்பிலையை
கசப்பிதென்பார்
ஊனைத் திரட்டு மல பாண்டத் துயிரின் நிலை சாற்றுவரோ
தானைத் துடிசேரிமை மடவார் ததி யுண்டு ரலிற்கட்டுண்டு
மானைத்துடர்ந்து நடந்துசென் றமாலேவைத்த மாநிதியே.

438. முண்டகமா னவதன மின்னார் வஞ்சகமோ கத்தையுடற்
கொண்ட லையாதுன் னடியார் குழாத்துடன் கூடியின்
[சொல்
விண்டனு கூலம் பெறுவதென் னோகாரி மேனிவரி
வண்டடர் சோலை புகுமூரில் வாழ்வளித்த மாநிதியே.

439. அங்க மனேக வித மாயெடுத் தனியாயஞ் செய்தே
பங்கமுறுத் துங்கத்தாமரையிற் பணிவ தென்றோ
சங்க மடங்கச் செயு மாறர் வேதத்தமிழைச் சேர்
மங்கள மேன்மை புகு மூரில் வாழவைத்த மாநிதியே.

440. அரனைப் பிரமனை மற்றுள்ள தேவரை
அமைத்தளித்த
பரனைப் பரமென வேண்டாது நின்ற
பத்மாசன மானவானைக்
குருகை மகிழ் மாறனை நம்
வகுள திவா
கரனைப் பரவும் புகுமூர்
வைத்த மாநிதியே.

441. பண்ணை வள்ளைக்குழைத்திருவண்ணங்கள்
வாழ்மனையோ வடியாருள்ளக்கிளி
........................................

வண்டுறை யிடமோ அயனூற்று கங்கை
வெள்ளத்தின் மேலரவிந்தங் கொல்லோ
வெண்ணெய் வாரியுண்ட கள்ளபிரானென்றேன்
புகழூரன் பாதக மலங்களே.

442. பாதம ணக்கும் பசுந்தண் டுழாயுரு காதமவ
நீத மணக்குஞ் செழுங்கழனி வாய் நெடு வீதிதொறும்
வேத மணக்குந் தமிழ்புகழூரன் விரிமலர்ப்பூம்
பாதமணக்கு சடோதரிமாலிப்பா கீர்த்தியே.

443. பொய்யும் வடமு மறிவின்மையு
நீங்காதவஞ்சப் புலையன் பாவஞ்
செய்யு நினைவல்ல துண்டேற்
சேவடியைத் தொழ நினைவு சிறிதுண்டா
கொய்யுமலர்ப் பசுந்துளப மணிமார்பர்
கூற்று மீரெழு
வையகமுண் டுமிழ்ந்தழுந்த வைத்த
மாநிதியே பூமடந்தையானே.

வெண்பா

444. கோங்கும் பலாவும் குளிர்கமுகு மோங்கவுயர்
மாங்கனிகள் கீறி வழிந்திடுநற் றேங்கழனி
மேற்பாய்செந் நெல்விளைபுகழூ ரன்பதத்தை
நாற்பாகங் கொண்டேத்து வாய்.

கழிநெடிலாசிரியம்

445. சோதிப் பெருக்காற்ற லைபுரட்டிச்
சுருட்டித் திரட்டிக் கொழுங்கருணை
சுரந்து நிரந்து வரத்தழகு
சொரிந்து சிறந்த திருமுகமுங்
காதிற் பரித்து விரித்தமைத்த
கனக் குமகரக் குண்டலமுங்
காமலைப்பூங் காதை நெஞ்சகத்
தாமரையி லாதி சிறப்பும்
வாதிற் பணைத்த வரையொவ்வா
நீல வரைப் புயத்து
வயங்கு குஞ்சுடராழியும் வளையும்
வனமா லிகையும் பொலியுமோ

வீதிப் பவன வருபுகுழூர்
வேந்தே வைத்த மாநிதியே.

[வேறு]

446. கறைபரவுங் கூர்வேலாம் விழிமடவா
ரசுரநெடுங் கடலை நீந்தித்
துறைபரவுஞ் செழுந்தமிழால் தோத்திரஞ்செய்
துன்பத்திற் றுரும்பு பூணேன்!
நறைபரவுஞ் செழுங்கமலத் திசைமுகத்தோன்
வந்துரைத்த நான்கு வேத
மறைபரவும் புகழ்புகுழூர் வைத்த
மாநிதியே! பூமடந்தை யானே!

[வேறு]

447. பாவிற் கனிந்த சுவைத்தமிழைப்
பண்பாய்த் தெரிந்திப் புவிபுரந்தக்
கோவிற் சிறந்தக் குமணனெனக்
குலமி லோரைத் துதிப்பேனோ?
காவிற் குலவா ளாயிற்குலவுங்
கரும்பிற் சிறந்து வளர்ந்தே
மாவிற் குதிபா யும்புகுழூர்
வாழ்வே! வைத்த மாநிதியே!

[இதுவுமது]

448. குணங்கித் திரியு மறிவீனர்
குணத்தை யறிந்து மவர்களுட
னிணங்கித் தனியாய்ப் பசிதணிக்கு
மியல்பா யலைந்து திரிவேனோ?
அணங்கிற் கமுத வடிவழக
ஞமென் அளகைக் கதிபன்முடி
வணங்கித் துதிக்குந் தமிழ்ப்புகுழூர்
வாழ்வே! வைத்த மாநிதியே!

[இதுவுமது]

449. கரிவண் டிலங்கு முன்கைவனி
தையர்க்குள் மயங்கித் தயங்கியன்பு
புரிவண் டனுக்கு ஞானபுத்தி
போதித் தெனையாட் கொள்வாயோ

தெரிவண் டிலங்கு கெங்கைமடுச்
சினையா மையின் மீதூரி
லரிவண் டிசைபா டும்புகுமூர்
வாழ்வே! வைத்த மாநிதியே!

## வாழ்த்து

### வெண்பா

450. வாழிபுகு மூர்வைத்த மாநிதிமால் நீடூழி
வாழி தமிழ்தேர் மதுரகவி—வாழிதினம்
வாழி குருகைமகிழ் மாலைப்பி ரான்வாழி
வாழியெதி ராசமுனி வன்.

## [இதுவுமது]

### கட்டளைக் கலித்துறை

451. சீர்வாழி தென்புகு மூர்வாழி செல்வம் செழித்தநெடும்
பார்வாழி மால்வைத்த மாநிதி வாழி பழம்பொருளே
நீர்வாழி தென்குருகூர் மாறன் வாழி நிறைந்தமறை
யோர்வாழி சேனையர் கோன்வாழி வாழி யுலகெங்குமே.

## சேனை முதலியாரைப் புகழ்ந்து பாடியது

### கட்டளைக் கலித்துறை

452. வானை முதலளந் தார்க்குவந் தேறு முன்மா தற்செம்
ருனை முதற்கவர்ந்தார் புகுமூ ராசரத் தலரக்கர் [பொற்
கோனை முதன்மை தவிர்த்தே செயித்தமுகுந் தாசேர்ந்த
சேனை முதன்மை தவிர்த்தே சேனைமுதல் தேர்ந்திலமே.

## [இதுவுமது]

453. சேவலவன் சீர்மேற் பார்த்தன் அர்ச்சனை செயவுநறும்
பூவலவென் றயங்தோன் ருதுதன் ண்டிப்போ திற்கண்ட
மாவலவன் புகுமூர் வைத்த மாநிதி மால்குருகை
காவலவன் பணியுஞ் சேனை காவலன் காணிவனே.

### வெண்பா

454. தொணிக்கினி யான்கவி சொர்ணநவ ரத்னனும்
இனியான்மேல் மன்னுபுகு மூர்வைத்—தனிப்போது

போற்றிசெய் வீதிப் புறத்துப் பவனிவந்தார்
நாற்றிசைச் சீர்படைத்த நரன்.

455. வாசவனுர் போற்றமலர் மாதுபுவி மாதுடனே
கேசவனுர்:கோளுக் கினியான்மேல்—நேசமிகத்
தென்புகுமூர் வீதி சிறக்கப் பவனிவந்தார்
இன்புறவே போற்றுநெஞ்ச மே.

### சிங்காசனக் கவிதை

#### விரகதாபமுற்ற தலைவி மீது இரங்கிக் கூறியது
#### கட்டளைக் கலித்துறை

456. சிங்கா சனத்தென் புகுமூர னைக்கண்டு சேர்விதமான்
சங்காழி முத்திரை தரித்தில னேகுல்லை தாமவட்
கிங்காரக் கொம்பயர் கன்னல்வில் லாளிவந் தேறிமுல்லைப்
புங்காவி யுந்தொடுப் பான்விடுப் பான்மட லூர்வதற்கே.

#### [இதுவுமது]

457. சங்காழி யேந்துந் தமிழ்புகு மூதூர் தமனியபொற்
சிங்கா சனத்திற் பவனிவந் தாரவர் சேவைகண்டு
கொங்கார் குழல்பெண் விரகம் பொருள்மடக் கோதை [நல்லீர்
வெங்காம பாணந் துளைக்குங்கொல் லோயிவள் மெய் [யெங்குமே.

### சிங்காசனப் புகழ்ச்சி

#### விருத்தம்

458. நீதிவரத் தாம்புகுமூர் மாமால்
சிங்கா சனத்தின் னென்பர்
வீதிவரத் தாம்பிரசன் வெளியான்
பூங்கமல வேத னிந்திரன்
சோதிவரத் தாம்பணியுஞ் சுடர்ப்பருதி
பார்காணித் தொண்டர் வேத
மோதிவரத் தாம்பலன்பொற் றுளிருமுடி
வணங்குவருள் ளுருகித் தானே.

### செருந்தி வனத்தாள் மீது

#### கட்டளைக் கலித்துறை

459. ஒன்று யிரமுடையோரிங் கணிவ ருலகமெல்லாங்
குன்று தரசு புரிந்தவனேழு றுறையறிந்து

னின்ரு லுனக்குக் குறைவரு மோமணி நீடுமன்று
ணன்ரு டியதவ மாதேதென் குன்றை யகிலவளே.

460. உலரும் வயிற்றுக் கிரைதேடித் தேடி யுடலமெல்லாம்
புலரும் பசிகளை தீர்த்தருள் வாய்விண் புரந்தாரும்
னிலரும் புகழ்தவ மாதே கமலத் தினில்லாமல்
நலரும் செருந்தி வனத்தாய் தென்குறை யகிலவளே.

461. வழிசாருவ தன்றிக் காட்டுட லைந்தும் மதிகலங்கிக்
கழிசேருந் துன்பத்தை நீக்காத னெஞ்சங்கன் னெஞ்
[சென்ருல்
பழிசாரு மப்பழிசாருமது யான்செய்த பாவமெல்லாம்
பழிசார் செருந்தி வனத்தாய் தென்குன்றை யகிலவளே.

462. நீயோ வெகுபிள்ளை பெற்றவள் பிள்ளைகள் நீதியறிந்
தேயோ யினஞ்சேரு பெண்ணு யகருக்கு மிடத்திருந்தாய்
தீயோர் குறைதவிர்த் தார்க்குறை யாமென்ற சேதியறிந்
தாயோ செருந்தி வனத்தாய் தென்குன்றை யகிலவளே.

463. கோமே தயமுக மாதே யெனது துயர்தவிர்த்தால்
நோமோ நினது திருவறம் வாழ்வுயிர் நோவதன்றிச்
சாமோ வப்பால் நின்கணருட் கடாட்சம் தனைத்திறக்க
லாமோ செருந்தி வனத்தாய் தென்குன்றை யகிலவளே.

### நாகலிங்கப் பரமேசுரன் தோத்திரம்

### கொச்சகம்

464. யோக லிங்க பெரியவளுக்
குண்மை லிங்க மெந்தனுக்குத்
தாக லிங்க மென்றதெல்லாந்
தாக லிங்க மென்நடுறு
மாகலிங்க மென்றனுயர்
மாதரைத் தானணிந்த
நாக லிங்கம் பேரைவளர்
நாக பரமே சுரனே.

### யோகராசர் பேரில் கழிநெடில்

465. வையமே துதிக்க வசைந்தசைந் தாடி
வசந்தமடைச் சாதினுக் கொருநாள்
வரும்பொழு தங்கோர் சல்லாப மதன
சஞ்சீவி ரஞ்சிதப்பெண்

சைகைசெய் ததுவு மதற்குநீர் கடைக்கண்
சாடைசெய் ததுவும் நேத்திரவு
தனித்தவள் எந்த னரசினி லுமது
சமஸ்தானந் தன்னில் வந்ததுவும்
பையவே வவட்கு சிலதுடம் படிக்கை
பண்ணின விதங்களு மறிவேன்
பாண்டியன் முன்னே நரிபரி செய்த
பகட்டென் பகட்டுநீர் போம்போம்.
அய்யனே யின்ன மோரெரு திருந்தால்
தாட்டுது பொறும் பொறும்.........
நிறைசெல் வந்தித்தோ டழகா
அமரர்கள் பணிபதாம் புயனே.

466. எங்கணுங்..............தொருகிழ மாடு
..................................
யிடையுடை புலித்தோ லணிவது சாம்ப
லிடுபணி யெலும்போ டக்கரவம்
பங்கய வதனுட் கென்னபொய் சொன்னீர்
பளாபளா கெட்டியாச் சுமது
பகட்டும் வெள்ளுறுபடுங் கண்டவள் மலைத்தாள்
பக்குவ மறந்தவ ளல்ல
சங்கதித் தப்பால் யென்னிடத் தினிலுஞ்
ச.........ரெட்டன மிரட்டுகிறீர்
சபாசுமெ.........வெல்லாமென் றேட்டில்
தான்வரைந் தால்ருசி தருமோ
அங்கவ ளெனைப்போல் சசிக்கறி யாளவ
.........ரோங்க ராச சாரு
ரண்ணலே நிறைசெல் வந்தித்தோ டழகா
வமரர்கள் பணிபதாம் புயனே.

467. தேவ............வித்தை சொல்லும்
தேசமுண் டெனக்குச் சிறிதுநாள்
மாய னிடத்தினி லிருந்தீர்
தேவர்கோ னிடத்தினில் சென்றீர்
மூவுலகறிய தேத்துமாத் துரைத்து
முசுகுந்தன் நிலத்தில் வந்தீர்
முதுமறை துலங்கும் கமலையம் பதியை
மூதன்மையென் றலிங்கவைத் திருந்தீர்

நாவலன் றிசையிலு மதுவிசு வாச
நடத்தைகள் சகலமு மறிவார்
நாடறிந் தவரென் றறிந்திருந் தநேக
நாள்முதல் நீகெதி யென்று
ஆவலாய் வாரி கட்டின கோட்டை
யநேகமுண் டெனக்கினியா ரண்ணலே.

468. செகமெலா மும்மைத் தியாகரென் றுரைத்தார்
தேவரீர் மகத்துவ மறியார்
தரித்திரம் பிடித்துத் தாருகா வனத்திற்
சென்றிரந் துண்டுமிவ் வுலகில்
புகலிட மில்லாப் புத்திடங் கொண்ட
புதுமைக ளனேகமுண் டின்னம்
புனிதனே கொடுத்து இழிந்துதுபூரை
பூரையம் மட்டிலே நில்லும்
தகமையா யென்னைச் சேலைதொட் டிழுக்கத்
தகாதினிப் பழிவருஞ் சொன்னேன்
அடிக்கடி முன்போல் நடக்கறி யர்து
தப்பித மொருபிழை பொறுத்தேன்
அகமகிழ்ந் தவடன் றுறைவகை நானே
யறியுறேன் பொறு மாறேன்
நேத்துநான் கமலை தடத்தினில் குடத்தில்
நீரெடுத்து......................—

469. நிமிரும் பொழுது மேலைவா சலில்நீர்
நின்றுகண் காட்டி சைகை
பார்த்தொரு மாது கண்ணொடு கண்ணோக்கிப்
பகர்ந்தன ளதுசகிக் கிலையாய்
பரபரப் பாகி ஊரெலா மறியப்
பண்ணிநீ ரதுவுமக் கடவே
சாஸ்திர வேத புராண வாகமங்கள்
சகலமு மறிந்தநீர் பித்த
சரீரமோ இனிமே லாகிலு மிந்த
சசிக்கினை தன்னை விட்டுவிடும்
ஆத்திவெள் ளெருக்கு கரந்தைபொற் கொன்றை
யணிசடைக் கடவுளே யாரூ
ரண்ணலே நிறைசெல் வந்தித்தேர் டழகா
வமரர்கள் பணிபாதாம் புயனே.

470. நாடறிந் தவளென் மாமிபொல் லாத
நங்கையென் னாத்தியென் கொழுநன்
நமனெனைக் கொண்ட கணவனோ வேட்டை
நாயது...........லங்கம்.........
சாடைகண் டழுக்கம் பிடிப்பனென் மாமன்
தறுவிலி யெனக்கொரு தோழி
சாடவுல கெல்லாம் பம்பர மாட்ட
தக்கவர் நீரெனக் கொருத்தர்
வாடகை யாகத் தொடருறீ ரெனக்கு
வாச்சுது வும்மைநான் நோக
வழக்கிலை யெந்தன் சிரத்தினில் பொறித்த
வஞ்சகந் தனைச்சொல வேணும்
ஆடர வசைய கணீர் கணீரென் றாடிய
மூர்த்தியென் றொரு ரண்ணலே.

471. மரகத மேனி யுமையிட மிருக்க
மணிமுடிச் சடையின்மேல் கங்கை
மங்கையங் கிருக்க தேவரீர்க் குகந்த
வைப்பாட்டி நானருகினி லிருக்க
வரவர மிகுந்த மயல்வரு வானேன
மார்பினில் குவடுறை வானேன்
மடிமுடி சூட்டி மலர்குலை வானேன்
...............பெறு வானேன்
பரபரப் பாக திரிவதேன் முன்னாள்
பயித்திய வந்துமே லிடுதோ
பாலுவதன் னிடத்தில் தூதுசென் றந்தப்
பாடமுற் பத்தியா னதுவோ
அரிதொழு மாற்றிசிம் மாசனப் பொருளி
னருமறை தேடிடு மாரு ரண்ணலே.

472. முத்துமூக் குத்தி கொந்தள வோலை
முன்கை மூதாரி கட்டுவடம்
மோகன மாலை சவடிசிந் தாக்கு
முத்திரை மோதிர மரைஞா
ணித்தனை விதமுங் கொடுத்தவ ளெனக்கு
யில்லையென் றேமழு வெடுத்தீ
ரென்றுமிப் படியே தந்திரத் துடனே
யேறவிட் டேணியை வாங்கித்
தெத்துமாத் துரைத்தீர் சகலசீ வனுங்குந்
தேவரீர் பொதுவலோ வலது

சித்தமென் பாக்கிய மெனக்குனை யல்லால்
திருவுள வேறுமொன் றில்லை
அத்தனே செம்பொற் கம்பிகா தழகுத்
தய்யனே கமலைகு மூரூ ரண்ணலே.

473. அரிவையங் கொருத்தி டில்லியர் கரைப்பெண்
அவளைவைப் பென்றுதான் மெள்ள
ஆசுவாய் கேட்டேன் கண்ணினால் காணேன்
அய்யனின் திருவந்திக் காப்பிற்
பரிமள களபங் குமுகுமென் படீரக்
குங்கு மக்குவ டசைய
பரிமணி சதங்கை க்லகல கலவென
பரிபுரம் கில்லொலி குமுற
சரசசல் லாப கேளியில் லதனச்
சரிகையென் றேருதிட வொருபெண்
சம்பிர மகல.................தன்றூடது
சன்னதி வாசலில் கண்டேன்
அரியயன் றேடர்க் கரிய...........டைக்
...........ஆரூ ரண்ணலே.

474. வச்சிர முகப்பு மேடையி லொயிலாய்
வந்தெனை முந்தநாள் கலந்த
மார்க்க மென்னினைய நாத்திகண் டெனது
மருதைஎனக் குரைத்தா ளென்ன
லச்சைகள் வருதோ அடிக்கடி யிந்த
நடத்தைகள் தன்னை விட்டுவிடும்
நானுமின் றிரவு கணவனைத் தப்பிக்
கசிதமா யெழுந்தினி தாக
நிச்சய மாக வருகிறேன் நீர்முன்
னிலவரந் தன்னிலே நில்லும்
நிம்மதி யாக வணையலா மன்று
நிறைமணிக் கோவிலுக் கேகும்
அச்சுதன் வேதன் உருத்திரன் மயேசன்
அருள்சதா சிவநிறை யாரூ ரண்ணலே.

475. துடியிடைப் பெண்மடவார் வேள்முத்து வீரன்
சுதன்மருவு நகர்புரிக்கிறை வனதுறை
நெடிய புகழ்வேள் பூச்சைய மாலான்கழல்
நினைத்தென்று யெலாங்கொடுக்கு நீலமேகம்

வாடையங்க சனிகரா மருதுபாண் டியராயன் வளைந்த
[தென்னர்
கேடையங்கைக் கொண்டாலுங் கேடையந்தா னிலை
[யன்றே இட்டும் வாடி
ஊடையமுங் கோட்டையு விட்டோடி மலைவா யொதுங்
குவாரே.

[இதுவுமது]

481. சேலெடுக்கு மீனவன் பொற்சிகரம் புரந்து மனுநீதஞ்
[செலுத்தியேசெங்
கோலெடுக்குங் குரிசிலெங்கள் மருதுபாண் டியராயன்
[குலவுகையில்
வேலெடுக்க வொன்னலர்கள் விருதெடுக்க வஞ்சிவஞ்சி
[வீடுசேரக்
காலெடுக்க வொட்டாது கையெடுத்து வேண்டிநின்று
[கலங்குவாரே.

மருதுபாண்டியன் கொடைச் சிறப்புக் கூறுதல்

482. செய்ப்பானல் மலர்நறுந்தேன் றுளிதுளிக்கும் விசுவை
[நகர் செல்வா செம்பொன்
வைப்பாகு மேருநிகர் மருதுபாண் டியபுலவர் மாட்சி கூடல்
மெய்ப்பாக விளங்குசொர்ணக் காலதனுற் படியளந்த
[விதந்தான் பொய்யோ?
கைப்பரவுங் கயறுகொண் டுமிளவளந் தாலதுகால்
[கண்ட தாமே.

483. புஞ்சை யளந்த மன்றுட வந்த புலவர் தம்மை
நஞ்சை வரிக்குத் துயர்ந்தா லதுக்கினி நாமென்
[செய்வோம்
பொன்செய் உதாரி விசுவை மருதப்ப பூபதி நின்செயலே
அன்றி வேறு தரவில்லை நிச்சயமே.

[இதுவுமது]

விருத்தம்

484. வில்முகத்தின் ரெகுராமா மருதுபாண் டியமகிபா
விளம்பக் கேண்மோ!
பொன்முகத்தை யறியாத புலையரிடம் போயலைந்தும்
புகழுண் டாமோ!

மின்முகத்தின் தாழையென மனைமுகத்தின் பயிரெனவே விலங்கு தாயர்
நன்முகத்தின் பிள்ளையுன் முகத்தையாங் கள்கண்டே நலம்பெற் றேமே.

[இதுவுமது]

485. தருமாதங் கமலையினுள் மகிழ்வர்
தனஞ்செய நீதானே யென்ன
வருமாதக் கஞ்சமுகிழ் முலைமீதுன்
னணியவட மயலா ளுள்மே
லொருமாதங் கம்மியன்கை வரிசையென
மதன்கணைபோ யுலாவு கோலத்
திருமாதங் கமைந்துறையு மருதுபாண்
டியவுனது சித்தந் தானே.

காதலுற்ற பெண் மருதுபாண்டியனிடத்தில் தூதுவிடுத்தல்

486. வருதுரைத்தும் படையெடுத்தும் மாமதனன்
காவற்றே ரின்மேவிப் பின்னும்
பொருதவென்றே கூடாரம் போட்டெனது
பூஞ்சோலைக் குள்புகுந்தான் புகுமுனே தான்
கருதம்பி நிலக்கமதற் கிலக்கானேன்
கலைவளையுங் காணே னென்று
மருதுபாண் டியனிடத்தில் சொலவேணும்
பெண்ணேயென் மயலைத் தானே.

[இதுவுமது]

487. காயுமா மதிதாவக் கருப்பு வில்லைக் குனித்துமதன் [கணைகளேவ
நேயமாய்க் குயில்கூவ நேர்ந்தவப் புலிபாய நெட்டூரியெங்க
ளாயுமாங் கலைமறந்தேன் அம்பொன்வளை தனையிழந்தேன் [அனமே நீபோய்த்
தாயுமா யாதரிக்கு மருதுபாண் டியனைவரத் தான்சொல் [வாயே.

மருதுபாண்டியன் குறைதீரய முரைத்தல்

488. கொட்டமிடு துட்டர்களைக் குறடாவி லடித்துக் குண [மிக்கோர்க்குத்
திட்டமுட னுபசாரஞ் செய்யவுனைப் போலுமிந்த ஜெகத் [தில் காணேன்

வட்டமுலை மட்வார்கள் மடலெழுது அபிராமா! [வரிசையாள!
அட்டதிசை யோர்புகழும் மருதுபாண் டியகிருபா [அரசரேறே!

## தலைவிகூற்று

### வெண்பா.

489. வேண்டு புகழ்சேர் விருதரச னுமருது
பாண்டியனைக் கண்ட திருப் பாவையாள்—ஆண்டஞ்சே
ரல்லா தகலா ததிசெயித்தே கம்பிதமும்
மல்லாடி நின்றசைத்த வாறு.

## இராசப்பபிள்ளைபேரில் கலித்துறை

490. சென்றோ தும்வாணர் செழிப்ப வளர்தரு சிங்கமன்னு
மன்னூர் குவளை யணியுமி ராசப்பமன் னன்வெற்பில்
குன்றாத வேர்வையு மாமதச் சேருங் கொடுத்தசுனை
சென்றாட நீபெற்ற சோபந் தரானன்று சேயிழையே.

491. சோமன் தனக்கு நிகர்மீட்ட பூபன் சுகிர்தபலக்
காம னெனவரு ராச மகிபதி கார்வரைமேல்
நாமின்று பெற்றனஞ் சிந்தா மணிகையில் நன்னுதலே
ஆமென்றவ ரின்றைக் கல்லவென் னுலென் ஆச்சரியமே.

492. இமையா சலத்தினில் கங்கையொப் பாகவெழு கோலக் [கொம்
பமையா ருஞ்செய் பவனியைக் கண்டாலய லார்களெல் [லாஞ்
சுமையாரத் தனநிரை கொடுப்பார் திரிசூ லங்கைக்கொள்
உமையார் போற்று மிராசப்ப பூபன்ற னூரெங்குமே.

493. குற்றம் பலஞ்செய் அராமணி வாங்கிக் கொடுத்தபுகழ்
சுற்றம் பலரு மறியச்செய் ராசப்ப துங்கன்வெற்பில்
சிற்றம் பலமுங் குடந்தையும் நாகத் திருவிருப்பி
லுற்றம் பலங்கள் பெருமுது குன்றம் ஒருப்பட்டதே.

494. அர்த்த சகாயஞ் சரீர சகாயம் அதுவன்றியே
நித்தமும் வாக்குச் சகாயஞ் செய்தான்நன் னிலைமைபெற
முத்தமிழ் மல்லைக் கவிரா சனுக்குமுன் போலுதவுஞ்
சத்திய வாசகன் மீட்டப்ப ராசசிந் தாமணியே,

## சங்கரலிங்கத் தம்பிரான் பேரிற் பதம்

495. நின்னுடைய யோக்மே யோகம்—புவிமீதில்
நீ யெடுத்த தேகமே தேகம்
நன்னையச் சொரூபனென்றே—பொன்னுலகில் நின்
துன்னிய சங்கரலிங்க மன்னனும் ராசரிஷியே [புகழ்ச்சி
தான தர்மத்திலே காதலுங்—காதப்படியே
தானியத்தை யீதலும்—நான்முறைகள் நிதமோதலும்
ஓதியுணர்ந்து நூலின்வழிதனை தப்பாதலுஞ்
சர்க்கரைப் பந்தலில் தேன்மழை பெய்தெனக்
காம தேனுவைப் போலவே கொடையும்
ஞானமுஞ் சேர்ந்ததனாலும் (நின்னுடை)

காளிசூழ் மதுரேசன் பாலும் திருமனதைச்
சானித்திய மாய்வைப் பதனாலும்
சாலவுங்கருணை மேன்மேலும் செய்வதனாலும்
தங்கப் பல்லக்கேறு வதனாலும்
வாவிதம் பழம்நழுவி பாலிலே விழுந்தாலென்ன
மொழிமன்னர் தொழுயோக சாலியாயிருப்பதாலும்
(நின்னுடைய)

ஆசுமுதற் கவுத்துவஞ் சேர்ந்ததும் அதனுடனே
அற்புதத்துறவு சரீரந்தந்ததும்—பேசு
பிறவிதுயர் தீர்த்ததும் அற்புதரென்று
பிரபல பேருக்கு மார்ந்ததுவும்
தேசம்புகழ்கின்ற தியாகராச முனியருள் பெற்ற
நேசனும் சங்கரலிங்க ராசராச முனிவனே. (நின்னுடைய)

விந்தை சேர்மல்லை யூரினிற் தூயா !
வேள்குழந்தை கவிராய நின்னேயா !
வசைக்காரியா மவளிடம் தூது விடுத்தீர் !
வலியச்சிறிது ரொக்கம் பொன்கட்டி கொடுத்தீர் !
இகத்தாளம் பேசியென்மேல் வன்மங் கொடுத்தீர் !
எவ்வன காலத்தி லேன்வந்து அடுத்தீர் !
ஞாயமோ ? சம்பிரதாயமோ ? சொல்லுபாயமோ ?
யென்ன மாயமோ ? தெரியாது (நின்னுடைய)

அங்கே அந்தமங்கை வீட்டினில் வாசம்
ஆதியந்த மவள்மீதினி லேவைத்தீர் நேசம்
இங்கே ஏன்வந்தீர் கண்டக்கால் மோசம்

என்ன காணுமிந்த விண்பரி யாசம்
ஏற்குமோ மார்க்கமோ சொல்லும்
ஆர்க்குமோ இது பார்க்குமிடத்தில் போம்போம் (நின்னு)

சுந்தரா மணிகர்தென்மல்லை யூரா !
துருவனுன மங்கை பாகன் குமாரா !
சந்திர வதன அரிச்சந்திர குபேரா !
சாமிக் குழந்தை கவிராச வசீகரா !
போட்டியோ யென்மேல் மேட்டியோ வெகுகோட்டியோ
வலுவிலாட்டி பண்ணுறீர் போதும் போதும் (நின்னு)

கொங்கணரும் சிங்களரும் கேரளரும் சோழரும்
கொங்கணர் சீனர் தங்கனமாய்த் திறைகொடுக்க
கொலுவிருந் தென்குளந்தைச் சிவானேந்திரன்
றுங்கனமாய்க் காப்பணிந்த நாள்முதலாய்த்
தியாக மழைமாரி பெய்யக் கங்கணங்கட்டிய கரத்தில்மான்
வயிரப் பொற்காப்புங் கட்டினனே. (நின்னு)

## தெய்வச்சிலையான் தோத்திரம்

496. கொத்தானைப் புரந்தானைத் துழாய்க் கொத்தானைத்
[திருமேனி குளிர்ந்த மேகம்
ஒத்தானைப் பாண்டவர்கைக் கொத்தானை யுகந்தோறும்
[உதித்த தோற்றம்
பத்தானை மலர்மகள்சம் பத்தானைக் கரத்திலிடப்
[பக்கமேனும்
எத்தானுங் கெர்ப்பசய வைத்தானை நாரணனை
[நம்பினேமே.

## [இதுவுமது]

497. அலையானைத் துயில்கொளும்பா லலையானைத் துதித்
[திறைஞ்சு மடியார் தங்க
மலையானை வளர்ந்தசெங்க மலையானை யெவராலும்
[மகிமைகூரத்
தொலையானைக் கயவருக்குந் துலையானைக் கடலில்கால்
[தூக்கிப் போட்ட
சிலையானைத் துரந்த தெய்வச் சிலையானை நினைக்குமெந்தன்
[சிந்தை தானே,

### குமாரலிங்கேந்திரனைப் புகழ்ந்து பாடியது

கலித்துறை

498. செந்திரும ராயன் புகழ் சூழ் வேதியர்குல தீபனலும்
அந்தியில் வைத்த பராக்ரம சாலியிப் பூதலத்தில்
இந்திர னைகு மாரலிங் கேந்திர னென் றுமெச்சுந்
தந்திர மந்திர சாமள னைத்யாகிதியே.

[இதுவுமது]

499. வந்துவந் துபாயும் வாளிவா ளிதைக்க
நொந்துயெந்தன் பந்துமுலைக் குந்தனமரும் பங்கயா
இந்திராகுமா ரலிங்கமெங் கள் துரைக் கேத்தநல்ல
தந்திரஞ் செய்யே சாமள தயா நிதியே.

### காளத்திநாதர்க்கு, அவர்பாற்காதற் கொண்ட தலைவி தந்நிலைமையைச் சாற்றல்

விருத்தம்

500. குஞ்சுமா தங்கத்தி னகத்திடுமே பெருங்
கோகிலத் தொனிக்கென் செய்வாள்தா னேழை
அஞ்சுமா தங்கத் திகைக் கொன் றைக்குய
லட்டுள் ளதரெலாஞ் சும்மா வருமா
கொஞ்சுமா தங்கத் திறைமுத லான்து
கொண்டு வந்தவர் கண்டிட மும்மதம்
மிஞ்சுமா தங்கத்தில் வருமெங் காளத்தி
வேந்தனே யெங்கள்ஞா னமீனகர் நாதனே.

### தோழிகூற்று

கலித்துறை

501. கோகனகக் கொம்புதாங்கும் புயன்கொங் கரங்க மெல்லாம்
காகனங் கண்ட கண்டன் பொருப்பினில் காரிகையின்
மோகனக முல்லை நகக் கண்டு மனம்விண்டு மீண்டிரே
மாகனகப் பொருட்பாலே வஞ்சகரே.

### குமாரலிங்க பூபதியைச் சிறப்பித்துப் பாடியது

கொர்ச்சகம்

502. நித்த நித்த மாயோடி நீதயவா யெனக்கு
குத்துமுலை முத்தமிட லாகாதோ
அத்துவசனர் கொண்டாடி........நிசைநகர்
கொத்தலர்தார் மார்பா குமாரலிங்க பூபதியே.

[இதுவுமது]

கழிநெடில்

503. சீருக்கு மிக்கான மக்காத்தி னல்லாவைத்
திசை நோக்கி நீர்தொழுது
தெய்வவடி வாகவரு நபியருள் பெற்றுத்
திகாந்த மும்பெ ராகியே
பாருக்குள் வருசீமை யெங்குமொரு குடைக்குளே
பரிந்தரசு புரிய வந்தப்
பண்ணைசெறி நவாபினுட சமுகமிக மகிழ்வொடு
சபர்சென்று மெய்ப்ப தாகிக்
காருக்கு நிகர்கொடையும் மூதறிவுப் பேரூரகளும்
கல்வியொடு செல்வ மோங்கிக்
கதிக்கும் குமாரலிங் கேந்திர துரை சிந்தைபுகழ்
கனவரிசை கொண்டு தினமும்
ஆருக்கு மனுகூல நீசகுணம் பெற்றுநீ
யவனியிற் கீர்த்தி பெற்றாய்
அஞ்சுகவேள் சொரூப ரஞ்சிதயோ கசாலி
சஞ்சருக் கான மகிபனே.

[இதுவுமது]

கொச்சகம்

504. தேட்ட மிகவோ சீமாட்டி ஆசைகட
லோட்ட மதுவோ உமக்கவன் தீக்ஷாகுருவோ
வேட்டமோ நானுமக்கு வேசையவள் வீடுகண
கூட்டமோ வெங்கள் குமாரரா சேந்திரரே.

[இதுவுமது]

505. ஆசார விடாச் சாறனைத்தாய் பாச்சவற்கு
ராசாங்க மாச்சே நாகரிகம் பேசாளோ
பேசாத பேச்செல்லாம் பேசுமவள் நாவுசற்றும்
கூசாளே போம்போம் குமாரரா சேந்திரனே.

[இதுவுமது]

506. மோகனக் கண்ணையுமை முத்தாடிக் கொள்ளநல்ல
நாகரிகக் காரிகைக் காரியே அறியேன்
வாகனகு மாரலிங்க ராசன் மெச்சவரு
கோகனக மாதுறையும் குமாரரா சேந்திரனே.

[இதுவுமது]

507. நத்திட்டு மோலையிட்டு நாகரிகப் பொட்டையிட்ட
பத்திட்ட கள்ளிவகைப் பாசாங்கு நானறிவேன்
வித்துவசனர் கொண்டாடும் விதானிகர் என்னவந்த
கர்த்தனகு மாரரா சேந்திரகர் ஞதருவே.

[இதுவுமது]

508. நட்டணையு மொடிநடையு மில்லா மேட்டிமையு
மட்டதொரு முக்காடு மேறுட்டப் பேச்சுவிடு
மட்டமிவர்க் கித்தனையும் வந்ததுநீ ரொருநாள்
தொட்டதோ குமாரரா சேந்திரஞ சுதாகரனே.

மருதுபாண்டியனைப் புகழ்ந்து பாடியது
கழிநெடில் விருத்தம்

509. பதிறு லுலோகத் தய்யகோர்
படக்கேட னுச்சி குளிரப்
பாதாள கங்கை நிறை பாற்கட லெனப்பெயர்
பகர்வள்ளி யூர ணியிலே
மதியாத வனபட்சம் பசுப்பி ராமணர்பின்
வருசீவ கோடி யாவும்
வந்துசிவ பானுசெய் தரி............
............னையுரைக் காணிதோ
துதிமேவு தென்னே றிசைவரு நல்ல
ராச ராசனும் சோமகிரி
யாத............கி
சுகவாழ்வு பெருக வந்தாய்
நிதிமேவு செங்கையான் நந்தகோ பாலகுல
நீதிமான் வலசை நகரான்
நேர்வள்ளி கோனுதவு கான்வள் ளி யப்பனே
நித்திய க்லியாண குணனே.

குமார சிங்கத்துரையால் புகழப்பட்ட, உருபாய பூபதியைப் பாடியது
விருத்தம்

510. சுந்தரமன் மதரூபா•சரசகுண
சல்லாபா குணசுமுக பூபா
சுந்தரநேர் செங்கையனே காதல்நேர்
பங்கயனே கனக மேரு

சிந்தைமகிழ் மகபதி அல்லாவைத்
தொழுதுவெகு செயமே பெற்ற
தந்திரியே குமாரசிங்கத் துரைபுகழுந்
தாரூபாய் தயவுளானே!

உருபாய பூபதி மீது காதலுற்றவள் கூறுங்கூற்று
கொச்சகம்

511. மெத்தமயல் வீசுதடா வீசுதென்றல் சீறுதடா!
குத்துமுலை விம்முதடா! கூடிமுத்தந் தாவாடா
வித்(து) வசன் தங்களுக்கு வெங்கலி தீர்குடை
கற்றவா சியெனுங் காதரூபாய் பூபதியே!

தொண்டைமான் சமூகத்தைப் புகழ்ந்து பாடியது
எழுசீர்க் கழிநெடில் விருத்தம்

512. வட்டமிடு பூச்சக்கிர வட்டமொரு பூச்சக்கிர
வட்டமிழ விட்ட சமூகம்
மருமண்ட லாதிபர்கள் வருமண்ட கேடியர்
மகுடமுடி சூட்டு சமூகம்
இட்டமிகு பாஞ்சால கிட்டினனெனன் மடமாதர்
இன்சொலுரை மிஞ்சு சமூகம்
எண்ணேழு தேசரா சாதிபர்கள் பூலோக
இந்திரனென வாழ்த்து சமூகம்
கட்டிகிதி பரிவீய்ந்து தஞ்சமகா ராசனெதிர்
கண்டுகொள வந்த சமூகம்
காட்சிபெறு சேதுவுக் கரசென்று பட்டமே
கட்டிவிரு திட்ட சமூகம்
துட்டனெனு மெமபடன் முடிவெட்டி விருதிட்ட
சுந்தர மிகுந்த சமூகம்
துரைராச விசையதிரு மலைராய பரதருவு
தொண்டை மான் துரை சமூகமே.

இரகுநாத சேதுபதி மீது இரங்கற்பா
வெண்பா

513. விற்பனமுங் கல்வி விதட்சணமும் பேசுநய
அற்புதமு நல்லறிவு மாண்மைகளும்—பற்பலநூல்
செப்பியல்புங் கொண்டு பரஞ்சேர்ந்தாய் வழுதிமன்னா!
வெப்பிறப்பில் காண்ப தினி.

[இதுவுமது]

514. தாது வருடந் தனிற்சித் திரைமாதம்
ஓதுபவ ண்மை யுற்றநாள் மீதார்ந்த
தொந்திலிங்க மாங்குழந்தைச் சோமனருள் வழுதி
அந்தமிகு பூரணத்துற் றுன்.

விருத்தம்

515. வருதாது வருடமதில் மேடத்தி லிங்கன்
மலிதிங்கள் நாலேழிற் சோமவாராம்
பருவமுயர் சித்திரா பர்வமாம் பூருவ
பட்சத்தில் விசாகநாட் பலனென்பவாம்.

திருமாமலைக் காங்கேயனைப் புகழ்ந்து பாடியது

கட்டளைக்கலித்துறை

516. தண்டில் குனில்கொண்டு கல்லாப் புதல்வரைத் தாதை [யர்கள்
கண்டித்து உன்னடி யார்பதம் போற்றக்கரு தல்செய்யரர்
மண்டில்குனில் கொண்டு தோல்மரத் தாற் செய்த வாத் [தியமுங்
கண்டிக்கப் பேசுங் கண்டாய் திருமாமலைக் காங்கேயனே.

நீக்கப்படும் பொருள்கள்

வெண்பா

517. துற்சனரைப் பொன்னைத் துடியைத் துரக்கத்தை
அச்சமுடன் வீற்றிருக்கு மாயிழையை—யிச்சையுடன்
கண்டித்த வெள்ளைக் கரும்பைச் சிறுபயலைத்
தெண்டித்தாற் கல்லோ திறம்.

பேயரென்றிகழப்படுவோர்

[இதுவுமது]

518. தன்னைப் புகழ்வானுஞ் சாணேறி நிற்பானும்
பொன்னைப் புதைத்துரைத்துப் போவானும்-ஒன்னலரை
நண்புற் றிருப்பானும் நாரியர்தோள் சேர்வானும்
பெண்புத்தி கேட்பானும் பேய்

வடுகநாதக் குரிசிலைப் புகழ்ந்து பாடியது
எழுசீர்க்கழிநெடில் விருத்தம்

519. கரடகுஞ் சரமேவு தேவேந்தி ராக்கினைக்
காயாபி மான கர்மம்
காரிய துரந்தரீ காவிசைய தோள்தண்டக்
கவிகர்த்த லக்ஷண வாக்கிய!
சுரதபா தாளமந் தார! மத்திம தார!
சுந்தர! விலாச பாடி
துணைவயித் தியலிங்க விற்பன சுபத்திமிகு
சுதாகர! சகோதர! செயா
இரதகச துரகதச் சேனை சமுத்திர
விராகவ சமான சங்க
இரத்தின சனப்பலகை யுற்றே செயம்பெருகு
எங்கோ னெமக்கருள் செய்வாய்
வரதசிவ குருநாதா இரதிமதி சுரனை
வளமை செறிகவி மேகமே!
மதுரபா கத்திலுயர் கவிதைமா ரிப்பிரபல!
வடுக னுதக் குரிசிலே!

[இதுவுமது]

520. சாதுசங் கத்திலெழில் சேருதுங் ககரட
தந்தா வளத்தி லகமே
சந்தான தாரென்ன அபிமான மேபெருகு
செயதர னனினவ தனனே! யெப்
போது மனந்தாத சத்தள கமனைற் பெண்
பொருந்து நாமக ளுலாவு
பூரித விநோத சம்பாஷணை சிகர!
விபூஷண சமான முகிலே!

521. தாதிசுவரா வெகு தானியறு மாதிபா!
தார்வேந்த பணிவி டைக்கு
இஷ்ட காமிய மெல்லா முதவுசிந்
தித்த தானுசரி கிருபா!
வாதுலவு நாவலர்கள் சமுதாய மீதுனவ
மானசிந் தாமணியருள்
மதுரபா கத்தினுயர் கவிதைமா ரிப்பிரபல!
வடுகநா தக்குரிசிலே!

[இதுவுமது]

522. மோகன மனோபேதம் மாலினி மகாசமம்
முதன்மை மயாசம் பிரம
முங்கால சாரகுண மகாமத மஞ்சனமும்
தந்திர பேதத் தத்துவம்

யோகினி கலாவாத பாதுகை பரகாய!
யோக சாதனை சோதிடம்
உண்மைநிர் ணயமாகும் வேதாந்தம் சித்தாந்தம்
ஓதுஅறு பத்துநாலாய்

தாகுங் கலைக்கியான மும்பெருங் புகழ்செயச்
சங்கீத சாயித்திய நீதஞ்
சிறந்திடு வயித்திய லிங்க கவிராச!
சந்திர சகோத ரசயா!

வாகைமா லிகைகுவளை மாலிகை இயங்குபுய
வரையில் ருத்திர ராட்சமணியு
மதுரபா கத்தினுயர் கவிதைமா ரிப்பிரபல!
வடுக னாதக் குரிசிலே!

[இதுவுமது]

523. சகலப் தரபந்த வாக்கியனு சிதம்வாணி
தங்கு சென்று வல்லமை
சதுஷ்டயக் கவிகோடி திறுத்தியே நொடிக்குளே
சகஸ்திர கவிபொழியுமே

பகனினந் தாவுதா ரான்மகா பிரசங்க
பாக்கிய சம்பன்ன வெளித!
பண்பார்வைத் தியலிங்கேந் திரமால் துணைபெறு
பாற்றுன மான சுகுண!

செகதலம் புகழ்ஒரு கவிபாடி மதயானை
திரைகெண்ட சாம்பிராச் சியனே!
செந்தமிழ்க் கவிஞர் மனமகிழ்வர் திரஉபைய
சிரமேவு பாகு சோமன்

மகிமைபெறு துணைராம லிங்கமதி னுலெமது
வரிசையைங் கலநெ லருள்வாய்
மதுரபாகத் திலுயர்கவி தைமாரிப் பிரபல
வடுகனாதக் குரிசிலே.

[இதுவுமது]

524. வந்தே யுவந்தே தவழ்ந்தே வளர்ந்தேநீ
வந்தே சிறந்து மேகம்
வளைந்தே பொழிந்தே நிறைந்தே மகிழ்ந்திலகு
வாவிசூழ் மிதிலை வளமை
னந்தாதி யுந்தே சுகந்தாதி யுந்தரா
ணிந்தே வளர்ந்தேறுபூ
நந்தா! அனந்தா! செகந்தானு கந்தே
புகழ்ந்தே நயந்த தந்திரா!
இந்தே யிருந்தே பணிந்தே மகிழ்ந்துமதி
எந்தேயும் விந்தை முகமென்
றிந்திராதி யுந்தேவர் சந்தேக மன்றியே
சந்தோஷ மெனுஞ்சு முகனே!
மைந்தே படிந்தே திரண்டே விளங்குடைய
மந்தார தருமந் திரியே
மதுரபா கத்திலுயர் கவிதைமா ரிப்பிரபல!
வடுக னுதக் குரிசிலே.

[இதுவுமது]

525. பஞ்சகதி கொண்டுகட லுஞ்சகதி யாகவே
பாய்ந்து சிவனென்றுகை
பாதாள லோகாதி சேடாதி சேடன்
பணமுடியில் நெறுநெறென்ன
அஞ்சுகதி ராதித்த மண்டல மெலாந்துளி
அளாவு பொழுதயி ராபதன்
அச்சண மகிழ்ச்சி கொடுவச் சிரதர னுகமல
ரங்கைகொடெட் டுக்கருத்திரி
கொஞ்சுனகை மிஞ்சுகில தாபமுறை சமனமால்
குபீரென் றெழுந்தருளுபூ
கோளமண் டலனுற்பண் வடகுவடு கிடுகிடென
குதிகொண்ட கொண்டலென்ற
மஞ்சதி விஞ்சுவை ரஞ்சித சதாகனக
வான்சரி நடாத்துமதனு!
வடுகர்சீனர் மலையாளர் சிங்களர் நிடதர்
சானுவர் விலாட ருந்துதி
வடுகநாத கவிராச சிங்கமே.

[இதுவுமது]

526. நாற்கவி விலாசமக ராசமா னியராச!
ராசஸ்ரீ மதுகுழந்தை
நலந்தரு துரந்தர புரந்தர சுதந்தர
நயந்தரு சுகந்தமதன

ஞார்க்கமல மலயுகள கரவாணி சிம்மாசன
புராதன விசேடபாக
ஞார்க்கவிக் கலியுக வரப்பிர சாதம்புரு
சாமணிக சீலலோலா!

வாழ்க்கிணை வீலோசனத் தீக்ஷண பொன்னங்கை
யாசமண ஙங்கையர் மால்
வாலமத னெனுமழகு சிற்றம் பலக்குரிசில்
மருகனென வந்துவந்த

வாழ்க்கைத் துணைக்கினிய வயித்தியலிங் கத்துணை
வளர்த்தபாஞ் சாலபுருஷா
வடகர்சீனர் மலையாளர் சிங்களர் நிடதர்
சாளுவர் விலாட ருந்துதி
வடுகநாதக் கவிராச சிங்கமே.

[இதுவுமது]

527. நரபதி தனுதிபதி மாதுபதி சேதுபதி
ஞாயபதி நீதிபதிசே
னுதிபதி தளபதி துரகபதி கெசபதி
பராபதிய தானகருணு

கரபதி யிரதிபதி குணநிதி தயாநிதி
கங்கைகுல வங்கிஷநிதி
னுற்கல்விப் பிரதாப நிதிசெல்வ நிதிமனு
நிதிகண்டசிங் தாமணிநிதி

மதிபதி புராணபதி பூமண்ட லாதிபதி
ரூபவதி மங்கையர் களபதி
வாணிநிர்த் தனமிடு வரபதி சபாபதியை
னேர்பதி பிரதாப்பதி மயிலையம்பதி

வடகர்சீனர் மலையாளர் சிங்களர் நிடதர்
சாளுவர் விலாட ருந்துதி
விடுகநாதக் கவிராச சிங்கமே.

[இதுவுமது]

528. செகராச சிங்கார கொலுவிதென உரைசெய்து
செந்தமிழ்க் கவிஞரொருபால்
செப்பஅப் படிஉரைக் கின்றபே ருக்கெலாந்
தேவையா னதுகொடுப்ப
யிகலா ரெனுங்கொடிய கவிராசர் திறையிட
இலக்ஷணம் உரைப்ப தொருபால்
இந்திரா கவிராச சந்திரா செயசெயா
என்றுகூ றுவது மொருபால்
குகராச வேளென இலங்குகொலு மீதுநீ
குலவிய சுசீல சனகா
கூறுடக சகதகட டகசகட டகவென்று
கூறுசங் கொலிகள் ஒருபால்
மகராச னுங்குழந்தைக் கினிமா மனென
வந்தகுண சந்திர யிந்திரா
வடகர்சீனர் மலையாளர் சிங்களர் நிடதர்
சாளுவர் விலாட ருந்துதி
வடுக நாதக்கவி ராசசிங்கமே.

[இதுவுமது]

529. விருதுபூண் டிடுராசர் திறைகுணர்ந் திடுவிசுவை
வேந்த யதிகார சாந்த
விருதபுய தாமதிகச யதாபதங் கைகுல
மேவு பாதாள தீரனும்
மருதுபாண் டியராச சுகுணகாண் டிபனென
வரத தாண்டவ ராயமால்
மதிமந்தி யெதிர்கொண்டு வம்மென அழைத்தருளும்
வரிசைப் பிரதாப சிம்மப்
புரவிருது பாணடியன் குலகங்கா குலோத்துங்க
புண்ணிய விசேடிதபரி
பூரணி கடாட்சித் தம்பலக் கவிராச
போசன் மெச்சிய மருகனே
வருதுவேண் டியயோகம் அனுபவி எனக்கும்வெகு
மதிவரிசை தந்த ருளுவாய்
வடகர்சீனர் மலையாளர் சிங்கள நிடதர்
சாளுவர் விலாட ருந்துதி
வடுகநாதக் கவிராச சிங்கமே.

[இதுவுமது]

வெண்பா

530. விமலேபா தாரவிந்தம் வேண்டியென்விண் ணப்பம்
இமையவல்லி ராசரா சேசுவ—ரிமதி
தபனரவி வாழுஞ் சதாவடுக ஞாத
சுபனயவான் வாழி வாழி.

கௌரி வல்லபராசேந்திரபூபதி மீது பாடியது

சொச்சகம்

531. வீசுசந் தனக்குழம்பை மேருவெனுங் கொங்கைதனில்
பூசலா மென் றதனால் பூசலாம் என்றேனே
காசினியி லோங்குசிவ கங்கையர சாளவந்த
வாசனேசேர் மால்கௌரி வல்லவரா சேந்திரனே.

[இதுவுமது]

வண்ணப் பாட்டு

532. விற்கொண்ட வாணுதற் செல்வியர் மனங்கள்போல்
மிருகபட முற்றுவிசைய
மிஞ்சியுயர் பஞ்சகதி கொண்டுமறு மண்டலிக
வேந்தர் படைத்த ளிப்ப
மேவியிட சாரிவல சாரிபோ யாதித்தன்
வெம்பரியை வெற்றிகொண்டு
மீறிவ்ரு லட்சவாம் பரியின்மேல் வச்சிரம்
விளங்குபொற் கலனேவீக்கி
வெயின்மருவு நித்தில முகப்பணி தரித்துச்சி
மேலுமர பட்சிசேர்த்து
வெண்டைய மணிந்துபிர சண்டமா ருதவுக்கிர
வேகத் தெழும்ப லாகை
மேற்கொண்டு காயர்நா யக்கர்பட் டாணிமார்
மிக்கான ராவுத்தர் மார்
மேன்திகழ் தேவர்மார் கொடுதிரி மல்லரொடு
மிகுசேர்வை காரர்முதலாய்
வீராதி வீரரணி யணியாக விருபாலு
மேபரி நடாத்தி வரவும்
விஞ்சைதிக ழிந்திர விமானமேன் நவமணி
விளங்குபொற் சிவிகைமேலு

மருவிருது பெற்றதண் டிகைகள் சாரட்டுடன்
விளங்குபதி லட்சமதனில்
மிக்கான மக்கள்மரு மக்கள்மார் மைத்துனர்கள்
விரவுபா ளையக்காரரும்

பொற்கொண்ட மந்திரி தளகர்த்தர் சமாசிகன்
பொருந்துதா ளுபதிகளும்
போதமிகு மட்டவணை மார்கள்ரா யசகாரர்
புத்தமுர் தக்கலைவாணரும்

புனிதமிகு நால்வேத வேதியரு மேவரப்
பூரியெக் காளமூதப்
பொங்கமிகு பம்பைதிமில் திண்டிதுந்து மிடக்கை
புகழ்சிக்கி மேளமுழவற்

புதமருவு நாகசுர வீணைசுழ மண்டலம்
போன்றநவ பத்துமார்ப்ப
புயலிலோர் புயமுழங் குவதெனக் கரிகள் மேல்
போட்டுமும் முரசிரட்டப்

புணரியின் முழக்கெனச் செயபேரி ஒட்டைமேற்
புவிபடைத் திடவதிர்ப்பப்
பூரணசந் திரவதன சுரதசங் கீதநடப்
பூவையர்கள் நடம்விளைப்பப்

புகழ்மருவு மனுமடால் சிம்மடால் கெருடடா
லொருமீன டாலுலட்சம்
பொன்றுவர வெள்ளிதங் கத்தடி காரரிரு
புடைகளுஞ் சூழ்ந்துவரவே

சொற்கொண்ட வில்லம்பு சரபோகி சஞ்சகலி
தோமரஞ் சவளமுசலஞ்
சுண்டிவில் வேல்கள் வாள் தண்டுசக் கரம்வெடி
துப்பாக்கி நேரிசம்வல்லயஞ்

சொல்லரிய யீட்டிமுதல் வல்வர்க ளொருகோடி
சூழ்ந்துவர மாதாயினி
சுற்றிவர மஞ்சள்பா வாடைவெஞ் சாமரை
துலங்குபொற் சிவிறிவீசத்

தூயபொ னடப்பை காளாஞ்சிகுஞ் சங்குடை
சுருட்டிகார் படித்துவரமேல்
சோமா பராக்கு ரெகு ராமா பராக்குசெய
சுமுகா பராக்குமிக்காஞ்

சொல்லரிச் சந்திரா பராக்கெனக் கட்டியஞ்
சொல்லிவர வல்லவர் புகழ்
சேர்சுப கரவிலாசன் வந்தானிர விகுலதிலதச்
சூரனுசகா யன் வந்தான்

துரை ராச ராசன் வந்தான் வந்தானெனத்-
தோன்றவொரு சின்னமார்ப்ப
சோணைமய மாகத்த ரித்தபீ தாம்பரச்
சோதியொடு பொற்பணிகளுந்

துங்கமிகு நவரத்தின வணிகளு மாயிரஞ்
சூரியரு தித்ததொப்ப
மற்கொண்ட குங்கும கும்பமுலை வல்லியர்கள்
மலரில்வண் டென்னமொய்ப்ப

வளமருவும் வெள்ளிய வுதாவைத்தபட்டத்து
மால்யானை மீதிலேறி
வையகம் விளங்கவரு தெய்வேந் திரரென்னவெம்
மன்னருங் கொண்டாடவே

மதுரைவரு கெவுர் மண்டார் பேட்டி செய்திடவும்
வரவுமக் கவுனர்துரையும்
வருகின்ற மன்னருக்குள் வருபவனி கண்டுகளி
கூர்ந்தட்ட திக்கெலாம்

மகாமண் டலாதிபதி யிவனலா திலையென
மகிழ்ந்துபட் டாளருடனே
மற்றும்வெகு துரைமார்க ளுஞ்சூழ வெதிர்கொண்டு
வந்துசம பேட்டிதந்து

மருடர் துலுக்குதமி ழிங்கிலீஷ் கன்னடம்
மருவுபா ரிசுதெ லுங்கு
மதிமருவு நாகர்முத லானபா ஷைகளொடு
வார்த்தைகள் பயின்றுமெச்சி

மானிலந் தன்னிலே கீர்த்தியிகல் யாணமொடு
வாழியெக் காலுமென்ன
மணமருவு மாளிகை தரிப்பயிப் புவனமேல்
மகாவரிசை பெற்றுவந்த
மகாராச ராயஸ்த கௌரிவல் லவராச
மகாமண்ட லாதிபதியே.

[இதுவுமது]
விருத்தம்.

533. மலைபெற்ற குமரி பராபரைக் கிருபையால்
கௌவரிவல்லா பேந்திர
தலைபெற்ற சிவகங்கைச் சமஸ்தானம்
பிறக்கமுடிதானே பெற்றாய்
சிலைபெற்ற மதனன் முத்துவடு கநாதசெய
சிங்கந்தனைப் பெற்றாய் செயங் கொண்டாட்
நிலைபெற்ற புத்திர சோபனமும் பெற்றாய்
நீடூழி வாழ்வுபெற்றாய் நிசங்கண்டோமே.

[இதுவுமது]
வெண்பா

534. வால மதன்கௌரி வல்லவரா சேற்திரபூ
பாலன் மகிழ்சம் பன்னனே—கோலமிகு
சங்கநிதி யென்னத் தழைத்தருளும் விப்பிரகுலச்
சங்கரய்ய யோகபுனி தா.

[இதுவுமது]

535. தேசம்புழு மவச்ர தேகன் கமலைநிறை
வாசனி லகுமுல்லை மாலிகையான்—போச
மகராச னும்கௌரி வல்லவரா சேந்திர
செகராச னேசெயம் செயம்.

[இதுவுமது]

536. மங்கைக்குத் தானையருள் மாதவா யோங்குசிவ
கங்கைக் கரசுபுரி காண்டீபா—விங்கிதவில்
மாரா துரைகௌரி வல்லவரா சேந்திர
சீராகு பேரா யெம்.

போதகுருராசர் பேரில் பாடியது
கலிவிருத்தம்.

537. மூடர்க்கேன் தமிழருமை மூர்க்கருக்கேன்
சங்கீத முயன்று பாடல்
கோடைக்கேன் நீக்கணப்புக் குரங்குக்கேன்
பூமாலை கொதி பொருந்த
கூடைக்கேன் கோடாலி சோரருக்கேன்
தருமநெறி சொல்வாய்
மேடைக்கே மயிலாடுந் தென்குளந்தைப்
போதகுரு விசைய மாலே,

## சிவகங்கைச் சமஸ்தானத்தின் ஆட்சி நடவடிக்கையைப் புகழ்ந்துபாடியது

### முப்பது சீர்க்கழி நெடிலடி லாசிரியம்.

538. உரைபெற்ற வெள்ளியின் றூணிரைத்தம் பொறு
லுத்திரம் பொதிகை யமைத்
தொளிருநவ ரத்தினகெ சிதத்தகடு மேய்ந்துதுகி
ரொடுதரள மாலைதூக்கி
உயர்கதலி கமுகுமலர் தோரண வலங்கார
முற்றகலி யாணமாலில்
ஓமவிதி வேதியரி யற்றிநா வலராசு
உரைப்பவுற வினர்களிப்ப
உம்பரவர் மகமே ரமைத்தும்பர் கோன்யானை
ஓங்குபந்த ரில்நிறுத்தி
விரைபெற்ற களபகஸ் தூரிநவ நிதியாடை
வேந்தர்கள் நலுங்குவைப்ப
மின்னனூர் நடமிடப்ப தினெண்வாத் தியமதிர
விருதுபல வாய்நெருங்க
மேட்டான மந்திரிய ரட்டவணை ராயசம்
விளங்குதானு பதிகள்மார்
விறல்மிக்க் துரைமக்கள் தளகர்த்தர் சதுரங்க
வெகுதானை யுங்கதிப்ப
மோடகும் பினியார் திரேசிட் டிறைஞ்சவதிர்
வேட்டுமுகி லெனவதிர்ப்பப்
பரைபெற்ற கிரணவேல் குமரேச னெனவந்த
பட்டாபி டேக யோக
பாஞ்சால துரைபோத குருசாமி மகராச
பாண்டியன் மனவடிவ மாகிப்
பதுமமா துங்கருணை பெருகுமா தவனுமொய்
பாகநீ டூழிவாழ்க
பன்மணித் தவிசின்மேல் உற்றுமங் கலநலம்
பாரித்துத் தந்துதந்து
பரவுசக லருக்கும் விருந்துடன் சந்தணம்
பாகிலை கொடுத்ததற்பின்
தரைபெற்ற திவெட்டி யகல்வத்தி வாணமத்
தாப்புராப் பகல்வதாக்கித்

தந்திமேல் விட்டவவு தாவினிற் பவனியுந்
தான்வந்து மனமகிழ்ந்து
தயவாய் வசந்தத் தியாகம் யாவர்க்குமைந்
தருவென விரைவிலீந்தார்
தலைமைபெறு சவுபாக்கிய சந்தான மேல்மேல்
தழைத்துநல மேவிளங்கச்
சந்திரார்க் கவரையினும் யெங்கள்சிவ கங்கை
சமஸ்தா னம்மிக வளரவே.

[இதுவுமது]

வெண்பா

539. கன்னங்கொடுப் பாரு காமதரு வந்தருமா
நன்னயம்சேர் சங்கநிதி நல்குமா—யின்னிலத்தில்
வேதமுண ரந்தணர்க்கும் வித்து வசனர்க்கும்
போதகுரு மன்னவனைப் போல்.

[இதுவுமது]

540. செங்கோ லும்வச்சிர தேகமுந்தீர்க் காயுளும்பொற்
பங்கே ருகப்பெண்டி ரும்படைத்து—மங்காத
சந்திர போதகுரு சாமிநீ யென்றுளும்
இந்திரனைப் போலவாழ்ந் திரு.

[இதுவுமது]

கட்டளைக் கலித்துறை

541. நீமச் சரம்வைத்தி ருந்தாய்என் னேவந்த நேரிழைக்குக்
காமச் சரத்தைக் கொடுபபவ ரார்கன்னி கைக்கிசைந்த
சேமச் சரமுல்லை மார்பா நாடாவள சினவங்கா
கோமச் சரங்கபணி பாத போத குருமன்னனே.

இராசாமுத்து விசையரேகுநாதக் கௌரிவல்லவப்
பெரியவுடையாத் தேவர்பேரில் பாடியது

வண்ணப் பாட்டு

542. கருதரிய நீலவிழி மாதர்மன மென்னவும்வெகு
கபடமிகு மனமும் மனதிற்
கடுமையுள பஞ்சகதி கொண்டுநின் றினியநெய்த்
தவளந்தெ கிட்ட வுண்டு

கவனமனு மீறிஅனு மானித்து மேயதிவி
கடகெறுவ மதங்க ளூற்றுக்
கனவட்ட மதனையொரு வட்டத்தி னிர்த்தூளி
கண்டுகோ ரத்தி னுக்காங்

காரகோ ரங்களைக் காட்டியீ டலவென்று
காய்ந்துபா டலம தனையுங்
கண்பஞ்சை யொக்குமேற் பாதிரி யெனத்தனது
கால்வி சைக்குப் பிரசண்ட

கால்விசைகள் காலமுதல் சிதறவு மடித்தடங்
காத வேகத்தெழுந்து
கருமுகில் கிழித்துவிண் முகடும்ப டீரெனக்
ககனமேற் றுண்டி யாங்கு

கதிரெறித் திடுமிரவி ஊடுகாத் ததனிற்
கட்டு வாம்பரி யேழையுங்
கடவி மேர்தி கிரியொடு திகிரிடாக்
கவும்வலஞ் சிலவி ரட்டி

கறுவியாட் டுக்குமாற் றுதபசு பதியையுங்
கடுகிமேல் முடுகி விட்டுக்
கணமதனில் வந்துபுவி சூழ்ந்துபெறு குதிரையின்
கடல்மீது கோப மாகிக்

காற்குழம் புகளால் கரிக்குழம் பாக்கிநுரை
களையு மேபாற் குழம்பாய்க்
கமழவும் பாலித்து மேற்சேர்க் குழம்பைக்
கலக்கிநடு நின்ற வடவைக்

கனலஞ்சி முன்னீரில் சூழ்கவுஞ் சென்னீர்
கறுக்கவு மிதித் தேறியக்
கற்கிவெடி வேங்கையென் றுட்பொறிகள் தேடியிரு
கட்பொறிகள் தூவி யார்த்துப்

பொருதயெதி ரில்லாது கொள்ளையிட் டுத்தின்ற
புரவிப் பலத்தை யெல்லாம்
போதவுங் கொள்ளையிட்டஞ் சார்கிரீடம்
பொருந்தும் லாடத்தெழுத்தைப்

பூணுற்ற லாடத்தி னலமுத்திப் பிறைகள்
பொன்றிட வடுப்ப டுத்திப்
பொலிவுறக் கப்பங் கொடாரரை யுமடக்கி மெய்ப்
புவிதாங்கு சேடன் முடியும்

பொடிப் படத்தண தணத்திமிதி இத்திமியெனப்
பொங்கமிகு துங்க நடனம்
புரிதுரங் கத்தின்முக மதுதளத ளெனவும் நற்
பூஷணமு மேத ரித்து

புதிதான நவமணிக் கலனைவைத் தங்கவடி
பூட்டி முட்கடி வாளமும்
போட்டிடுக் கம்பரொ லிடிங்குடிங் கெனவுமற்
புதவுமா பட்சி சேர்த்துப்

பொற்கிண்கிணிச் சதங்கைகள் வெண்டையச் சிலம்பு
கள்கல கலெனவணிந்து
பூரிதம தாகவரு பரியின்மேல் நகுலனைப்
போலே றவதிக வீரம்

பொருவிசைய லட்சுமி செயசெய மென்றுனது
புயமேற முன்னே றியேழ்
புடவியொடு வடகுவடு கிடுகிடென வோர்கைப்
பொருப்பென மருப்ப சைத்துப்

புயலினிடி யேறெனக் குமுறியே கிரிபாய்ந்து
பொழியு மும்மத யானை மேற்
போந்தேறு செயபே ரிடமட மன்றதிரோசை
போயேற வண்ட முகடிற்

புகமேர ஒட்டகையி லிட்ட நகாரவொலி
புடைப்பங்கா தாரை கொம்
புகழ் குறிக்கப் பதினெண்மே ளவாத்தி யங்களொடு
பூரி யெக்கா ளமூத

விருத்திக் கெருடடால் சிம்மடால னுமடால்
மேவி மண்டல மளாவ
மேவி பூச் சக்கரவா ளக்குடை நிழற்றவுயிர்
வெண்கவரிகளு மிரட்ட

வெற்றிதர வேபஞ்ச வர்ணமிகு பாவாடை
வீசவும் போச ராச
வீமா பராக்கு ரெகுராமா பராக்குக்கிர
விகுல சோமா பராக்கு

விசையா பராக்குபூ பாலகேதே வேந்திரா
வெகுபராக் கென்று கட்டியம்
விசையங்கள் கூறிவர யிருபக்க நிறைவுற்று
மிக்கதள கர்த்தர் சூழ

வில்லம்பு யெறியீட்டி வல்லயஞ் சவளம்வாள்
வேல்துப் பாக்கிகள் பிடித்த
வீரரொரு லட்சம் பதாதிமுன் னடக்கயெதிர்
மேவ லார்களை வளைந்தே

வெடிகள்பள பளவெனவெ ழுசப்தம்டபீர் டபீரெனவும்
வேகி செஞ்சாலி குப்ப
வெடிகுண்டு பீரங்கி வருகக்கு புகுபென
வேமிக முழக்கி வாரி

கீறெனச் சக்கரங் கீறப்ப டைவாண
விசைகள் சீறெனவு மோதி
மேல் மிதித்தேறி ஊடையம் வாடிரு தத்தொட்டு
விட்டு முறிபட்டு மனது

வெருவுற்ற ஒன்னலர்கள் பாளையஞ் சிதறவொரு
கெப்புலி யெனச்சி னந்து
மிஞ்சுவாம் பரியை யிட சாரிவல சாரியாய்
விட்டுபின் னிட்ட வச்சிர

வீரவாள் கொண்டுமரு வார்கள்பே ரணியெலாம்
வெறுகூ ருக்கி முனையில்
வீம்புபே சியசெரு நாசி சுபங் தேனனைந்து
வீழ்ந்திட வும்வெட் டிமுதுகு

தருதரிய லரைவிட்டு அடர்குருதி வெள்ளச்
சலத்தை ரணபெலி யிட்டுமே
தவமுறுபயி ரவியுமல கைகளுமு ணவுசெய்து
தகுதி யெனநட னிடவே

சவுரியமிகு ரணவேட்டை யாடிமலர் வாகையுந்
தான்சூ டியில கிய செய
ஸ்தம்பத்தை நாட்டித் திகாந்தவரை தனிலுள்ள
தடம குடமுடி வேந்தரும்

தந்தியொ டுகந்துகம் சிவிகைவிரிக விகையும்
தவள வெண்கவரி குஞ்சந்
தங்கநவ ரத்தினநிதி சிங்களப் பெண்கள் திறை
தந்து பதசேர்வை செயவே

சமரமுக ரணவீர பத்திர வுத்தாண்டமார்த்
தாண்ட னெனவந்து யிந்தத்
தாரணி விளங்கவும் கும்பினி துரைமார்கள்
தயவுற்று நாலு கோட்டைத்

தணிகொண்டு பூவுலகில் நீடுசி வகங்கைச்
சமஸ்தான முதலாய்க்குளந்
தாபுரி பேரரசு தழைக்கவும் சுபவால
சந்திர னெனவே விளங்கிச்

சதுர்பெருகு கொலுவினி லிருந்துவளர் கின்றகன
சமுக கல்யாண ராமா
சரசமட வார்கள்மட லெழுதுமத னுமதுர
தமிழ்வா ணர்கலி யகற்றுந்

தாளகர் னுநமசிவாயபூ பதியுதவு
சகலசாம் பிராச்சிய யோகா
தனபதியை நிகராக வந்தவொய் யண்ணன்மால்
சகோதரப் பிரபு டீகரா

தருமமிகு சேதுவுக் கரசுநிலை யிட்டமா
தவமுத்து விசைய ரெகுனு
தக்கெவுரி வல்லவ பெரியவுடை யார்துரை
சக்கிர பதிமக ராசனே.

[இதுவுமது]

விருத்தம்

543. மணிகொண்ட நவரத்தின முடிகொண்ட வட்டதிசை
மன்னர்கோ டான கோடி
வந்துபத வந்தனை புரிந்துதிறை தந்துதிரு
மருங்கு மகலா திருப்பக்

மதுரகவி சித்திரகவி விஸ்தார கவிமுதல்
வழுத்தும் பிரசங்க முதுநா
வாணர்கள் செயம்செய மெனக்கரம் விரித்தொரு
மருங்கு வந்தினி திருப்பக்

கணிகொண்ட வமுற்தசுர சங்கீத நளினவல்
லாச சல்லாப மோக
ஆனந்த போகமட வார்கள் பலர் நின்கனி
வாக நாட்டியம் விளைப்ப

அரிமுது மறையிலந் தணர்கள்பல துதிகள் செய்
தாசீர் வதித்தி ருப்ப
யாதித்திய குலதிலக தந்திர னேசொல்லி
னரிச்சந் திரனே யிந்திரன்

கனிகொண்ட நித்திய கல்யாண குணனே கொடைக்
கர்னனே பராக்க மென்னக்
கட்டியங் கூறியிரு பக்கமும் நின்றுவிரல்
காட்ட வுயர்சமூ கமீறக்
கதிமருவு நவரற்றின சிம்மா சனத்தின்மேற்
காசினி யெலாம் விளங்கக்
கனதைபெரு பூலோக தேவேந்திர னென்னவே
காட்சிதர வீற்றி ருக்கும்
பணிகொண்ட செயகமலை விமலையக லாதபுய
பாற்க ராதென் குளந்தைப்
பதிபுரந்தரு விக்கிர மார்க்காதி பரபுருஷ
பாஞ்சா லரூப மதனு
படைகள் குடிகணப் பமைச்ச ருரும்
படைத்த பூபால துருவா
பண்ணழி முழக்கரு தன்முல்லை மாலிகா
பரணவுத் துங்க யோகா
தணிகொண்ட நாலுகோட் டைக்குசுற் றுவளர்
சகலசாம் பிராச்சிய யோகா
சத்துருதள சம்பார மித்துருபரி பாலகா
தயாபர மனோக்கிய பவுமா
தமிழ்மருவு துரைநமசி வாயநிதி பெற்றரா
சாமுத்து விசைய ரெகுனு
தக்கெவுரி வல்லப பெரியவுடை யார்துரை
சக்கிர பதிமக ராசனே.

### போதகுருராசர் பேரில் பாடியது.

#### விருத்தம்

544. செய்யமுறை கும்பினித் துரைமார் திரேசிடத்
தேசாதி தேசர் பரவச்
சிவகெங்கை ஆதிக்க மதனில்நவ ரத்தின
சிம்மா சனத்தி ருக்கும்
நயமுற்ற சதுரங்க வகளங்க மனுதங்க
ராசாங்க யோக சாலி
நண்ணுமும் மதயானை யம்பாரி மேற்பவனி
நாளும் வருதே வேந்திரா

சயமுற்ற செந்தமிழ்ப் பாண்டியனென வேவந்த
சுமுககல் யாண ராமா
துருவனென வருகெளரி வல்லவ நரேந்திரன்
சொல்லருட் பெறுசு புத்திரா
புயமுற்ற லட்சுமி விலாசவுல் லாசவா
புண்ணியகன கௌணிய மதனு
போசவ சகாயமெனு வீமமனு நீதமிகு
போத குருமக ராசனே.

[இதுவுமது]

538. சுயம்பெற்ருய் தமிழ்கூடற் சந்தரங் கயற்கணுமை
துணைத்தாள் போற்றும்
நயம்பெற்ருய் சிவகெங்கைச் சமஸ்தானந் தனைச்செங்
கோல் நடத்தித் தானும்
புயம்பெற்ருய் கும்பினியார் திரேசுபெற்ருய் எதிர்த்த
வரைப் பொருமல் வென்றே
செயம்பெற்ருய் போதகுரு மகராச ராசேந்திர
சீர்பெற் ருயே.

[இதுவுமது]

539. கிரியின் மேற்றீப மொப்பாய் பரையிடஞ்சேர்
தாழீசர் செயலாற் செம்பொற்
கிரியின்மேற் றுசநிறுத்தும் போதகுரு
மகராசன் கொடிக்குளந்தா
புரியின் மணமுடித்துத் தங்கமயமாய்க் கலனைப்
புனைந்த துங்கப்
பரியோன் பவனிவந்தான் தீவட்டியா
லிரவைப் பகல்செய் தானே.

[இதுவுமது]

540. போர்மேலே நடனமிடும் பரிகுலன
தென்குளந்தா புரிபுரந்திப்
பார்மேலே முடைநடத்தும் போதகுரு
மகராசன் பந்தானஞ் சூழ்
சீர்மேலே புகழ்விளங்கக் கலியாண நடத்திமிக
தேவேந்திரன் போல்
தேர்மேலே பவனிவந்தார் வாணநலத்
தாலிரவைத் தெரிகிலோமே,

[இதுவுமது]

541. நாம மணித்திருக் கோட்டி நம்பர் பாத
ரருண நலத்தினாலே
சேம மணிச்சிவ கங்கைப் போதகுரு மகராச
செங்கோல் வேந்தன்
வாம மணிகலியாண நடத்தி ராப்பகலாக்கி
மணியாரம் பூந்
தாம மணிப்பல்லக்கில் பவனி வந்தாருலக மெல்லாரந்
தழைக்கத்தானே.

[இதுவுமது]

542. மேரு நிகர் கொட்டகையில் கலியாண ராசனென
விளங்கு மாலைத்
தாரு நிகர் போதகுரு மகராச ராசேந்திரன்
தயவு கூரக்
காருநிகர் கொடைவே லாயுத மந்திரி தந்திரிதிரி
கதி குபேரச்
சீருநிகர் நலுங்குவைத்தா ரதற்கொரு பொக்கிஷம்
வேண்டுஞ் சேர்க்கத்தானே.

[இதுவுமது]

543. அந்தி மேல் விளங்குமதி யணிந்த
யாமளை கவுரி யருளினாலே
புந்தி மேல் மகிட்சிபெறப் போதகுரு
மகராச போசனெங் கோன்
கந்தி மேல் முகிலிறங்குந் தென்குளந்தா
புரியினில் கல்யாணஞ் செய்து
தந்தி மேற் பவனி வந்தா ரன்றி ரவைப்
பகலாக்கிச் சாதித்தானே.

544. தணிந்தருவெண் பிறையணிந்த
சொக்கேசர் மீனாட்சி தயவினாலே
கணந்தருங்கும் பினித்துரைமார் திரேசு
செயப் பரராசர் கப்பங்கட்ட
யெணந்தரு செங்கோல் செலுத்தும் போதகுரு
மகராச னெங்கோன் செய்யும்
மணந்தரு சோபனம் விளங்கச்சந்தான
வாழ்வு பெற்று வாழிதானே.

[இதுவுமது]

545. சத்திரபதி தென்குளந்தைப் போதகுரு மகராசன்
தயவு கூர்ந்த
வித்துவசனர் தங்களுக்கு மாதுலர்க்கு மறையவர்க்கு
வேண்டு மடான
முத்துமணிச் சிவிகை மதயானை வாம்புரவி செம்பொன்
முதன்மை யான
உத்தம தானங்கள் செய்தான் வரர்த்திரைப் புகழுலக
மோங்கத்தானே.

[இதுவுமது]

546. தழை மாரி மணிச் செந்நெல் விழைக்குமுளந்தா
புரிக்கதிபன் தர்ம தானம்
விழை யெனக்கிருபை தரும் போத குரு
சாமி 'வேதனம் பொற்
கழைமாரன் வார் திரைக் கனந்தம் புலவர்
மனங்களிக்கச் சொன்ன
மழைமாரி பெய்துலகம் புகழ்கிறைத்தான்
நீடுழி வாழிதானே.

[இதுவுமது]

வெண்பா

547. வீரம் பிறந்தகுல மேன்மையான் மேலோர்மேல்
வாரம் பிறழாமனத்தினன்—தீரங்
குடியிருந்த போதகுரு கொற்றவன்போல் யார்க்கும்
முடிமன்னர் யார்கொடுத்தார் முன்.

[இதுவுமது]

548. சூரியகுலோத்துங்க சோழர் சுதர்மமுறு
வீரிய பிரதாபசெய விற்பன்ன—தாரிலகு
சல்லாப மாரதராதிபதா நீடூழி
யெல்லாம் சுபம்பெற் றிரு.

[இதுவுமது]

549. சீதார ராமா செயம் பரவு திண்புயப்பொற்
பூதார போதகுரு பூபால—மாதரார்

சல்லாப மாரதராதிபதா நீடூழி
யெல்லாம் சுபம் பெற்றிரு.

[இதுவுமது]

550. மணிகொண்டகோட்டிபுர மாதவா வாசக்
கணிகொண்ட செங்கமலக் கண்ணா—அணிகொண்ட
நங்கோமான் போதகு ருராச மாராச
செங்கோல் விளங்கவருள் செய்.

சபாபதியாப்பிள்ளைமந்திரிமீது பாடியது
கட்டளைக்கலித்துறை

551. அன்னாளில் யூகிசுமந் திரிபட்டியப் பாச்சியெனும்
இன்னாளிலெ வருஞ்சொல்லக்கேட்டதல்லால் கண்ட
[தில்லை அய்யா
ஒன்னாண்மை யாலவரும் முண்டென்பதுமிச முற்றனம்விற்
பன்னாதென் தேவைப் பதிவாழ்கனக சபாபதியே

[இதுவுமது]

552. ஊரும் உலகும் ஒருவன் பொருட்டென் றுரைத்தபடி
பேரும் பெருமை சமஸ்த்தான பாரமும் பெற்றயையா
காரு சுரபியு நேர்நாக நாத கரதலவிற்
றூரும் கமலம் புனையுங் கனக சபாபதியே.

மதுரை வீரப்ப சுவாமி பேரில் பாடியது
[இதுவுமது]

553. மாதர்க் கிதங்கவி வாணர்க்குச் சால வணக்கங்குரு
நாதர்க்கு நீதியோ டாசாரங் கல்வி நயந்தவர்க்குக்
கோதற்ற வாசகம் பொய்க்குப் பொய் கோளுக்குக் கோ
[ளறிவி
லாதற் கிரட்டி யறிவுடை யோர் செயு மாண்மைகளே.

[இதுவுமது]

554. படிப்பார் தமக்குப் பரிசுகொடாச் சண்டிப் பாதகரை
அடிப்பா யுடலைக் கிழிப்பாய் யுதிரத்தை யள்ளி யள்ளிக்
குடிப்பாய் கழுகு பருந்துக்கும் கூரை கொடுத்திடுவாய்
வெடிப்பாய் குடியைக் கெடுப்பாய் மதுரையில் வீரப்பனே.

[இதுவுமது]

பொது சந்தப்பா

555. குடிகாரப் பய்யனுக்குக் கொடுக்குங் காலம்
குற்றமில்லா வாணருக்கு மீயாக் காலம்
படியாமல் படிப்பவரைப் பார்க்குங் காலம்
பற்றற்ற நாவலரைப் பாராக் காலம்
அடியாமல் அடிப்பவரைக் கெஞ்சுங் காலம்
அந்தணரைப் பெரியோரை அறியாக் காலம்
துடியான துட்டருக்கே செல்லுங் காலம்
துடுக்கான கலிகாலத் துண்மை தானே.

பொது வெண்பா

556. அன்றைக்கே தான்விழுங்கு மாதி சிவனறிய
யென்றைக்கு மீடேத்த மில்லையே—நன்றலக்காண்
நெஞ்சகத்தி லொன்றை நினைந்துறவாய்ம் பேசுகின்ற
வஞ்சகற்கு வாயிலே மண்.

கீழ்மக்கள் குணம்

[இதுவுமது]

557. கற்பசுவைக் கட்டிக் கறந்தாலும் பால்தருமா
புற்பருத்திக் கொட்டை மெத்தப் போட்டாலு—அற்பருக்
போதிக்கத் தக்கபுத்தி போதிப் பினுமே [குப்
சாதிக்குத் தக்கபுத்தி தான்.

கடவுட் பெயரை வெறுத்துப் பாடியது

[இதுவுமது]

558. நாச முறுவான் வயித்தய நாதவேளான்
யீசுபரன் பேரெனக் கேனிட்டான்—நேசமாய்
ஆட்டுப்பேர் குட்டிப்பேர் ஆண்கழுதை பேரெருமை
மாட்டுப்பே ரிட்டழையா மல்.

பசிப்பிணியினிமித்தம் பாடியது

[இதுவுமது]

559. பொசியா திருப்பவரே புண்யர்கா ணய்யா
கசியாதோ வுந்தன் கருத்து—பசிதாம்
உயிரைவா திக்குதே ஊட்டங் கொடுக்க
வயிரவா கோட்டைதிற வா.

### கச்சியப்பனை யுதைத்தகால்

[இதுவுமது]

560. மண்படுமா வெய்யிலிலே வாடுமா புலவருட
கண்படுமா வரைக் கறுகுமா—திண்புவியில்
மெச்சியப்ப னின்றெடுத்த வேளாளர் தங்கள்குலக்
கச்சியப்ப னையுதைத்த கால்.

### பிள்ளைவரம் வேண்டியது

[இதுவுமது]

561. முக்கணனு ரின்று முடிந்தார்முக் கண்ணனுர்
மக்க ளிருபேரு மாண்டார்—மிக்க
ஒருநா தனுமிலையா வுன்கூத்தே கூத்தா
குருநாதா பிள்ளை கொடு.

### கொடுப்பதழுக் கறுப்பான்

[இதுவுமது]

562. வெள்ளுடையி னீழல் விரும்பி விடங்கொடா
துள்ளுநரு வாழைபலாச் சோலைக்கு—மெள்ள
வடுக்கவொட்டா வாறுபோ லற்பர் சிலர்கூடிக்
கொடுக்கவொட்டார் தாமுங்கொ டார்.

[இதுவுமது]

### கருப்பண்ண சாமியிடம் திருடியவனைத் தண்டிக்க முறையிட்டது

563. கடுவைத்த வாள்கரத்தாய் வேலை நகர்க்
கருப்பண்ண னேகருதக் கேளாய்
வடுவைத்த சோர ரெங்கள்கடுக் கன்முதல்
வட்டிகள வாண்டு கொண்டு
கெடுவைத்த சத்தியமுன் சன்னதியிற் செய்ய
வந்தார் கேட்பார் ஞாயம்
நடுவைத்த பொருள்வரச் செய்தெடுத் தவனைக்
கெடியிருக்க ஞளு மக்கோ.

### எல்லாம் குழப்பமெனல்

வெண்பா

564. பாட்டுங் குழப்பம் பரிவின் மலியாரக்
காட்டுங் குழப்பங் கனகுழப்பம்—ஆட்டிவைத்த

நட்டுவனு ருங்குழப்பம் நட்டநடு மத்தளத்தைக்
கொட்டுவா ருங்குழப்பங் கூர்.

### வாராக்காரணங் கேட்டது
[இதுவுமது]

565. நாலுதரம் ஆறுதரம் நாமழைத்தோம் நீவாராய்
சாலுதர மாநடக்கத் தள்ளாதா—மேலெல்லாம்
புண்ணு பொடுகா புறங்காலு வீக்கமா
பெண்ணு கமதுத்தம் பி.

### தடையும் விடையும்
கட்டளைக்கலித்துறை

566. இரவல ரேயுமக் கில்லாத தென்ன யிதையமென்ன
பரவுண வேதுசுவை யற்ற தென்ன பான்மையென்ன
த்ரவுரை யீரென்று கேட்டான் அதற்கொன் றுஞ் சாற்று [கிலேன்
வரதிரு வேங்கிட நாதா வென்றேனன் வழங்கினனே.

### பெரியதம்பிக் கவுண்டனை அச்சுறுத்தியது
அறுசீர் விருத்தம்

567. வட்டமிடுங் கெருடன் விடமடக்கம தார் கவி
வாக்கி னுலே
சுட்டெரியுங் கனல் விடலுக் கொருவர் வந்தெதிர்த்தாற்
சுருங்கி மாய்ந்து
கெட்டலைவர் நிர்மூடர் யிதுசேதி யறியாயா
கெடுவாய் காயாம்
பட்டியில் வாழ் பெரிய தம்பிக் கவுண்டா
பட்ட துயர் பகருவானே.

[இதுவுமது]

568. வில்லரிக்கும் வாளரிக்கும் வேளரிக்கும் செள்ளரிக்கும்
விசையாம் வாணன்
சொல்லெறிந்தார் பிள்ளைபிழைப் பவரோ யாரேனுமிது
சேதி சொன்னேம் நீயும்
நல்லறிவு சற்றுமில்லை துற்குணத்தா லென்னவரு
நாச மாவாய்
வல்லவனென் றெண்ணுதே பெரியதம்பிக் கவுண்டா நீ
மாளு வாயே.

[இதுவுமது]

வெண்பா

569. கேடுவரும் போது மதிக் கொற்று கெட்டலைவாய்
தேடும் பொருளழியுஞ் சீக்கிரத்தில்—நாடுந்தன்
மக்களுடன் பெண்டுடனே மாள்வா யிதையறிந்து
தக்காய் பெரியதம் பி.

அன்னுமலையைப்பற்றிப் பாடியது

வசைக்கவி

570. அன்னுளில் ராசசிங் கைப்பதியை மணியார
னெதொரு சித்திநாதன்
ஆகாத வாயிடும் பால்மங்கை பாகதவ
ராசனுட னேயெதிர்த்தான்
யென்னுளும் நிலைநிற்க வசைபாட் டெலாங் கேட்
டிறந்தழிந் தேபோயினுன்
யென்றுசொல் லக்கேட் டறிந்து இருந்து மதுவை
யெண்ணுமல் நாசமுறுவான்
தன்னு லழிந்திடத் தன்தலைக் கேகொள்ளி
தான்தேடு முவமை போலத்
தங்குரா மன்செட்டி அண்ணு மலைக்கொண்டி
சண்டிச்ச வங்கப் பயல்
யின்னுளி லெங்களுட னேயெதிர்த்தாநாங்க
ளிசையிலா வசைபாடியே
யிவனுக் குசலக்கழிவு அபகீர்த்தி யாகச்செய்
தினிநிலை நிறுத்து வோமே.

அனவரத தாண்டவனுர்பேரில் இரங்கிப் பாடியது

வெண்பா

571. நஞ்சையெப் லாந்தின்று நம்பிறப்பை யும்பிடுங்கிப்
புஞ்சையெல்லாந் தின்றழித்துப் போட்டுதே—யென்
ஆடுகட்டி ஆண்ட அனவரத தாண்டவனுர் [செயலாம்
மாடுகட்டி ஆண்ட மதம்.

நாவலரைச் சிறப்பித்துப் பாடியது

[இதுவுமது]

572. மேவலரை வெட்டி விருதுபெற்ற வேல்வேந்தே
நாவலரை வெட்டுவது நன்றல்ல—காவலனும்

ஆடல்வேல் மாரனைக் கண்டஞ்சித் தொப்பியைப்
போடலாம் பாடவொண்ணு தோ.

### சைவமதத்தைப் புகழ்ந்து பாடியது

[இதுவுமது]

573. கலியுகத்துக் கேற்ற கலியுரைக்க மாட்டோம்
புலிபசித்தால் புல்லைத்தின் னுதே—பலியோர்க்கும்
தெய்வத்துக் கேற்ற சிறுமை தனைப்பரவும்
சைவத்துக் குண்டோ தவறு.

### சிவசத்தியிடம் விண்ணப்பித்தது

விருத்தம்

574. சொல்லரிய முத்தமிழ் கரை கண்ட புலவரை
சோம்புடன் கண்டவுடனே
தோகைமயி லைக்கண்ட பச்சோந்தி போலே
சுருக்கண்ட கெண்டை போலே
வல்லகரு டன்கண்ட பாம்பு போலே பாம்பின்
வாயினிற் றேரை போலே
வல்லாறு கண்டதொரு பட்சிபோ லே புலி
வரக்கண்ட மான் போலவே
நல்லதொரு செண்பகக் காவில்மல ரைக்கண்ட
நாதவரி வண்டுபோலே
நண்டுகண் டஞ்சிய குரங்குபோ லோடியே
நடுநடுங் கிப்பதுங்கும்
புல்லரைப் பாடியே கவலைகொள் ளாமலே
பூரணக் கருணைபுரிவாய்!
பூலோக நாயகி கண்ணுடைய தேவியே!
புகழ்பெற்ற சிவசத்தியே!

### குமாரலிங்க சேதுபதியைப் புகழ்ந்து பாடியது

விருத்தம்

575. மன்னர்புகழ் ரணவிசைய மண்டலீ காசண்ட
மார்த்தாண்ட புருஷயோகா!
வாசால காநல்ல பூசாப லாசந்திரா!
வதனகன கோலாகலா!
வார்த்தைப் பிரசங்கா துறங்கா நிசங்கா
வசந்தாபிலஞ் செய்விதுரா!

மாராகு பேராஒய் யாராநல் வீரா
வசீராவெல் சூரதீரா!
நன்னயகு ணுவாவி சாலாசு சீலாசொல்
நாலாகலேக் குநிபுண!

நந்தா முகுந்தா அனந்தா தினந்தான
யந்தான்முகுந் தகுமுண!
நாமாயி ராமா பிரதாபா விலேபத்ம
நாமாசொ ரூபநேமா!

நாட்டில்வெகு கீர்த்திநிலே நாட்டியசெய ஸ்தம்ப
நாட்டுகிருஷ் ணவதாரா!
கன்னென வருசவுரி விக்கிரமா தித்தா!
காடாபிகா தைரியவானே

கன்னல்மொழி மிகுமதுர கவிவாணர் தினமகிழு
காரிய சதுரா!
கனகாபி ஷேகாவை போகா தியாகாசொல்
காம்பீரிய நாகரீகா!

அன........ரு வென்னவளர் சில்லவார் வங்கிஷதுரை
அன்பு மிகுதுரைகளில்
அழகுதுரை மகராசர் புண்ணியதுரை கீர்த்திநிதி
அதிபதிநீ துரையிவ்

அவனிபுகழ் துரைகிருஷ்ண னடிபரவு துரைமேன்மை
ஆனதுரை யெந்தனுளும்
அதியோ கமும்பெருகு யிறுதாது லிங்கதுரை
அருள்குமார லிங்கதுரையே.

## வேறு

576. துடியிடைப் பெண்மடவார் வேள்முத்து வீரர்
துரைமருங்கா புரிக்கிறைவன் துரைகள் சிங்கம்
நெடியபுகழ் வேளப் பூபச்செயமா லென்றால்
நினைத்தவை யெலாங்கொடுக்கும் நீல மேகம்

இடியிடித்துக் குமுறுமல் முகங்க றுமல்
இரையாமல் பட்டென் றேயிருண் டிடாமல்
கொடியயிந் திரசாலம் வில்லங்காட் டாமல்
கொடைகாட்டா மலென்றென் றுங்கொடுப்
[பன்றானே.

### திருமாவேந்திரனைப் புகழ்ந்து பாடியது

விருத்தம்

577. கொக்கோடி யடைகிடக்கும் குருகோடி விளையாடுங்
கோடி நாபன்
திக்கோடி யலையாமல் தினங்கோடிப் பொன்கொடுக்கும்
திருமா வேந்திரன்
தைக்கோடிப் பிறைபோலுந் தமிழ்க்கோடிப் புலவர்
சலியா மல்தான் [வந்தால்
யெக்கோடி யாளுலும் இலக்கோடி காலமட்டும்
இருப்பன் தானே.

### கொடைச் சொக்கலிங்கையன் சருவமானியம் ஈந்தது

கட்டளைக்கலித்துறை

578. கானிக ராங்கொடைச் சொக்க லிங்கையன்கனிந்தொழுகு
தேனிக ராம்வரு கைக்கோவை கொண்டசிற் றம்பலவன்
தானியம் நெல்விளைப் பூசாரிப் பட்டி தனைச்சருவ
மானியம் ஈய்ந்தனன் நீடூழி காலமும் வாழியவே.

### முத்து வீரப்பசாமியின் மரியாதைச் சிறப்பு

கட்டளைக்கலித்துறை

579. தரியாரை வென்றிடு மால்முத்து வீரப்ப சாமியெங்கோன்
பெரியோர் கற்றோர்களைக் காணுமுன் னேசம் பிரியமதாய்
அரியா சனம்விட் டெழுந்துவந்தே அங்கீகாரஞ்செய்யும்
மரியா தைதானெக்கு குமோமற் றராச வரிசைகளே.

### அழகியசிற்றம்பலக் கவிராசரைப் புகழ்ந்து பாடியது

வெண்பா

580. தென்மொழிசேர் வள்ளுவனார் தேர்ந்திரைத்த வான் [குறளின்
பன்மொழிசேர் சிற்றம் பலக்கவிசேர்—பொன்னங்
கிரிமேல்வீழ்ச் சோதிபோல் கீர்த்திபெற்ருய் நாளும்
பரிமே லழகரையொப் பாம்.

### [இதுவுமது]

கட்டளைக்கலித்துறை

581. அடுத்துக் கவிசொல்லி வந்தோர்க்குச் செம்பொன்னை [யள்ளியள்ளிக்
கொடுத்துப் புகழணிமல்லைச் சிற்றம்பலங் கொற்றவன்யாழ்

தொடுத்துக் கவிசொல்லி யிந்தாயிந் தாயெனச் சொற்
[களைத்தான்
யெடுத்துக் கைநீட் டுவன் வெண்டாமரையி லிருப்பவளே.

[இதுவுமது]

582. தில்லைக்குச் சேர்தில்லை நாயகன் தந்தசிற் றம்பலவன்
மல்லைக் கவிச்சிங்க மவர்க்கெளிதோவழு வாமலொரு
சொல்லைப் பகர்ந்த தில்நூறு யிரப்பொருள் சொல்லுழல்
[வன்
கல்லைக் கல்லென்று சொன்னாலும் கற்றுக் கவிசொல்
[லுமே.

[இதுவுமது]

வெண்பா

583. வாக்குத் திடம்கல்வி வாசா லகம்அறிவு
நாக்குத் தடைபடா நாடகச்சொல்—யோக்கியமும்
செவ்வூர் கவிராசர் சிற்றம் பலம்போலும்
யெவ்வூரும் கண்ட தில்லை யே.

வெண்பாப் புலிக்கவிராசர் அரவங் குரிச்சிச் சொக்கலிங்கக்
கவிராசர்பேரில் பாடியது

சீட்டுக்கவிதை

கலித்துறை

584. வெண்பாவின் புலிதனைஞ் சொக்கலிங்க கவிராச
வேந்தன் கல்வி
திண்பாரில் கேட்பவர்க்கும் கற்றவர்க்குங் அற்புதமாம்
தேன்போல் வாய்ந்த

கண்பார்வை வாய்மலருங் கற்பாவை மனமலருங்
களிகண் கூத்து
மண்பாவை தலையசைக்கும் பொற்பாவை திருநடனம்
ஆடுந் தானே.

[இதுவுமது]

585. கனிவாய் ரசம்பொழியும கரகங் கணவீர
கண்டார் மணிக்கா லினன்

கங்குகரை காணாத கடல்மடை திறந்தனைய
கல்விப்பிரசங்க சிங்கம்
அனியாய லோபர வஞ்சகர் நெஞ்சுபஞ்
சாக்கும்பிர சண்டவாயு
அற்புதச் சொக்கய்யன் மைத்துனன் புலிசொக்கன்
அன்புட னெழுதுமோலை
தனியே நடந்தந்த ராத்திரியில் வந்துமுன்
சார்ந்திடவும் நீசார்ந்திலா
தான்செலுந் திக்கெலா னட்பாளர் யில்லாவிடில்
சாற்றுவே னதுபொறுத்தேன்
இனியா கிலுமிந்த ஒலைகண் டட்சணம்
யெழுந்துவ ராதிருந்தால்
யென்னமோ நெஞ்சைத் தொட்டுப்பார்த்துக்கொள்
யெண்மடங் கதிகமாமோ. [உன்னில்

வெண்பாப் புலிக்கவிராசர் பேரில்
அரவங்குரிச்சிச் சொக்கலிங்கக்கவிராசர் பாடியது

சீட்டுக்கவிதை

விருத்தம்

586. வரவிட்ட சீட்டுக் கவிக்கருணை கொண்டு
போதைமண் டையேறிக்
கும்பி னிச்சா யிதாவி ைலதது
கவனமுற் றதாலே
யெறவிட்ட பதியள்வெண் பாப்புலிச் சொக்கலிங்
கேந்திரசுவா மியிணையடியை
மறவாத சொக்கயன் சொக்க னெழுதிடும்
விண்ணப் பத்திரம்
பொறவிட்ட கருணை சமுத்திர மலம்பாது
பூர்வந்தர சொற்கம் பொங்காது
பானு ரவிமங் காது வந்துநிறை
பூரணனந் தஞானம்
கொறவிட்ட பாதார விந்தமும் அரும்பாது
கோளரி பயந்திடாது
கொடுத்துவைத் ததும்நின் றிடாதுநின் சித்தம்
யெண்குணமது அயர்ந்திடாது.

[இதுவுமது]

கலித்துறை

587. கண்டான் துரைதுரை வெண்பாப்புலிச் சொக்க லிங்கம்
கொண்டான் மதுவென்று சொன்னாய் நமதுகுல
[தெய்வங்காள்
தண்டா மரைமுகற்று லிங்காயித் தருணம்வந்
[துகண்டாலுன்
மண்டை உடைப்பா னவளரி கைக்கண் டிகைகொண்டே.

அகந்தை நீக்கம்

விருத்தம்

588. தன்னு ளகந்தை தலைக்கேறிச் சாமர்த்தியங் கூறுவ தாகா
முன்ன மயனு மரியுமகந்தை யொழியவ வர்தேவவடி
[வகன்று
வன்னமிழுக் காம்பன்றி யுருவானு ரெனநூ லறையு மன்றே
யின்ன மவர்கள் கந்தையினு லிடரே கொடுக்குமென்
[றறியீர்.

கூடற்கயற் கன்னியைப் பாடியது

கட்டளைக்கலித்துறை

589. மனக்கெளவை நீக்கிநிற் கோலமுட் கொள்ளும்
[வகையுறியே
னெனக்குநற் கேகய மேகெதி கூடுவ தெவ்வண்ணமோ
புனக்குயி லேபுணர் கீதவண் டேகிளி காவனமே
கனக்குங் குவிமுலை மாதேதென் கூடற் கயற்கண் ணியே.

சங்கரனரைப் பாடியது

விருத்தம்

590. கங்குலிலே நட்பாறக் காலிலே கனவேனுங்
கண்டி ரந்தச்
சங்கரனர் திருத்தாளில் விழியிடந்து சாத்தியதோர்
சமத்தைப் பாரீர்
அங்கணனு ராரு ராடரவக் கிண்கிணிக்கா
லருமை யெல்லாம்
செங்கணெடு மாயனுக்கோ யல்லால்மற் றெருருவருக்குந்
தெரிந்தி டாதே.

### சிவார்ச்சனை

#### விருத்தம்

591. செந்த மட்சதை பூவராங்
இளர்து இலேபு ணர்ந்தான்
சந்தமா மமுதடைக் காய்
தானிவை யெட்டோ டேத்திப்
பந்த மதகலப் பத்தர்
பரிந்துபூ சாதி செய்யு
மந்தமில் சிவனைக் கூடு
மட்ட வற்சனை யீதாமால்.

#### [இதுவுமது]

592. அரிக்கியம் பாத்தியத் தோடா
சமன மயிடே கந்தான்
தருக்குநல் லமுத மைந்தாம்
தற்பனம் தூப தீபம்
மருக்கொள் வீசணி கவரி
வாத்தியங் கீதம் நிற்கும்
சுருக்க மில்துதி சுவத்தோ
டஞ்சலி சுத்தி ரெட்டாம்.

### தவசங்கம்

#### கலித்துறை

593. தவசங்கம் மான்பின் முன்னது பாசத் ததிலுறவா
யவசங்கஞ் சார்ந்திடும் பொல்லாத பாவித் தழும்பனென்
சிவசங்கஞ் சேர்க்குஞ் சிவப்பிர காசத் தின்கரனே [னைச்
தவசங்கஞ் சிந்தை யுறவா யிருக்கத் தகுவாமே.

### சிவகதி

#### கட்டளைக் கலித்துறை

594. தவசிக ளாகி நிதிகளைத் தேடியுந் தானமிகவே
பவறுழல் பாசமா னங்களைக் கீர்ந்துடன் பாங்குரைப்போர்
அவசெயங் கேட்டிது பக்கத் திருந்தவ ராரபையஞ்
சிவகெதி யோசிவ னேயென்ன பாதகந் தீதிதுவே.

### எண்ணெய்முழுக்கு

### விருத்தம்

595. அருக்க னெண்ணெய் யழகழிக்கு
மணியார் திங்க ளழகுண்டாந்
திருக்கண் செவ்வாய் தீமூட்டுஞ்
செய்யு புதனில் மதியுண்டாம்
பெருத்த வியாழம் பெரும்பீடை
பேரான் வெள்ளி பொருள்போக்கும்
கருத்த சனியில் லாபமுண்டாம்
கற்றோர் நாளுங் கருதியதே.

### [இதுவுமது]

### வெண்பா

596. எண்ணெயிட லாகாதே னுங்கிழமை நாலுக்கும்
யெண்ணெயிட முன்னோ ரியம்பினார்—யெண்ணெயிட
ஞாயிறுபூச் செவ்வாய்மண் நல்லவி யாழமறு
தூயவெள்ளி நீறெனவே சொல்.

### [இதுவுமது]

597. இரவி யறுதிங்கள் எண் திங்கள் செவ்வாய்
பரவு சனிபனி ரண்டுமாதம்—பிறவிமயிர்
பூதலத்தே வீழப் பொறுத்தாள் புவிமடந்தை
மாதவத்தோர் சொன்னார் மகிழ்ந்து.

### [இதுவுமது]

### விருத்தம்

598. உத்திடு மெண்ணெய் தேய்த்த
லுயிர்ந்திரு பெரியோர் சங்கம்
பத்தியே பிடிக்கப் பின்னும்
பரிந்தவ ருண்ட வெச்சில்
தத்தியே யெடுக்கக் கோவை
நயந்துதன் கையாற் கீறல்
நித்தி யங்கோடி யெக்கிரு
பலன்தரு நிகழ்த்துங் காலே.

### ஈனராவாரிவரெளல்
### வெண்பா

599. இரப்பவனீ னன்யா துமிரப்பார்க் கில்லையென்று
கரப்பவனீ னன்கசிந்த விப்பார்க்—கரக்கின்ற
பாவியீ னன்யாதுமு ரைத்தபின் னில்லென்போன்
லோகத்தெல் லோர்க்குமீ னன்.

### சிவப்பிரகாசையனைப் புகழ்ந்து பாடியது
### விருத்தம்

600. யாவ னொருவ னுலின்கீ ழறங்கள் தவத்தோற்
கருள் புரிவான்
யாவ னொருவ னிப்புவியி லருளே யுருவாய்
அவதரித்தோன்
யாவ னொருவன் சிவப்பிர காசைய னென்னும்
பெயருடையான்
யாவ னொருவ னெமை யாள்வா னவனே
யெங்கள் குருதானே.

### இயற்கை
### வெண்பா

601. தினைக்கு மரவிந்தம் நீள்பசலை மாம்பூ
வனைத்துருவுங் காட்டு மசோகம்—வனத்திடையே
முல்லைக் கிடைகாட்டு மாதே முழுநீலங்
கொல்லுமத னம்பின் குணம்.

### திருப்பாதாளீஸ்வரம்
### [இதுவுமது]

602. காம்பனைய தோளார் முகத்தைக் கலைமதியென்
றும்பற் பகலே யரும்பவிழ்க்கும்—பாம்பைத்
திருப்பாதா ளீசா திரிபுர மூன்றட்ட
பொருப்பாதா ளீசர் பொழுது.

### புத்தூர்
### [இதுவுமது]

603. நன்னீரை வாராமல் நாடோறும் நாடோம்
வென்னீரை வார்த்து விடவேண்டா—முன்னீ
ரடுக்குமஞ்சம் புத்தூரி லாவுடையா ரேவவ்வே
லெடுக்கும் புத்தூரி லே.

### காழிச் சிறப்பு

[இதுவுமது]

604 கொக்கின் கனிநோக்கிக் கோகனக மீதொழுக
லக்கெரிக்கு நெய்யொழுகுங் காழியே—யக்கரவ
மார்த்தானை யஞ்சானை யாரானை மாரனைப்
பார்த்தானைப் பார்த்தான் பதி.

### விடுகவிதை

[இதுவுமது]

605. நந்தியின் மீதிருப்பர் நல்ல நல்ல நாதரவர்
புந்தியின்மே லாடை புனைவர்—சிந்தையராய்த்
தையல்திரு மேனிவைப்பர் சம்புவல் லாலிக்
கதையைமற வேயருளு வாய்

606. குடமிடமேல் கொண்டு நிற்பள் கொங்கையுள்ள மங்கை
தடமகலி யேகித் தரிப்பள்—புடவையொடு
கொத்தமலர் கொண்டுநிற் பள்கோ தையில்ல
யிக்கதையைக் குற்றமற கூறு.

### ஒன்றுமுதல் பத்துவரை

விருத்தம்

607. பெருமாள் பிறப்பொரு பத்து மணியொன் பதிக்கசங்
யுருவா ளியேழு சாஸ்திர மாறு வுகந்து பெற்ற [ளெட்டு
தருவான தைந்து மறைநான்கு முற்றமிழ் சாதி ரெண்டு
வருமால் தென்கோடி ரகுநாத தேவன் சொல்வார்த்தை
[யொன்றே.

### நிதிதரும் கச்சி

வெண்பா

608. செல்லன்கச்சி சேர்ந்ததற் பின்தான் மணிகளவை
நல்லதரு மேகம் நவநிதிய—மெல்லவே
முட்டன்றி யொன்றிரண்டு மூன்றுநா லைந்தாறே
ழெட்டொன் பதுபத்தாச் சே.

### வாரநாட்கள்

[இதுவுமது]

609. என்னசனி ஞாயிறுபோ யித்திங்கள் வந்தெழுந்தால்
மின்னுமலர்ச் செவ்வாய் வெதும்புதோ—தென்னரங்கா

மன்னும் மதனம் புதனுல்வி யாழமுடைத்
தன்னையெதிர் வெள்ளியுமா னுல்.

### மானிடர் நிலை

[இதுவுமது]

610. கோபுரத்துப் பொற்பாவை கூனிக் கழுத்திருகிக்
கோபுரத்தைத் தாங்குகின்ற கொள்கைபோல்—கோபுரத் [தைத்
தாங்குவார் வேறுக்கத் தன்தலையிற் வைத்ததுபோல்
ஏங்குவார் மானிடவ ரெய்து.

### சகுனம்

விருத்தம்

611. கொடிநரி கிள்ளை வேங்கை
குலமரை கோழி கொக்கு
வடிவுள மஞ்சை யோந்தி
மாமரை பசுக்கள் மேந்தி
கடிகமழ் நாபி நாரை
கடுத்துவான் சேவற் போத்து
வடிமுயல் வலத்தில் போகில்
வருமென கருமம் நன்றே.

[இதுவுமது]

612. வானரம் சுணங்கள் சண்டன்
வலியன்நற் பாம்பு பூனை
யேனமூஞ் சூறு சுண்டான்
யெரிவிழிக் கூகை யோடு
கானகக் கருட ஞந்தை
காடைக லுடும்பு கீரி
தானுகந் திடமே போகில்
சாலவுங் கரும மன்றே.

[இதுவுமது]

613. கன்னிய ராசர வேசி
கடிமண மிரட்டைப் பார்ப்பார்
வன்னிய முரசு சங்க
மங்கலக் கழுத்தி யாள்பால்

துன்னிய தயிருஞ் சோறும்
துயருட னிறைச்சி கள்ளு
மின்னிவை யெதிரே காண
யாத்திரை போக நன்றே.

[இதுவுமது]

614. தலைவிரி மொட்டை தட்டை
தவசிசன் னியாசி தட்டான்
முலையிலி புதிய கும்ப
மூக்குறை விறகு கட்டு
நலமலி குறுநோ யாளர்
நல்லநூ விழந்த மாத
ரிலகிய குருடு செக்க
னெதிர்வரப் போகா தென்றே.

[இதுவுமது]

வெண்பா

615. தும்ம லிடறல் துடர்ந்தழைத்தல் மேல்முட்டல்
கொம்ம முலையாள் குறுக்கிடுதல்—அம்மனையா
ளெங்கெங்கே போகின்றீ ரென்றழைப்பா ளாமாகில்
தங்கிப்போ யன்றுதரித் து.

சிவலிங்கக்குறி தரித்தல்

விருத்தம்

616. சிரமொடு களம்நன் மார்பு
சிறந்துள வுதாங்கக் கங்கே
கரமெனு மிவற்றி லொன்றில்
கட்சிவ லிங்கந் தாங்கல்
வரமிடி நாடி யின்கீழ்
வார்சடை துதியின் பின்பார்
புரைமி டத்தினி லென்றும்
பொருந்துறத் தரிக்கோ ணுதல்.

நாழிகைக் கணக்கு

வெண்பா

617. அளந்த டியதனை யாங்கிரட்டிச் செய்து
குளுந்த பதினொன்றைக் கூட்டி—வளர்ந்தவொரு

பத்தோ டிருநூறு கூட்டிப் பகிரவே
வொத்தது நாழிகையென் றோதீ.

### விருத்தம்

618. அருக்கன்மே லபயவார்த் தையிரண்டில் சாவு
வகன்றவர்கள் போய்வாமூ ணுறக்கமே நா லு
வுருக்கமுள்ள சாவதனைக் கேட்க வேணு
மொருசண்டை யோடைஞ்சு வுறவா ருகும்
விரித்தலையு மழுகுரலு மழையு மாறி
மேவிவரு மயவார்த்தை மிகவு மேழு
தரித்திடுசந் தனமணமும் பூவுங் கொண்டு
தகுதியுள்ளோ ரெட்டெனவே சாத்துஞ் சித்தம்.

### [இதுவுமது]

619. சித்தமிக வுண்டாகும் நாலோ டஞ்சு
சேர்ந்துவரு ம்பயவார்த்தை தெரியும் பத்து
வத்தமிகு யாத்திரையா மாறோ டஞ்சு
வரமகிழ் கலியாண மாறோ டாறு
பத்தமிகு காணிக்கை பதிமூன் றுகும்
பயந்தவ ருமிழவோலை பதினு லுமாதே
மெத்தவரு வுறவின் முறை யேழோ டெட்டு
விரும்பிவகு முறவோலை விரும்பு வீரே.

### அத்தம்பணம் கலைபுடவை அன்னன் சோறு
### வேணியனுதர்ச் சிலம்பினைப் புகழ்ந்தது

### கட்டளைக்கலித்துறை

620. சோமன் தனையணி வேணிய னுதர் சுடர்சிலம்பில்
தாமன்புரி குழற்றய்ய நல்லீர் சக்கிரவா ளந்தன்னில்
மாமன் றமையன் மகன்பகை யாகிய மாமலரைக்
காமன் பகைவன் மகன்பரி மீதினிற் கண்டனளே.

### விருத்தம்

621. வெள்ளிய திருவெண் ணீற்றை
மேவிய கோவில் திக்கு
அள்ளிய போது சிந்தை
யரனடி மீதில் வைத்து

எள்ளள வதனிற் பாதி
யவர்க்கெடுத் தீயு மென்று
தெள்ளிய ஞான நூல்கள்
தெளிந்தனர் பெரியோர் தாமே.

[இதுவுமது]

622. பரிகரி மேலி ருந்து
பாங்குள திருவெண் ணீற்றை
யொருகையா லதனை வாங்கி
யுதாசனித்திடுவ ராகில்
நரிகழு வாகி நாயாய்
நலமிலாக் கழுதை யாகி
யெரிநர கத்துட் காளா
யீனராய்த் திரிவ ரன்றே.

[இதுவுமது]

623. உடம்பினைச் சேர்ந்த போதே
யுடம்பு தானு யிருக்கும்
மடம்படு மாய்கை சேரில்
மாயையி னியல்பே மன்னு
மிடம்படும் பரத்தை சேரி
லீசன தியல்பே யாகும்
திடம்படு முயிரின் சேதி
சேரந்தத்தின் வண்ண மாமே.

கடன்பற்றி பாடியது

விருத்தம்

624. ஈடுகண்டு கடன்கொடுக்க விகுற்றம் நீங்க
ளென்ன கண்டுகடன் கொடுத்தீரில்லை யென்றால்
மாடுகண்டோ பயிர்கண்டோ வுடைமை கண்டோ
வரவு கண்டோ இதுவெல்லா மறிந்தேபட்ட
பாடுகண் டலைச்சல்கண்டு மதுரக்கட் டுப்
படுதல்கண்டுபசி கண்டு பழைய பீத்தல்
வீடுகண்டு கடன்கொடுக்க வேணு மோசொல்
வேகடமும் சகித்தனையும் வேணுந் தானே.

### அன்பின் சிறப்பு

625. மங்குலம்பதி னாயிரம் யோசனை கண்டு நடமாடும்
தங்குமாறு நூறாயிரம் யோசனை தாமரை முகிழ்விளக்கும்
திங்களிரண்டு நூறாயிரம் யோசனை திகழ்ந்திடு மரக்காம்பல்
லெங்கையாகிலு மன்ப ராயிருப்பவ ரிருதய மகலாரே.

### கடன்கொடுத்தவன், கடன்வாங்கியவனை இகழ்ந்து கூறியது

### விருத்தம்

626. கலப்பாலை யொருமூன்றாய் குடித்த பூனை
கறவென்றால் பாலுழக்கு கறவா தென்றே
சொலப்பாரு மெங்கள் சிறு வாகம் பாரும்
தொந்தரையைப் பாருமென்மேல் தோஷஞ் சொல்லு
மலைப்பானே னடிக்கடி நீமறிப் பானேன்
வட்டியென்றும் வாசியென்று மயங்கி யப்போ
அலப்பாதே கடனடுத்த பதறே போம்போ
மல்லவென்றால் மறியிவிருந் தறிகு வீரே.

### முருகன்பவனி கண்ட தலைவிநிலை

### கட்டளைக் கலித்துறை

627. முதிராமுலை வள்ளி பங்கன் தணிகை முருகனிராக்
கதிபோலு மாறு முகவன் பவனியைக் கண்டமட்டில்
யெதிராரு மின்றி யிருக்க மதன்கணை யெய்யவஞ்சிப்
பதினாயிரங் கோட்டைப் பாங்காயிருந்தனள்பைங்கொடியே.

### இது அலர்குறி கொறுக்கைமேலே வெள்ளி பூத்ததைப்பாடியது

628. குருமகன் வெம்பைவாழ் குமர னாட்டிலோ
வொருமுகம் போட்டுமற் றொருமுக மாயினான்
மருமகன் மருமகள் மடிந்த வூரிலே
திருமகள் மருமகள் தேவி பூத்ததே.

### இனஞ்சேர்கையில் முரண்

### விருத்தம்

629. பண்காணு மொழிப்புலவி ரினத்தோடே யினஞ்சேரும்
பரிசேயல்லால்
தண்காவி மலர்த்தடஞ்சூழ் காவிரிநாட் டொருபுதுமை
தன்னைப் பாரீர்

கண்காண நரையான்மேல் வெண்காட னினிதிருக்கக்
கண்டோ மிந்த
வெண்காட னிடப்புறத்தே பச்சையன்னங் கலந்திருக்க
விதங்கண் டோமே.

### சோதிடம்

#### விருத்தம்

630. ஒன்றினில் தனங்கள் பேறு
மொருபிணி ரெண்டு கேடு
வென்றல்ல மூன்று தன்னில்
மிகவுடன் போனூர் மீள்வர்
நன்றல்ல நாலு கேடு
நலம்பெறு மைந்து தானு
மன்றல்ல வாறு கேடு
அடுத்தவர் வருவா ரேழு
வென்றிய வெட்டைத் தொட்டா
லிப்பவே மரண மாகு
மொன்பது தன்னைத் தொட்டால்
ஊழியோ டூழி வாழ்வார்.

### குறுகொணுதவை

#### விருத்தம்

631. விளக்குநிழ லாட்டுத்தூள் குயவன் சூளை
விளவின் நிழல் கங்குலின்வா ழரசு நீழல்
முளைக்கரிய தரணி நிழல் கருவேல் நீழல்
முறம்புடைக்கை பெருக்குந்தூள் மூளுந் தூளும்
களிக்கரிய சுணங்கன் தூள்கழுதைத் தூளுங்
களே பரத்தின் புகைமுதிர்ந்த கன்னி நீழல்
குளிக்கு மவ ராக்கைநீர் புலையர்நீழல்
குருதிமட வார்நீழல் குறுகொ ணாதே.

### ஊடல்

#### எண்சீர்விருத்தம்

632. சித்திர மிழைத்த நன்மங்கை நுண் ணிடைக்கே
சிற்றி லுளறிப் புழுதியொடுதிருமேனி
புதல்வனை யெடுத்து மார்புற வணைத்துப்
புறங்கிடைநின் றுனரசர் பூமதியார் கோமான்

சததள பொகிட்டி லுறையும் புனிதமாதே
தராபதியர் தேவியர் தொழுந்திரு விளக்கே
கதவினை விடத்தகு மடந்தையர் தமக்கே
காதலர்கள் செய்பிழை பொறுப்பர்கட னின்றே.

### தலைவியின்சிறப்பு

#### விருத்தம்

633. உந்திமாஞ் சுழியி னின்றவு
சோமமாங் கரிய நாக
மந்திமா மதியென் றெண்ணி
யாரிழை முகத்தை நோக்க
மந்தரத் தனங்கள் விம்மித்
தடுக்கின்ற போதே யப்பால்
சிந்துரக் கயலி ரண்டுஞ்
செவியடை செப்பித் தன்றே.

#### [இதுவுமது]

634. நிலத்திடைச் சுனையில் மூழ்க
நின்றனள் நேரே கூந்தல்
கலைத்திடை மஞ்ஞை கண்டு
காகூவென் றேகா னேக
மலைத்தடங் களிறு கண்டு
மும்மதக் கரிவந் துற்று
கலைத்திடை சிங்க மென்று
களிறுகண் டேகித் தம்மா

### செயதுங்கனைச் சிறப்பித்தது

#### கட்டளைக்கலித்துறை

635. கூளம்பிடித் தெள்ளுக் கொதுவிப் பானங் குலக்கவிக்குக்
காளம் பறித்தகை சின்னம்படச் செய்யக் காசினியில்
வேளம்பு தைக்க விழியம் பிஞல்வெம் பேய்க்கொடுபோய்த்
தாளம் மிடிக்கத் தனிவேல் விடுத்த செயதுங்கனே.

### கைவரிசை

#### [இதுவுமது]

636. ஆலாசிய மாகிப் பேரெழுத் தாற்கை யரவுகையாம்
பாலாகு மம்புயக்கை மதிப்பா திக்கை புக்கலுண்டாம்
கோலா கலன்ம டுவதையே மாத்திரிக் கொற்றவன்கை
மேலாகிய உற்பவ ரஞ்சலிக் கையென மேவுவனே.

## தலைவிகூற்று
### கட்டளைக்கலித்துறை

637. மேலாடை தோற்றணி சங்காழி கைவிட்டு மென்சிலம்பன்
காலால் வருந்தி நிலங்கீறுங் கோலத்தைக் கண்டிருந்து
மாலால முண்டவ ரண்ணுமலை யர்தம்மன் பர்க்கன்றி
மாலான வர்க்கிரங்கா ரிங்கனே யொருவன் கண்ணரே.

## தலைவன்கூற்று
### கட்டளைக்கலித்துறை

638. கொத்தார் தொடைபள்ளி கொண்டான் மழவன்றன் [கோலமின்னார்
கைத்தா மரைபட மாணிக்கமான து கண்குறுக
வித்தார மான விழிநீல மான து வண்ணகையா
லத்தா பழையவெண் முத்தாயிருந்த ததிசயமே.

## உளதும்இலதும்

639. முந்துபரியுங் கலையுங் களிறுமுனைக் குடையும்
துந்துமியு மருதாதுந் தாலுண்ட வரலிப்பின்
முந்துபரியுங் கலையுங் களிறுமுனைக் குடையுந்
துந்துமியுங் கிடையா துலகி லியாவற்குமே.

## எல்லாமாயாயவர்
### எழுசீர்விருத்தம்

640. வரைக்கனக சபைசோண கிரிப்புனித காலகால
மதிக்கினடு மாயர் போலவே
தரைக்குளே யினிதாவர் யாவரவர்க்கு முனிலாது
வீடுதழற் கரியாக நீதியோ
விரைக்கமல வோடையாவர் புரத்தைமுனி பானமாவர்
விடைக்கொடியு மாவரீதலா
விரக்கு மன்னதொறு மேறிநடத் துமெருதாவர்
மீள விடத்திலுறை தேவியாரே.

## தலைவிவருணனை
### விருத்தம்

641. உலகுகண் டகராய வருசலந் தரனு
ருடல்பிளந் திடுவார் கடல்விடங் கொளுவார்

குலவுசங் கரனு ரருணையின் கிரிசூடி
குளிர்புனந் தனிலே கிளிகடிந் துறைவார்
மலர்முகஞ் சசியே வடிவமுஞ் சசியே
வருணமென் குழையே மகரமென் குழையே
முலையுமந் தரமே யிடையுமந் தரமே
மொழியுமா சுகமே விழியுமா சுகமே.

[குகன் மேல்பாடியது]

கட்டளைக்கலித்துறை

642. மாலம் பரத்தம் நிகரோதி கண்ணிதழ் மாதர்தரு
மாலம் பரத்திற் படிந்தெனை தாருயிர் மாய்ந்திடுமுன்
மாலம் பரத்தை யருள்க மலாலயன் மாமுனி வோர்
மாலம் பரத்தன் துதிசெய்கங் காபுரி வாழ்குகனே.

சிற்றம்பலம்

கட்டளைக்கலித்துறை

643. சிற்றம் பலத்தை யரன்புனெய் யூற்றிரி சிந்தையிடுஞ்
சிற்றம் பலத்தை வரைஞான தீப மிட்டார்க்குபரி
சிற்றம் பலத்தை யருளுஞ் செந்தூர் பகைக் குலமாஞ்
சிற்றம் பலத்தைப் பரவ வான தொளிருந் தீவரமே.

[வேலப்ப தேசிகனைப் புகழ்ந்தது]

வெண்பா

644. அங்கமலம் போக்குமே யங்கமல மாக்குமே
யெங்கு மிலா நேயத்திலாக்குமே—மங்குறவழ்
தென்னு வடுதுறைவாழ் தேசிகவே லப்பனது
மன்னு பரிகலமே வந்து.

[இதுவுமது]

645. பன்னென்றும் வேலப்ப தேசிகன்றன் பார்துதிக்கப்
பின்னென்று கற்பணியாய்ப் பேணினன்—முன்னென்ற
நல்லோர் புகழுரைசை நன்னமச்சி வாயரவர்க்
கல்லோருங் காணவே யின்று.

கவுணியனைச் சிறப்பித்தது

646. தருணமங்கலை யுனதுசிந்தை தழைத்தபால மூதூறிஞ
ளருண கொங்கை யிலதுபெருங் கவியலை நெடுங்க
[லாகுமோ

வருணாநன்குறு கவுணியன்சிறு மதலையம் புயல் பருகியே
பொருணயம் பெறு கவுணியன்சிறு மதலையம்புயல்
[பருகியே.

### மாபெலிவாணன் சிறப்பு

கலித்துறை

647. மாலோதி நித்தந் தமியேன் வருந்திவரு டப்பெற்ற
காலோ நடந்தன கண்ணோ திரும்பின கற்றவர்க்குப்
பூலோ கமுந்தரு மாபெலி வாணன் பொருப்பிடத்தே
மேலோ ரிரங்குவா ரென் ஞளும்விரோ திப்பாரே.

### மருதூர்விட்டுச் செயதூர்ப்புகுந்தது

[இதுவுமது]

648. கண்டீர் வந்தங்கு காட்டிரு வோருங் கதிர்மறைவுங்
கண்டீர் வந்தனிப் போவதிங் கேதங்கிக் காலையிற் போங்
கண்டீர் வந்தமொழி பாங்கனைத் தென்னங் காமருதூர்
கண்டீர் வந்த செயதூர் புகுமின் கவலையற்றே.

### ஞானமார்க்கம்

வெண்பா

649. பாவையர்க்குப் பேதைப் பருவத்தில் நற்றலைவன்
மேவியபோ தின்பம் விளையுமா—தாவியே
ஓயாமல் தேசிகனை யுற்றும் பருவமல்லா
லாகாது ஞானச் சுகம்.

### கதிர்க்குறையோ

650. அடிவைத்தன் ஞரிய னன்பினோடு
மிடிகேட்டி லென்ன வினைபயனோ
படிகட்டிய பங்கைய வாவிதொறுங்
கடிமொட்ட லராது கதிர்க்குறையோ.

### சிவப்பிரகாசரைப் புகழ்ந்து பாடியது

விருத்தம்

651. கருணை யங்கட லேககன நாயகனே
கட்செவிக் கங்கணு
தெருளலா மடியார் சிந்தையி லமர்ந்த
செழுஞ்சுட ரொளிமணிக் குன்றே

மருமலரா யன் மால் காணுதற் கரிய
வள்ளலே யுள்ளுவோர் பொருளே
திருவளர் பட்டீச் சரத்தினி லமர்ந்த
சிவப்பிர காசதே சிகனே.

[இதுவுமது]

652. மாசிலா மணியே பேசொணு வமுதே
வள்ளலே தெள்ளுதா மரையே
யீசனே கயிலை வாசனே பொருளே
யின்பமே துன்பமி லானே
காசினி யடியார் பூசையை யுகந்தாய்
கயவனே னுயவருள் புரிவாய்
தேசிக னம்மா பட்டீச்சரம மர்ந்த
சிவப்பிர காசதே சிகனே.

[இதுவுமது]

653. புண்ணிய மலையே நண்ணிய சுடரே
போகமே யோகத்தின் பொலிவே
வண்ணமே மறையே மண்ணில்வாழ் முதலே
வானமே ஞானவா ருதியே
யண்ணலே யமுதே கண்ணில்வாழ் மணியே
அன்பிலா வன்பனே கருவாய்த்
திண்ணமா யமர் பட்டீச்சரம மர்ந்த
சிவப்பிர காசத்தே சிகனே.

ஒன்றையொன்று நோக்கியிருத்தல்
[இதுவுமது]

654. அன்னையே நோக்கி நிற்கு
மாயிழைக் குழவி அய்யா
பொன்னையே நோக்கி நிற்கும்
பொதுவிலை மகளிர் வானந்
தன்னையே நோக்கி நிற்குந்
தரணியிற் பைங்கூ ழெல்லாம்
நின்னையே நோக்கி நிற்கும்
நீணிலத் துயிர்கள் யாவும்.

## நூலியலும் உலகியலும்

### வெண்பா

655. ஈவானே தெய்வ மிரப்பே யிளிவரவு
யாவானே நூலி னயனறிவான்—பேய்மேயுங்
காடேகாப் பார்தம்மில் லங்க டுபுலையன் தன்
வீடே விடக்குண்பான் வீடு.

### உயர்வுள்ளல்

656. மறுமைகண்ட மெய்ஞானியர் ஞாலத்துள் வரினும்
வெறுமைகண்டபின் யாரேனும் யாவையும் விரும்பார்
குறுமைகண்டபின் கொழுங்கன லென்னினுங் கூசார்
சிறுமைகண்டவர் பெருமைகண் டல்லது தேறார்.

### காழிக்கோன்

657. ஊழிக் காலத் துறுகடல் மிதந்த
காழிக் கோனே கவுணியர் பெருமான்
முன்னம் பாடிய செந்தமிழப் பாமாலைக்
கின்னம் நாறு மிளமுலைப் பாலே.

### திருவரங்கத்தைப் பாடியது

### வெண்பா

658. வருவரங்க மென்றே வருந்தினவர்க் கெல்லாந்
திருவரங்க மென்றால் திகட்டும்—திருவரங்க
ரங்குசக்க ரக்கரத் தரக்கரைத்து ணிந்துவிட்ட
சங்குசக்க ரக்கரத்தர் தான்.

### திருவரங்க நாதனைப் பாடியது

### [இதுவுமது]

659. சித்திரமாங் கோவில் திருவரங்க நாதனார்
மெத்தெனவே பஞ்சணைமேல் மேவினார்—நித்தநித்தம்
செங்கையும்சங் கும்புணர்ந்துத் திங்களும்கண் டங்குறங்
கொங்கைரெண்டுங் குங்குமந்தங் கும். [கும்

### கணபதி துதி

### [இதுவுமது]

660. செம்பொற் கனகசபை சிற்றம் பலர்மகிழும்
தம்பிக்கு மூத்த தயாபரனே—கும்பக்

குறட்டொறட் டுருடவல் பயறு நெறநெறனக்
கறட் றடநெருடுவய றன்.

### சிவனார் திருட்டு

**வெண்பா**

661. தில்லைக்கா வுக்குள் சிதம்பரனா ராட்டையெடுத்
தில்லைக்கா ணென்றுமழு வேந்தினார்—சொல்லக்கேள்
மெய்யிலே கண்டோம்மீண் டுங்கோ ளயனுமாமே
னெய்யிலைகை யிட்டானன் றே.

### அரிராமர் துதி

662. அரிராம ராமசிவ சங்கரா வென்ற அன்பர்பவ
மரிராம ராமசிவ சங்கரா வென்றன் றிரணியனை
யரிராம ராமசிவ சங்கரா வென்ற ரக்கர்குல
மரிராம ராமசிவ சங்கரா வென்ற ருளினைக்கே.

### பாவம் விட்டது

**விருத்தம்**

663. தூரத்தில் கோபுரந் தோன்றக் கண்டேன்
தொழுதேன் நடந்தேன்
சேரொத்த வீதியுந் தேருங் கண்டேன்
திருவாரூ ரில்வந்தேன்
காரொத்த மேனி யாமால் வீரரா
கவாகா வீரகுளத்
தோரத்தில் வந்து நின்றேன் செய்த
பாவம்விட் டோடியதே.

### வீரராகவர் கொடை

**கட்டளைக்கலித்துறை**

664. சங்காழி யேந்திய மால்வீர ராகவர் சன்னதிக்கே
யெங்கா ரியமாகப் போயிருந் தேனவ ரேதுதந்தார்
மங்காத செல்வமும்புத் திரசந்தா னமும்வாழ் வுந்தந்தார்
சிங்கார மாயிருந்தேன் பின்னை வேறொரு தீங்கில்லையே.

### திருவொற்றியூரைப் பற்றியது

**வெண்பா**

665. மடவரலைத் தூதுவிட்டும் வந்தெனது கொங்கைத்
தொடவரலை யென்செய்கேன் தோகாய்ப்—படவரலைச்

சேருங் கயல்வாரித் தேருங் கரையொற்றி
யூரன் றிருவள மேது.

வருணனை

[இதுவுமது]

666. நடமாடு மீசர் நளின வரையில்
மடமாதர் தம்மிலிந்த மாதுக்—கிடையோதான்
சிங்கந்தான் கொங்கை சிகரந்தான் மெய்நடமா
தங்கந்தான் மாதங்கந் தான்.

தலைவி கூற்று

[இதுவுமது]

667. மாலைத்த னைத்தந்த வள்ளலொற் றித்தியாகர்
மாலதனைத் தந்து வருவாரோ—மேலையெழுஞ்
சோமந்தர் னேமந்தான் சூழுமிராப் போதிலொரு
சாமந்தான் கோடியுகந் தான்.

தலைவனிரங்கல்

கட்டளைக்கலித்துறை

668. பொற்பாளை வீசுந்தென் னொற்றூர்த் தியாகர் பொருப்பின் [முளைச்
செப்பாளைக் கெண்டைச் செயல்விழி யாளைத் திருவைநிக
ரொப்பாளை வேளுக் குபதே சிப்பாளை யொருமயில்போல்
நிற்பாளை யெப்படி யோபிரிந் தாற்றுமென் னெஞ்சகமே.

காமாட்சி

[இதுவுமது]

669. வாமாட் சிகாமணி மாயன்ச கோதரி வன்மைசெல்வந்
தாமாட் சியாகத் தருஞ்செல்வ நாயகி சங்கரித்தாய்
நாமாட் சிசாந்துதிப் பாய்கஞ்சி மாநகரம் நண்ணியசீர்
காமாட்சி யம்மையைக் காணாத கண்களுங் கண்களன்றே.

உத்திராபதி

விருத்தம்

670. கந்தனையும் பந்தெடுத்துக் காசினியி லேயெவர்க்கும்
காட்சி யாக
நிந்தனையோ செங்காட்டங் குடிமேவுமுத் தரபதீசா
நீதி தானோ

இந்துநய னத்துளிபோல் சிறுத்தொண்டன் பரிவுடனே
யினிதா யீன்ற
மைந்தனையுமறுத் தன்றுமாப்பிள்ளைக்கு மிச்சைகொண்டு
வருகின் றீரே.

[இதுவுமது]

671. அடிகெட்டேன் பிள்ளைகளைக் கைவிடாதே பதனம்
அப்போ தென்பார்
குடிகெட்டுப் போனகதை கேளீரோ
குடியீ தன்றோ
பிடிகெட்டி யாகஉங்க ளைம்புலனும் நெஞ்சதனில்
பிசகிடாமல்
துடிகொட்டி வருமுழக்க உத்தராப தியீசர்
தோற்றந் தானே.

ஆரூரர்

[இதுவுமது]

672. கொடிபட்ட நெடுவீதி யாரூரன் சன்னதியைக்
கும்பிடு மப்போ
குடிபட்ட பேர்களெல்லாம் மந்திரப்பட் டம்பெறுவா
ரெழுந்த சாம்பற்
பொடிபட்டா விருவினையும் பொடியாமே மடநெஞ்சே
பொற்பி ரம்பி
னடிபட்டார் கனவிலிதை யாசித்தே மனதெண்டா
லடிபட் டாரே.

உதவிடுந்தெய்வம்

விருத்தம்.

673. ஊரொத் தருக்கையு மின்றிக்கோ டாதவரை
யேபாடி யலைந்து நித்தம்
தூரத்தி லேசெல்லும் புலவீர்கள்
கவிதையொன்று சொல்லு முன்னம்
சாரத்தை யேயறிந்து வேண்டுவ
திதனையே தருவ தற்கு
ஊரத்தி யானலுந் தியாகேச னெனுந்
தெய்வ மொன்றுந் தானே.

### அயனும் மாலும்

#### வெண்பா

574. சிறுவ னோப்பயறு செந்நெல் கடுகு
மறுதிகிரி தென்று மணிநூல்—பொறியரவம்
வெற்றன்னம் புள்ளேறும் வேதனயன் மாலுக்குக்
கற்றுழம் பூவே கரி.

### சோதிடம்

#### விருத்தம்

675. நித்திரை யசனம் யெண்ணெய்
நெட்டேற வுரைக்கு மாறு
உத்தரம் கிழக்கு நன்று
ஓங்குயிர் வளருந் தெற்கு
சித்தமே கிழக்கு மேற்குத்
திரவியம் நாச மாகும்
மத்தமும் பொருளும் போகு
மானதோர் வடக்குந் தானே.

### சிவப்பிரகாசர்

#### [இதுவுமது]

676. தவப் பெரு முனிவர் தேவர்
தண்மல ரயன்மால் மற்று
முவப்புடன் உருதி யேற்று
மொருவனே போற்றி நீங்காப்
பவப்பெருங் கடலை வாழும்
பாவியேற் கிரங்குந் தில்லைச்
சிவப்பிர காசன் செம்பொற்
சேவடி போற்றி போற்றி.

#### [இதுவுமது]

#### கட்டளைக்கலித்துறை

677. மறந்தானை மாயமலர்த் தாற்குத் தொண்டர் மனக் கமலந்
துறந்தானை யுள்ளொளி யானை ஆகமு முண்மை
[யெல்லாம்
அறிந்தானை யெங்கள் சிவப்பிர காசனை யண்ட பிண்டம்
நிறைந்தானை யெப்படி யோ பிரிந்தாற்றுமென்
[னெஞ்சகமே,

[இதுவுமது]

678. குன்றுத வைம்புல ஞுசிய கோரக் குறும்புதன்னை
வென்றூர் தமக்கன்றி மேதினி மேற்பவ வேரொழியத்
தென்றுனே யெங்கள் சிவப்பிரகாசனை யெங்கெங்குமாய்
நின்றுனை யெப்படி யோபிரிந் தாற்றுமென் னெஞ்சகமே.

[இதுவுமது]

679. வல்லானை தன்னை யுரித்தானை ஆக மாமறையின்
சொல்லானை யுட்பொரு ளானுனை துளராபவந்தாளெழுவே
சொல்லானை யெங்கள் சிவப்பிரகா சனையே நீயருள்ளம்
நில்லானை யெப்படி யோபிரிந் தாற்றுமென் னெஞ்சகமே.

[இதுவுமது]

080. பூண்டானை வெம்பணிப் பூணு ரமாகப் பொருந்தி யென்னை
ஆண்டானை மாய மலமறுத் தானை அசடர்தம்மை
வேண்டானை யெங்கள் சிவப்பிர காசனை வீறழலாய்
நீண்டானை யெப்படி யோபிரிந் தாற்றுமென் னெஞ்சகமே.

தலைவியிரங்கல்

[இதுவுமது]

681. அனமே யுனைப் பிரியேன் பிரியே னென்றவன் பரிப்போ
தனமே விரும்பிப் பிரிந்தன ரேதட மாமதில் சூழ்
சினமே றுகந்தென் ஞரூர்த் தியாகர் செழுஞ்சிலம்பின்
மனமே மயல் கொள் ளுவையோ யிந்தவன் னெஞ்சற்கே.

புகழ்தல்

[இதுவுமது]

682. கையிவாய் மழுவைத்த வன்மீக நாதர் மலைவெற்பில்
வெவ்வாய் வனத்திற் றவம்புரிந் தாலும் விரைதிறந்த
கொவ்வாய் குமுதக் குளிர்மல ரேயென் கொடியிடையாள்
செவ்வாய் தனக்கின் யொவ்வாய்மெய்... . சவக்கினுமே.

தலைவன் பாங்கனுக்குற்ற துரைத்தல்

[இதுவுமது]

683. மலைவன் பணியரி வின்னுண் கணைசெய்து வந்துவேங்கைத்
தலைவன் ஓமிரண் டொண்டே வல......சகம்அனைத்துஞ்
சிலைவன் கணங்கணை வேழஞ் சுரும்புலர் செய்துவென்றுன்
மலைவன் கிரிபுற வந்தனன் பாவொரு மொய்குழலே.

### ஆடுதுறையீசரைப்பாடியது

வெண்பா

684. முப்புரத்தைத் தீத்தீர் முகுந்தனுட கண்பறித்தீர்
செப்பரிய வேதன் சிரமரிந்தீர்— தப்பாமல்
முன்னே ஒரு பிள்ளைகொன்றீர் முதலாடு துறையீசர்
என்னகுற் றம்பொறுத்தீர் நீர்.

### மாடுகட்டி யாண்டமதம்

[இதுவுமது]

685. நஞ்சையெல்லாம் தின்று பிறப்பையும் டுங்கிப்பின்
புஞ்சையெல்லாம் போயழித்துப் போட்டதென்—னெஞ் [சொல்வேன்
வீடுகட்டி ஆண்டவன்வ ரத்தாண்ட வர்தமது
மாடுகட்டி யாண்ட மதம்.

### கணக்கு

விருத்தம்

686. சித்தியின்முற் சூத்திரத்துக் கெண்பத்தொன் பான்றிகழி
ரண்டிற் கொருதொண் ணூாத்தாறு மூன்றிற்
சுத்தனன் கொருநான் கிறுப்பதைந் திற்சொல்லு
மொன்பா றறினுக்கு மந்தவொன்பா னித்திறத்தேழ்
சூத்திரத்திற் கொருநான்கு எட்டினி யல்முப்பத்
தொன்பத் தந்த வொன்பா னுக்குப்
பத்திரண் டுபத்துக்கோ ராறுபதி னொன்றிற்
பன்னிரண் டப்பனி ரண்டிற் பனுவலேழ்.

### தலைவியின்மயல்

கட்டளைக்கலித்துறை

687. திரைவேலை சூழ்ந்த நன்னூருர்த் தியாகர் திமைபவனி
வரவேலை நீயுமயல் கொள்ள வேலைப் புதியசங்கம்
புரவேலை நீசங்கம் போட்டிட வேலைப் புதியசங்கம்
தரவேலை யமயவிட்டுத் தேமகளே பெற்ற தாயருக்கே.

### தலைவன்கூற்று

விருத்தம்

688. அல்லிருளி லிருண்ட குழல்மடந்தையரை யணைந்து
சுக மடைந்தோ மில்லை

சொல்லரிய தவம்புரிந்து பரகெதிக்கு
வழிதேடித் துடர்ந்தோ மில்லை
இல்லறமு மல்லாமல் துறவறமு
மில்லாம லிரண்டுங் கெட்டுப்
புல்லறலை நற்றுகின்ற காவேரிக்
கரைப்பசுப்போல் புலம்பினோமே.

### வீணர்களின்தொல்லை

### எண்சீர்விருத்தம்

689. இந்திரனுக் கொண்றுகண் ணுயிருக்கும் போதறிவேன்
எழிலயனுக் குஐந்தலையா யிருக்கும்போ தறிவேன்
சந்திரற்கு நிறைமதியா யிருக்கும்போ தறிவேன்
தபனனுக்குத் தந்தந்தா னிருக்குபோ தறிவேன்
கந்தர்தஞ் சனமரனுக் கிலாதபோ தறிவேன்
காமனுக்குங் கடலுக்கு முருவநன் னீரறிவன்
கொந்துலவுந் துளவமணி யிராமர் தானங்
கொடுத்தவர்வாங் கினவரறி யேன்குறித்துக்
[கொள்ளே.

### இலாபம்வந்திடும்

690. எந்தவொரு காலத்தில் எந்தவொரு தேசத்தில்
அந்தவொரு தினந்தன்னி லந்தவொரு முகூர்த்தத்தில்
புந்திகொளும் புக்ழாநீ விருத்தியொடு புகலாபம்
வந்திருமா றல்லாது வாராமற் றவறிடுமோ.

### தலைவி வருணனை

### கட்டளைக் கலித்துறை

691. கரும்பே யவளவன் கைக்களிறே கடுந் தேறலிவள்
சுரும்பே யவளிவள் மாந்தளி ரேயவன் கொற்குயிலே
யரும்பே முலையுண் குலோதுங்கச் சோழ னள்கைவெற்பில்
தரும்பே ரமுதத் துளியிவ ளேயவன் சாதகமே.

### யாவரும் ஒன்றே

### விருத்தம்

692. மைப்பொழில் மறையோர் மன்னர்
வணிகர் சூத்திரர் சண்டாளர்
யெப்பல குலத்தோ ரேனு
மிவர்கள் சங்கம ரேயாறு

ரப்பமாய் சாதி பேதம்
வரவரப் பண்ண லாகா
இப்படிப் பேதம் பண்ணு
மிவர்சிவத் துரோகர் மாதே.

### நிந்தை நீக்கம்

### [இதுவுமது]

693. குருலிங்க சங்க மத்தைக்
கும்பிட்டு நிந்தை சொன்னல்
வருமங்க நோயும் பேயும்
வங்கிஷ மூவே ழுக்கும்
கருமங்கள் சூழ்ந்து கொண்டு
கதறவே யடித்துக் கொல்லு
மிருகங்க ளுருவ மாக
வீழ்வர் முக்கோடி காலம்.

### பஞ்சகன்மம்

### எண்சீர் விருத்தம்

694. பொன்னுலக மெனுமோட்ச வழிகள் தேடும்
புண்ணி யங்கள் செய்யாரவ ரன்புகேளீ
ரன்னமிடுந் தூவியெதிர் கல்லுநெல்லு
மாக வஞ்சுதிரம் பகர்வா ராவா ராகில்
தின்னுமெனக் கறிபகர் வர்கை வழங்கா
ரெத்தனைசோத் தைத்தின்ற னப்பாவென்று சொல்
சொன்னகுற்றம் வயிற்றிலெழும் நோவீ ரெட்டுந் [வார்
தோன்றுபஞ்ச கன்மமெனச் சொல்ல லாமே.

### ஈதலின் சிறப்பு

### விருத்தம்

695. படித்தபா வாணர் தக்கோர்
மறையவர் இரப்போர்க் கெல்லாம்
கொடுத்துஆர் வறிஞ ரானர்
கொடாமலார் மண்மேல் வாழ்ந்தார்
எடுத்தகா னகத்து நீரு
மோதுகா னகத்து நீரும்
அடுத்தநாள் வந்தால் வற்று
மவையுணர்ந் தறிகி லீரே.

### கருமாணிக்கனைப் புகழ்ந்து பாடியது

கட்டளைக் கலித்துறை

696. பச்சிலை யேயிலை யேயதி லேகரி யட்டுதென்றல்
மெச்சிலை யேகுயி லேமிதி லாபுரி மெல்லியர்க்காக்
கைச்சிலை யேந்திய மால்கரி மாணிக்கன் கப்பல்வெற்பி
னுச்சிலை யேபெறி னென்படா திருந்த தம்புவியே.

### சொக்கேசரைப் புகழ்ந்து பாடியது

[இதுவுமது]

697. பார்க்கப் படாதவை யேற்றலும் புல்லர்க் கிதங்கள்பல
சேர்க்கப் படாதவைச் செற்றலு மங்கவர் சீற்றமவர்க்
கார்க்கப் படாதவை காற்றலு மந்தக் கசடர்முகம்
பார்க்கப் படாதுசொக் கேகூடல் வாழும் பதிக்கஞ்சியே.

### பாவியர் பணம்

[இதுவுமது]

698. புதைப்பார் தனத்தை யதன்வா யிலுமண்
ணைப்போட் டுத்தன்வாய்க்
கதைப்பார்க் கிலும்மண்ணைப் போட்டுக்
கொள்வார்பசி யாலிரங்கிப்
பதைப்பா ரெடுத்துண்ண மாட்டார் செருப்
பிட்ட பாதத்தினல்
உதைப்பார்க்கு மேகொடுப் பார்சென்ம பாப
வுலுத்த ருக்கே.

### அரங்கநாட்டிகனுக்குச் சொக்கன் எழுதி விட்டது

சீட்டுக்கவி

699. செந்தமிழ்க் காட்டினிற் சஞ்சரித் திடுகவிச்
சிந்துரக் கூட்டங்களைச்
சின்னபின் னங்கள்பட வென்றகண் டீரவஞ்
செயவாணி சிம்மாசனன்
சுந்தரத் துரைமக்கள் மெய்க்கஅவ தானஞ்சொல்
சொக்கயன் மகிழ்பேரனுஞ்
சூரசம் மார வடிவேலர் பதசேகரன்
சொக்கன்வர விட்டவோலை

தந்திமிறை கண்டுபொன் வரையையுரை கண்டுதன்
சம்பத் திலேகுபேரன்
தனைநிகர்த்திடு வசியர்குலத் திலகனு மிரங்க
தாட்டுகனெதிர்ந்துகாணச்
சந்தத முனது புகழ் கொண்டாட நமது தமிழ்
தனைவினவி பொன் பத்திலே
தலைக்கணிந் திடுபாகை துப்பட்டி சாமரை முதல்
தந்தனுப் பிடவேண்டுமே.

## திருமால்துதி

### கழிநெடில்

700. பூமகள் மருவுமார்பனே யிமை யோர்
போற்றிய சங்குசக் கரனே
பூவையர் பதினா யிரம் பேரைப்
புணர்ந்திடும் நிரந்தர முகுந்தா
தேமலி துளபமாலி காபரணா
திகழ் வடமலை மிசையமர்ந்த
தேவனே யாதி மாயவா அடியேன்
விண் ணப்பமொன் றதுகேள்
சோமசூ ரியனைத் தராசெனப் படைத்த
தொன்றியம் புயனை மாவணிக
ரதுங்களை யன்னா ரிரட்டிக்
கோத்திரனைத் தூயநாரா யணன்சுதனை
யேமல் வரையை யுரைத்தகைத் திறனை
யெழில் வடமலை சகோதரனை
யின்புறு மிரங்கவே ளைமார்க் கண்ட
னெனவிருந் திடமகிழ்ந் தருளே.

## தலைவன்கூற்று

### கட்டளைக்கலித்துறை

701. கடன் கொடுப்ப பாரில்லை யேயிதழ்த் தேன்களை
[யாறவலப்
படன் கொடுப் பாரில்லை யேயெனை யேயாட் கொண்ட
[பாரமுலைக்
குடங்கொடுப் பாரில்லை யேமனந் தேறக் கொடுக்கை
[குச்சத்
திடங்கொடுப் பாரில்லையே தெய்வமே யின்று ராத்திரிக்கே.

### இரங்கிக்கூறல்

702. சவரியா னேனிலை தையலே நின்ஒதி
குடிகொண் டிருந்து நான்குலா வுதற்கு
முத்து மூக் குத்தியாய் நான்பிறந் தேனிலை
யதரமது வுண்டுநா னுசைதீர்
வாகினேனிலை மங்கை நின்முலை தன்னில்
கட்டியு றவாடினுன்கா தல்தீர துடியான
யிடை மருவுதுகி லாகி னேனிலை
மதன னரமனை கண்டுவாழ்வு பெறநான்
இவ்விதத் தொன்றுக யீச னென்னை
அவனியில் சிருட்டிசெய் யாததென்ன
ஆனாலும் நின்மீதி லாசை யானேன்
மருவ நின்கிருபை பார்மதன வரசே.

### தலைவி வருணனை

703. கூந்தலோ சூலுக் கொண்ட லாமதிநுத
வருளதமோ சிலையம்பை பொருது விழிகள்
கண்ணுடியோ கவுள்காது வள்பவளக் கொடியோ
கந்தமறி நாசி குமுழ்விந்தை மலராம்
வனசோ முகமாம் பல்வாய் தந்த மாதளங்
கனிவிரை கவித்தள கமுகு மிடறு
கொங்கை யோமகா மேரு குலவு
தோள்சிகரி முன்னங்கை காந்தள்சிற்
மிடையந் தரமுமாம் உதரமா லிலை
உந்திஉதக சுழியா மரவுபட வல்குல்
துடையரம்பை யன்னநடமே யுனதழகு நாடியே
நான்கண் டாசை கொண்ட னடிகாம வரசே.

### மையல்வராம ரெட்டியைப் பாடியது

### விருத்தம்

704. காரைமுனிந்திடு கரத்தான்
கம்மவார் குலத்திலகன் கச்சியூரான்
பாரை முனமுண் டுமிழ்ந்தமால்
நிகரெல்லை பூபாலன் வெற்றி
மேரினிலும் வலிய புயன்ரா
மயவேள் தனையடுத்தால் விஞ்ஞையோர்கள்
சீரமருங் கலைநிதியா பரண முதல்
தருவ னதுசெயங்கண் டீரே.

## முத்த பூபதியைப் புகழ்ந்து பாடியது

### கழிநெடில்

705. மதிநதி யரவு மணிசடா தரனே
மான்மழு சூலகூற் கரனே
மலைமக ளண்ணு முலையிடப் பாகம்
மகிழ்ந்தநிஷ் களபரா பரனே
விதிதனக் கறியா வருணையம் பதியில்
மேவு மற்புத வடிவான
விமலனேய யன்மால் தேடிய சிவனே
விளம்பும் விண்ணப்பமொன் றதுகேள்
நிதிவளர் குபரேன் மரபுதித் தருளும்
நீதிசே ரண்டநா யகராம்
நிருமலன் பதத்தைப் பணிந்த குபேந்திரன்
நிலைத்திடு தவத்தினு லுதித்த
சதிரூபா யன்செந் தமிழ்நா டனுக்குதவு
தயாளன் நம்முத்த பூபதிதன்
சந்ததி தழைத்து வயதுநூ றிருக்கத்
தயவுடன் மகிழ்ந்துகாத் தருளே.

## முத்துமாச்சய வீரனைப் புகழ்ந்து பாடியது

### விருத்தம்

706. மைவேலைப் படிபுகழும் பண்டை குல வரதேந்திரன்
மைந்தன் வெற்றி
வைவேலைக் கொண்டு முத்து மாச்சயவேள்கண்சிவந்தான்
மடவீர் காணு
முய்வேலைக் கதிநாளிவ் வளவோ வென்றறன் னேர்க
ளுரைத்தே தங்கள்
செய்வேலைக் கடன்கொண்டால் இவன்வீர மதிகமே
செப்ப லாமே.

## [இதுவுமது]

### கழிநெடில்

707. வாகுற்ற வெண்கவன வாம்பரியின் மீதேறி
வருபோது ரணபேரிகை
மழையிடி முழக்கென டாங்குடாங் கென்னவே
மருவல ரர் மனையை விட்டுப்

போகத் தடங்கள்பார்த் தெங்கணு மிலாமலே
புறக்கடித் துனதாண்மையின்
புகழ தைக்கொண் டாடி போற்றி
யெமையாள் வாய்கன
யோகபிர பலமிக்க பண்டகுல ராசனே
யொப்பற்ற சீர்குருந்தை
யூரதிபனே வந்த பூபனருள் தனயனே
யுனதடிமை யாவோமென
மோகத் துடன் சொல்ல அவரைவிட் டெதிர்பட்ட
முடிமன்னரைத் துணித்தாய்
மொய்த்தார் குழன்மாதர் நித்தமாற் கொளுமார
முத்துமாச் சயதீரனே.

[இதுவுமது]

708. கத்திகட் டாரிவில் லம்புகைக் கொண்டுநீ
கவனவாம் பரியிவர்ந்து
கருதலர்கள் முனைசமரில் நீவந் தெதிர்த்திடிற்
கண்டரா சாளிகொக்கி
னத்திரள் கள்ளக் கொத்திரு ரைகொண்டதுபோல
நால்வகைச் சேனைகளையும்
நடுநடுக் கங்களுறத் துடைகள் விடவிடென
வந்தசவு ரியத்தினலே
பத்திர மிழந்துயி ரிழக்கநின் கையுற்ற
படைகொண்டு விருதுகொண்ட
பான்மையுரைக்க வெளிதோ பண்டைகுலமேவு
முடியரசர் மகிழ்வீரனே
பாக்கிய வரதேந்திரன் முதலாய்
முத்தமிடனக் குந்நிதியருள் சோறன்ன தாருவே
மொய்த்தார் குழல்மார் நித்தமாதர் கொளுமார
முத்துமாச் சயதீரனே.

மெய்ப்பாத குருசாமி, நளச்சக்கரவர்த்திக்கு எழுதி விடுத்தது.

சீட்டுக்கவி

709. லட்சணனு கற்கக் கடப்பாடி யழவிகட
துற்சனக் கவிஞர் மின்னும்
லட்சகவி கோடிகவி கோடான கோடிகவி
நிட்சேப்பு பொக்கி ஷச்சாலே

அட்சய சரசுவதி யிருக்கும் நவரத்தினக்
கசிதக் கனககிம் மாசனம்
அட்டாலே வாயம்வரை மெய்ப்பாத குருசாமி
யவர்வர விடுக்கு திருமுகம்
நட்சத்திரப் பருவதன் கொடியாதி பதிநங்
கிருஷ்ணமுத்து வீர
நர ஞைப்பதொண்ட மான்ரகு நாதனுக் கிளைய
நளச்சக்கர வர்த்தி காண்க
தட்சண மயோத்தியா புரிக்கு நிதமும்முட
சமஸ்தானம் நாடி வந்தோம்
தாமச மில்லாம லரைநாழி கையில்விடுதி யுத்
தாரம் வரவிட வேணுமே.

## மெய்ப்பாத குருராய கண்டீரனர் தெய்வராய சிதம்பரனருக்கு எழுதி விடுத்தது

### சீட்டுக்கவி

710. மன்னவர்கள் சபையசை நயச்சித்திர விஸ்தாரம்
மதுரகவி பொழியு மேகம்
வரிசைலட் சணமிலாக் கவிசொலும் துஷ்டாள்
மண்டை மேல்வச் ராயுதம்
கன்னடம் தெலுங்குதமிழும் நாகரம் சமஸ்கிருதம்
கவிக்கொடி கோலாகலக்
கவிராசன் புகழ்மதுரை மெய்ப்பா தகுரு ராய
கண்டீர மெழுது மோலே
தென்னவன் தமிழ் நாடு சோழவள நாடுமாஞ்
சோலைநாடு மறிய ......கு கழ.........
வன்னிய புகழ்மன்னிய வருள்தெய்வ ராய
சிதம்பர மகிழ்ந்து காண்க
முன்னமொரு குரங்கெட்டுக் குமானமுஞ் செய்த
தன்னுடைய பிரதிஷ்டை வினவி
மோகனகக் குறசி சொல்கிறோம் நூறுபொன்
முடிந்து வரவிட வேணுமே.

### அவலம்

### விருத்தம்

711. உணங்கு ஒருகால் முடமாகி
ஒருக்கண் ணறிச்சொ ளியிழுந்து

வணங்கு வாலு மறுப்புண்டு
வருந்திப் பசியால் மிகத்தேம்பி
அணங்கின் முடுவல் பூப்பெய்தி
அலேவா யோடு கழுத்தேந்தி
சணங்கின் முடுவன் நீயென்று
லேவர்க் கரமன் துடர்செய்யான்.

முத்துக் குமாரசாமி முதலியார் அவர்கள் திருமலேராயனைப் புகழ்ந்து பாடியது

712. நேயராலே மருதின ராயசீ
காயனே மனியாலிக நேயமா
மாயனே கலியாணி மனேயகா
சீயரான திருமலே ராயனே.

வறுமை மதுரையில் வந்தபொழுது, சங்கத்தார் போயிருந்தபோது, வறுமை தீர்த்தவனைப் பாடியது

அகவல்.

713. காவல் ஞாயிறு கடுங்கதிர் பரப்பி
வேலேயுங் குளமும் வெடிபடச் சுவறித்
தந்தைதாய் மக்கள் முகம்பா ராமல்
வெந்த சாதம் வெவ்வே றருந்திக்
குணமொரு நான்குங் கொடுத்துற வாடுங்
கணவனே மகளிர் கண்பா ராமல்
விழித்தவிழி யெல்லாம் வேற்றுவிழி யாகி
மொழிந்தமொழி யெல்லாம் முனிமொழி யாகி
உறைமறைந் தொழிந்த ஊழிக்கா லத்தில்
அறமொழி யன்றி யறுமொழி பெருகி
இந்த ஞாலத் திடுங்கண் டீரன்
வந்து தோன்றின மாகிதிக் கிழவன்
ஆலஞ் சொரிய யிந்தனே..............
பொ......சொன் னெடுமால் போல்வான்
தாயில் லவர்க்குத் தாயே யாகியும்
தந்தையில் லவர்க்குத் தந்தையே யாகியும்
தன்குறை சொல்லான் பிறர்கேட் டறிவேயான்
மறந்தும் பொய்யான் வாய்மையுங் குன்றுன்
வருந்த வேண்டா மென்றன் வழுதி
யிருந்தன னவன்பா லிடர்கெடுத் தனனே.

ஈழத்துஒடக்காரன் பேரில் பாடியது

விருத்தம்

714. கயற்காவி நாறுங் குழம்பிற் பிரசண்டா
காரோ குடைச்செங்கை ஆரோ தன்மைந்தா
இயற்கற நின்மார்பிற் செழும்புன்னை யந்தாரி
போதுநீ நல்கலென் பேதை மார்பிற்
செயக்காம நேயம் புதையாது சற்றுந்
தாமஞ்சுடர் சந்தனம் பூசினாலும்
தியக்காது வேயுஞ் செவிக்கே பொறுக்குந்
திக்கொண்டுமிழாது திங்கட் கொழுந்தே.

சதுரங்கமனையில் வகைக்கணக்குக்கு உரைசெய்தது.

715. திருமருவு சதிரங்க மனையிலெழு திடுமலகு
செங்கதிரின் மனையி லொன்று
திருமறையி லெழுருத் திரமெட்டு மதமூன்று
சித்த சன்வாளி யாறு
கருதரிய மனுவைந்து பாகவதர் நாலுமுக்
காலத் திலிரண் டுமெழுதிக்
கணிதமத வேகுறித் ததுபாதி செய்ததற்
கழல்கொட் டொவ்வொன் றதாகி
வகையறிய வரையனும் நவரசம் ஷோடிசம் வர்ரி
வசுவளர் திதி யும்மால் பிறப்பும்
வஸ்துவாகி ஒவ்வொன்றினுஞ் சொன்ன படியே
வகைகணக் குரைசெய்தனர்
அருள்பரவு வாயலூர்பா தலோசனர் கோத்திர
ராயிரங் காத்த பரனை
மைங்கரன ருள்பணிந் தானையு மஸ்தகம்
தாக்குசீர் கருணார் தாமே.

கணக்கு

கட்டளைக்கலித்துறை

716. தண்டு திருத்திய கால்கொம்பு நீக்கித் தறித்தெடுத்துத்
துண்ட மெடுத்தப்படி யேயெழுதிச் சொல்லிலக்கம்
பண்டு படித்த கவிக்கீ ழெழுதி பகுந்துலக்கங்
கண்ட துலகா முதலெழுத்தாய்க் கருதுவதே.

### காலம்

717. அடுங்காலங் கலம்வேண்டும்
ஆட்டுங்கால் கலம்வேண்டாம்
சுடுங்காலங் கலம்வேண்டும்
சூட்டுங்கால் குலம்வேண்டாம்
நெடுங்காலஞ் சென்றாலும்
நெல்லுகுத்தி பணம்ரெட்டி
அடங்காத நாவுடையார்
கொழுவைக் கொடுத்துவிடும்.

### தலைவிகூற்று

718. ஆரால் வருமென் றலகுவைத்துப் பார்த்தெனைப்போல்
நீராவி காக்கும் நெடுங்கால் வெண்குருகே
சேராதிறை யளக்குந் தேவராகு நாதவெங்கோன்
பேராசை பொல்லியபின் பெண்பழியோ காதெனுமே.

### திருமுருகனிடம் விண்ணப்பித்தது

### விருத்தம்

719. ஊனேறி மதமேறிக் காமமேறி
வு......நமேறிக் கடந்ததேறி வுணர்வே றுமற்
சாணேறி முழஞ்சறுக்கிக் கவலை யேறித்
தவக்கேறித் துவக்கேற தாமோ வையா
பூனேற மலரேறப் புளக மேறப்
புகையேற வளர்ந்ததேறப் பொருப்பர்ங் கொங்கை
சேனேறச் சுழியேறி ரோம மேறுந்
திருவயற்றுள் திருமுருகா தேவ ரேறே.

### புல்லர்வாழ்வு

### விருத்தம்

720. குரங்குமாய்ப் பேயேறித் தேளுங் கொட்டிக்
குடியாத மதுகுடித்து நண்டுகட்டி
யிரங்கிய காஞ்சூறி யுத்துயிஞ்சு நின்று
கொள்ளிமெரித் தெழுந்தாற் போலத்
தருங்கரு வளையிலாத புல்லர் வாழ்வு
தண்டேறிச் சம்பத் தேறிக்
கருங்கண்மதக் களிரேறிக் கருவி லேறிக்
காடேறிப் போவதல்ல லீடே றுரே.

## அற்பர் செயல்

### விருத்தம்

721. தண்டிவந்து வழக்குரைப்பர் மீண்டே செய்வர்
தாமறியா வார்த்தை சொல்வர் நயவுமில்லை
கொண்டிருந்த நல்லுறவைக் கொடுமை சொல்வார்
கூறினவர் சொற்கேளார் குணமு மில்லை
பண்டிருந்த வுபதேசம் பற்றிப் பாரார்
பலிக்குகந்து வந்தவடர் பழுதே சொல்வர்
விண்டுரைப்பர் விடம்போல வெப்பஞ் செய்வார்
விலங்கென்னுங் குலத்தினரை விரும்பிப் பாரீர்.

[இதுவுமது]

722. அன்ன மென்றுஞ் சொலக்கேட்டா லணுகிநில்லா
ரப்பாலே அசைந்தசைந்து அகலப் போவார்
கன்னவள வுபதேசங் கனவி......களார்
காசினியிற் பிறந்திறந்து கவலை தீரார்
சொன்ன தொரு தவநெறிகள் செவியிற் கேளார்
துரும்பனெனு முடலெடுத்துத் தூர்த்த னுவார்
பன்னுதமிழ்ப் பெரியோர்கள் பக்கஞ் சாரார்
பறவையெனுங் குலத்தில் வந்தோர் பரிசுபாரீர்

[இதுவுமது]

723. சந்துசென்று சண்டையிட்டு சாட்சி சொல்லித்
தாணுவா யிருந்திடத்தே சதிரே பேசிச்
சிந்தைதெளிந் தேயிருந்த பெரியோர் தாமே
............ண்ணச் சினங்கள் செய்வார்
வந்திருந்த நல்லுறவைப் பேசிக் காட்டி
வன்மை யுள்ள பெரியோரை வலதழித்து
நிந்தையுடன் குமந்தங்கள் நித்தம் பேசும்
நீர்வாழுஞ் சந்துவென்று நிகழ்த்து வீரே.

[இதுவுமது]

724. பத்தியிலா யிடந்தனிலே பலிக்குச் சென்று
பாராத யிழிவுதனைப் பறையக் கொண்டு
முத்தியிலா யிடப்பிறந்து முன்னையுங் கெட்டு
முன்தலைக்குக் குழிப்புவைத்து மோதிக் கொண்டு

குத்திகொண்டே யெங்கெங்குங் குருதி பாயக்
கூசாமல் மழுங்கினராய்க் கூறக் கேட்டு
உத்தரவில் மானபங்க முரைக்கக் கேட்டு
மரவையெனுங் குலத்தில் வந்தோ ருகந்துபாரீர்.

## விருத்தம்

### இறைபாஷை

725. பெருத்தநடு விரல்முன் பத்து மூன்று
பிள்ளடியும் வாளி லிரண்டு நொடியிலொன்று
வருத்தநிகத் தெறி யிலெட்டு முளகையொன்று
வாளரவு......மூன்றுமான சோதிக்
கருத்தானி லனுதினமு முந்த நாமங்
கருதுமடி யார்களுடன் வினைகள் தீரத்
திருத்தமுடன் மயிலையில் வாழ்பூம்பா வீசர்
செல்வன் பேரஞ்ச லெனச் செப்ப லாமே.

### அலங்காரபாஷை

[இதுவுமது]

726. பாரானு மன்னவரில் மூன்று பேரும்
பதிமூன்று வீதிகளில் நகரி லிரண்டு
வீரான சேவுகரி லொருத்தன் தானும்
மிகுந்தகடைக் கூட்டரிலே யெட்டுப் பேரும்
பேரான மந்திரிக்கு மார னென்றும்
பெருத்ததமி லோர்கள்பதி மூன்று பேரும்
சீரான மயிலையில்வாழ் பூம்பா வீசர்
செல்வன் பேரஞ்சலெனச் செப்பலாமே.

[இதுவுமது]

### சண்டாளர்

727. குருவினுட வுபதேச மில்லா தானும்
கோழிபண்ணி ஞெய்வயறு வளர்ப்ப தாரு
மருவியவர் திருக்கோயிற் செல்ல வென்றால்
மாபாவி யென்று தெய்வ மகலப் போகும்
பெருகியவூ ரவன்பறவை நாறல் நீர்வாழ்
பேசரிய தாபரங்கள் பலவு மாகி
வுருவுடைய மானிடராய்ச் சென்மிக்கும் போது
வுலகுதனில் சண்டாளனவன் தானே.

### கண்டு கொள்ள முடியாமைக்குக் காரணம்
### கட்டளைக்கலித்துறை

728. வாலியு மரங்க ளேழு மணிமுடியாக் கன்தேவி
தாலியும் பொடிய தாகத் துணிசிலை வளைத்தகையால்
பீலியுங் கண்ணுந் தும்பும் பிணையணி கயறு கொண்டு.
காலியின் பின்னே சென்றி ரெங்கண்களே கண்டிடாதே.

### திங்களின்கொடுமை

729. அங்கமதில் நஞ்சிருத்தி ஞனங்க மல்லாத தனிர்சடைமே
றங்குநினை வைத்திட்ட துநின்கொடுமை கருதித்
[தானன்றோ
பொங்குமமுத கலையெனவே நின்னைப் புகலுறு
[வெண்டிங்கா
ளிங்கு மனிதர் காராட்டை வெள்ளாடென்பதொக்குமால்.

### தஞ்சைவெள்ளைப் பிள்ளையைப் பாடியது
### [இதுவுமது]

730. தள்ளைக்கு மன்னமிடாதவரைகா மதேனு வெனச் சாற்றி
[வீணே
கொள்ளைச்செந் தமிழுக்குத் தலபிடிபோ மோபுலவீர்
[கூறக்கேளீர்
வள்ளைத்தன் குழைக்கோளி ரும்பெண்ணை யணை
[யொருவண் கத்தஞ்சை
வெள்ளைப்பிள் ளையைப்புகழ்ந் தார்கறுப் புப்
[பிள்ளையை மேவிடாரே.

### ஆவடுதுறை யீசரைப்பாடியது
### விருத்தம்

731. கொலப்பட்ட விடையேறிக் குறும்பூத்தே டுந்தெருவே
குனிப்ப மாத
ருலைப்பட்ட வலியல்லா லுயிற்பலியுங் கொள்வரோ
யொருவர் கெட்டே
னலைப்பட்ட தண்புனல்சூ ழாவடு துறையுறைவீ
ரல்லக் காணுந்
தலைப்பட்ட மதியுடைய ரிப்படியுஞ் செய்வரோ
தம்பி ரானே.

### அச்சுறுத்தும் சிவன்

[இதுவுமது]

732. கடஞ்சுழிக்கும் கரிமருப்பு முத்தும் பொன்னும்
காரகிலும் சந்தனமுங் கலந்து பொன்னி
யிடஞ்சுழிக்கும் வலஞ்சுழிக் குளிருப் பீரைய
மிடுவதுமக் கெப்படியோ யிரண்டு பாலும்
விடஞ்சுழிக்கு மரவத்தை யணிவீர் முன்னே
விழிசுழிக்கு பூதத்தை விடுவீர் காக
முடன்சுழிக்குந் தலையோட்டி லிரப்பீர் மாதர்
உயிர்சுழிக்கும் படிமறுகி லுலாவு வீரே.

### தலைவிகூற்று

[இதுவுமது]

733. எருத்திலே பவனிவரு மிருஞ்சிபுரத் தீசரையு
மே...—மயுஞ் சந்து
பொருத்துவா ரொருவரில்லைத் தாயரென்று லாச்சரியம்
பொறுப்பே ஏழைக்
கருத்திலே கிடத்தினுமெய் கொப்பளிக்கும் பன்னீருங்
கொதிக்குஞ் சாந்து
கருத்திலே தகுதியெனக் கொழுந்துவிட்டு நின்றெரியுங்
காமத் தீயே.

### தலைவன்கூற்று

[இதுவுமது]

734. வேணிப் பவளம் விரித்தாடும்
விமலர் புலிசை திருவருணை
பூணிற் சிறந்த வண்முலையும்
புருவச் சிலையு மறந்தாலு
மாணிக் கனக மழுத்தியபூ
வாடை நெகிழ்க்கு வேளை தனில்
நாணிக் கவிழ்ந்து நகைத்த நகை
நானோ மறக்க வல்லேனே.

### நெல்வேலியில் நிகழ்ந்த கொடுமை

735. விரிந்தசெஞ் சடையர் நெல்வேலி நாட்டிலே
பிரிந்தா ரெப்படிப் பிழைப்பு ரையகோ

முரிந்ததெண் டிரையனல் முழுதும் வாரியே
சொரிந்துவெண் மதியெனத் தோற்றுங் கூற்றுமே.

[இதுவுமது]

736. சுருக்கிய கமலமுந் தொடுத்த தாமமும்
நெருக்கிய சடையினர் நெல்லை மாதரீர்
முருக்கி வந்தெழும் படிமுடி தியையோ
திருக்கிளர் வானில் வெண்டிங்க ளென்பதே.

தலைவிகூற்று

விருத்தம்

737. சிலைச்சிக்கு மதனெரிய விழிதிறந்த திருப்பனந்தாட்
சிவனே மாய
வலைச்சிக்கு விடநினையென் றும்மையான் வசப்படுத்த
மாட்டே னந்தோ
குலைச்சிக் கேனமின்னங் காணாத சடைமௌலி
குலைந்து போன
கலைச்சிக்கு வளைந்ததுவுங் கலையனுக்கு நிமிர்ந்துவுங்
கண்டுந் தானே.

சோனாட்டில் நிகழ்ந்த புதுமை

விருத்தம்

738. சாதிமயிர் சாயலென்ன நடைவரிக்கோ கிலமென்னுஞ்
சொற்றையன் மீர்காணிதி
நதிக்கா விரிசூழ் கோனாட்டி லொரு புதுமை
நிகழ்த்தக் கேளீர்
ராதிமலைக் கொடியிடமாய் வந்தவர்தா மின்கலைகொண்
டகன்று ரந்தச்
சோதிமறை காடனிட மாகவந்து மேகைவளை
தோற்றிட் டாளே.

சிவபெருமான்

[இதுவுமது]

739. காலிற் பொலிந்த நகத்தாலுங்
கையிற்கணங் கூர்நகத் தாலுஞ்
சிலத்தரங் கனுரங் கொண்டீர்
திசைநான் முகன்றன் சிரங்கொண்டீர்

மேலைப் புரத்தை நகைத்தெரிந்தீர்
வில்வேல் புரத்தை விழித்தெரிந்தீர்
சூலப் படையேன் மழுப்படையேன்
சுமந்தீ ரருணைய மர்ந்தீரே.

### பொய்ம்மை வாழ்வு

#### விருத்தம்

740, கந்தமல ரம்பென்று மளிநா ணென்றுங்
கரும்புகொடு மாவென்றுங் காம னெய்ய
வந்தவகை யிதுவென்றும் பொருதா னென்று
மந்தமா ருதநிலவு வருத்தித் தென்று
இந்தவகை கண்டபொய்யுங் காணாப் பொய்யு
மிரண்டுபொய்யு முரைத்துரைத் துள்ளிடிந்து
யந்தபரம் பரம்பொய்க் கேயழிவார் தஞ்சை [கெட்டே
யான்அந்த வல்லிபதத் தன்பி லாரே.

### மேகவண்ணனிடம் முறையீடு

#### [இதுவுமது]

741. வளர்க்கும் புகழ்சேர் குடந்தையிற் கண்வளரு
நினைக்கண் டஞ்சாதே
கிளர்க்கும் பாடிரமெலெ ழுதவென்றூற் கேண்மை
யெனக்குக் கிடையாதோ
துயற்கு முயற்பின் னெட்டாவிற் சுடிகை
மணியைஞ் ஞாற்றிட்டி
விளக்குப் பெரிய விருளெறிக்கு மேக
வண்ண முடையானே.

### பிறப்புவேண்டும்

#### [இதுவுமது]

742. பொன்னிநதிப் புனலாடப் பொருவோ மாகிற்
பொன்மதி லேழுங் கடந்துட் புகுவோ மாகில்
மன்னுமணிப் பட்டகஞ்சூழ்ந் திடுவோ மாகில்
மரகதப்பூ மேனியிற்கண் வைப்போ மாகில்
பன்னரிய திருமணற்றா ணருகே சென்று
பங்கயச்சே வடியினையைப் பணிவோ மாகி
லின்னமுமியா னிப்பிறப்பே வேண்டு கின்றே
னீசனே யணியரங்கத் தெம்பி ரானே.

### தலைவியின்நிலை

[இதுவுமது]

743. செழுந்திருக்கை மலர்குவிக்குந் தலைமேல் வைக்குந்
தென்னரங்க மெத்திசைநான் செல்வே னென்று
மழுந்துயரப் படுமெலியு மாவி சோரு
மரங்கரே யான்செய்வ தறியேன் என்னும்
விழுந்தரற்றும் நினைத்தேங்கும் விழித்துப் பார்க்கும்
வேர்விழுந்த கங்குலின்னும் விடியா தென்னு
மெழுந்திருக்குந் திருவரங்கம் பெரிய கோயி
லரத்து மென்பதைக் கென்செய் வேனே.

### மயிலேறும்பெருமாள்

அருந்தமிழ்த்தாழிசை

744. கள்ளக் கயல்விழி யாரனுராகக் கலவியிலே
கவலைப்படு நெஞ்சங் கவலைப்படும் படிகாணேன்
எள்ளத்தனை போதுந்திரு நாமந்தனை நினையேன்
இயமன்படை வந்தாலினி யியலும்படி யருள்வாய்
தெள்ளத்திரை குடைகா விடைமுத்தந் திரைத்ததுஞ்
சேலினம் விளையாடிய செந்திப் பதியரசே [செஞ்
வள்ளப்படி படருங்கொழு கொம்பேமுழு முதலே
வானோர்சிறை விடவேமயி லேறும்பெரு மாளே.

### தியாகராசரிடம் விண்ணப்பம்

745. அய்யமாபுரங் கள்வென்ற கொக்குமிக்க காலனு
ரழியவென்ற கொக்குமற் றனைத்துமொக் குமாயினும்
வெய்யகாம தகனரென்னும் விருதுசின்ன வோசையால்
வெட்கினே னுமக்குமதை வந்துசொல்ல வொக்குமோ
வெய்யவர்சுரங் கள்பட்டு வெருவியோடி வாணிலா
தேழைமேனி புக்கொளித்து மின்னமாரன் வருமென்ச்
செய்யமேனி பாதியும் புறப்படாத மேலைவாழ்
தியாகரா சரேசிறந்த தென்றல்வா சலழகரே.

### தலைவன்வருணனை

746. பரிமளக் கமல சித்தி ரரத்தி—புய
பாரின் மீதுபுரந்தவன்
பாரின் மீனெடு புனைந்தகொண் டல்தரு
பாரிசாதன் விடுபடிகையான்

தெரியு முத்தமிழ்க் குடைபிர தாபனுயர்
செங்கையான் வடிசெங்கையான்
தீரவே கலிய னுணமு வண்டுலவு
தியானமா னதிருந்தவன்
அரிமகன் தமையன் வீமனும் நெடிய
மன்னனூர் சடைதன்னிலே
ஆனைமுட் டையிட விண்ணி லேமுதலை
யாடியோடி யதுவருகுதாங்
குருவி யம்மியை விழுங்கி யாடவொரு
கொக்குரெண்டு பனைகக்கவே
குன்ற டைத்ததுகுயி லேகடல்
குடித்துவிட்டதொரு கோழியே.

## சுப்பிரமணியர்பேரில்பாடியது

### கலித்துறை

747. ஒருத்தர் துணையும் நிசமல்லவே சென்மம் உள்ளமட்டும்
பெருத்த உலகினில் நீயே கதியென்று பேருமட்டும்
கருத்தில் துதிக்கு மடியார்கள் சந்தி கார்த்திடவே
பருத்த மயில்மிசை வருவாய் சிவமலை பண்டிதனே.

748. நிச்சய மாகவு ன் பாதார விந்தம் நினைப்பவற்கு
அச்சம் வரக்கா ரணமாவ தேதென்று அன்புடனே
உச்சித மான கடைச்சரக் கெடுத்து ஒருநொடியில்
பச்சை மயில்மிசை வருவாய் சிவமலை பண்டிதனே.

749. தாரணி தனிலுள்ள மூலிகை மருந்து தழைபறித்து
சூரணஞ் செய்து தேனுடன் கலந்து துரிதமுடன்
பூரண மாயடி யார்க்கு வந்த பிணிகளுக்குப்
பார்வதி யீன்றருள் மைந்தா சிவமலை பண்டிதனே.

750. வாதமும் பித்தமும் சிலேத்துமும் மூன்று வகைகளெல் [லாம்
ஆதி யதாகிலே யதில்கிறுத் தி அடி யார்வினையே
க்ாதம் பறக்க அனுக்கிரகம் புரிந்து காத்தருள்வாய்
பாதி மதியணிந் தார்மைந்தர் சிவமலை பண்டிதனே.

751. மண்டலந் தன்னில் வைத்தியர் சொன்ன மருந்தையெல் [லாம்
கண்டுபிடிக் கவகை யறியேன் கருத்தா லேஉந்தன்
அண்டையி லிருக்குந் திருநீற்று மருந்தை அள்ளியிடப்
பண்டார மாக வருவாய் சிவமலை பண்டிதனே.

752. விண்ணவர் சிறையே மீட்ட கெம்பீர விமலசுப்பிர
மண்ணிய னேஉந்தன் அடியார்க்கு வந்த வல்வினைக்கும்
வண்ண மயிலும் கதிர்காமவேலும் வாலிபமும்
பன்னிரு கரமும் வருவாய் சிவமலை பண்டிதனே.

753. மெய்கொண்ட தெய்வமும் பழனிப் பதியில் விளங்குகின்ற
பொய்கொண்ட கந்தாஅடி யார்க்கு வந்த பிணிகளுக்கு
கைகண்ட மருந்து திருநீற் றுருண்டை கரமதனில்
பைகொண்டு நித்தம் வருவாய் சிவமலை பண்டிதனே.

754. மாத்திரை லேகியந் தயிலமும் குளிகை வகைகளெல்லாம்
சேர்த்து அரைத்துஉருண்டைகள்செய்து தினமுமுன்னைத்
தோத்திர மாகவடி யார்கள் வல்வினை துலைந்திடவே
பாத்திரங் கொண்டு வருவாய் சிவமலை பண்டிதனே.

755. சக்கரை தேனும் பாலும் பழமுந் தனித்த நெய்யும்
முக்கிய மான தீர்த்தமும் காவடி மிகவெடுத்து
வக்கனை யாக உன் பைந்தமி ழோதும் உன் மைந்தனுக்குப்
பக்தனை வந்து காப்பாய் சிவமலை பண்டிதனே.

756. நித்தமுன் பாதம் சரணு கெதியென்று நினைப்பவர்க்கு
நத்தின பேரை நழுகவி டாமல் நன்மையதாய்க்
குத்தம் பொறுத்துச்சா யுச்சிய பதவி கொடுத்தருள்வாய்
பத்தும் பதியும் துதித்தேன் சிவமலை பண்டிதனே.

## வாரப்பத்து

757. வாதித்த சூரனை வடிவே லெடுத்து வளைந்து கொண்டு
சாதித்து வந்ததயா பரனே யெந்தன் சஞ்சலத்தைச்
சோதித்துப் பார்த்துத்துயர் தனைத் தீர்த்துநற்றே [கையுடன்
ஆதித்த வாரம் வருவாய் பழனி அறுமுகனே.

758. உங்கள் தகப்பன் கைக்கனி உலகே ழும்சுற்றி
கங்கள் சிவக்கவந் துநின்றார் அந்தக் கவடதுபோல்
எங்கள்மேல் குற்ற மிருந்தாலும் சற்றே யிரங்கிமனம்
திங்கள் கிழமையில் வருவாய் பழனியில் தேசிகனே.

759. கொவ்வா யிதழுடன் தெய்வானைப் பாகனே கோழியுமாய்
செவ்வா யிலகப்பட்ட மானது போலே திகைத்து
நித்தம்

அவ்வாயில் சிக்கி யலையப்ப டாதுஅடி யாற்கிரங்கி
செவ்வாய்க் கிழமையில் வருவாய் பழனியில் சேவகனே.

760. சதமென்று வேதம்முன் னோராத தோதிடத் தலைக்குட்டி
விதமெனக் கேட்டருள் வேலவ னேஒரு விண்ணப்பமே
பதமென்று பாடவும் கலித்துறை சொல்லவும் பயன்
[தவிர்த்துப்
புதனென்னும் வாரம் வருவாய் பழனியில் புண்ணியனே.

761. கருவா யெழுந்து கைகால் முளைத்துக் கருத்தறிவாய்
உருவாய்ப் பிறப்பித்த உத்தமனே ஒருவிண்ணப்பம்
[சொல்வேன்
திருவாய் மொழிந்து வந்துமுன் னிற்கவேணும்
[சேவலுடன்
குருவாரம் நாளில் வருவாய் பழனிக் குருபரனே.

762. துள்ளிநடக் கின்றமயில் மீதி லேறித் துதிப்பவரை
அள்ளிவி பூதி கொடுத்தறி வாரதனால் குறையோ
வள்ளிதெய் வானையும் வாழ்மயி லேறி வடிவுடனே
வெள்ளிக் கிழமையில் வருவாய் பழனியில் வேலவனே.

763. கனிவாயு மாவென்று கந்தன்சிவ னென்று கருத்தறிவாய்
அனியாய மாக விரோதஞ் செய்வாரத னால்குறையோ
பனியா தோவென்று கதிரோன் விலக்கிய பாவினைபோல்
சனிவாரம் நாளில் வருவாய் பழனியில் சண்முகனே.

764. ஆரமே பூண்ட ஐங்கர னேஅரன் மைந்தனுக்கு
நேராக நின்ற வீரந்தரனே நின் புவிகளெட்டும்
பேரான வள்ளிதெய் வானையும் நீரும் பிரபலமாய்
வாரங்கள் தோறும் வருவாய் பழனியில் வாழ்பவனே.

## சுப்பிரமணியர் பேரில் துயரப்பாட்டு

765. கொஞ்சமென் வயதுமிகக் குறித்தே நானும்
கூவினது சத்தமது கேளா தானேன்
நெஞ்சகமா மனதினிலே யிருக்க லானேன்
நீர்ச்சுழரிப் பூச்சியைப்போ லலைவ தானேன்
பஞ்சனைய முகம் வாடித் திரிய லானேன்
பாராமுகமா யிருப்பதுவும் ஞாயந் தானோ
வஞ்சனைகள் செய்யாமல் பழனி வேலே
மயிலேறி அடியேன்முன் வருகு வாயே.

766. ஓடுதண்ணீர் குறையுறது போலு மானேன்
ஓங்கிவளர் கொம்பில்லாச் செடிய தானேன்
சோடுதனைக் காணாத கலைய தானேன்
சுகதுன்ப மறியாத செல்வ னானேன்
நாடுநக ரில்லாத மன்ன னானேன்
நாயகரைக் காணாத பெண்மை யானேன்
வாடுகிறேன் மனஞ்சலித்துப் பழனி வேலே
மயிலேறி அடியேன்முன் வருகு வாயே.

767. பெருமையுடன் பிதாவிழந்த பேதை யானேன்
பேடுபிரிந் தலைந்தாப்போ லன்றி லானேன்
அருமைஅன் பில்லாத பால னானேன்
ஆதரவில் லாத ஊர்க்குடி யனானேன்
உருமையுடன் தருவதுபோ லூரு மானேன்
ஒருவர்துணை காணாத பாவி யானேன்
வறுமையிலே துணையொழியப் பழனி வேலே
மயிலேறி அடியேன்முன் வருகு வாயே.

768. சிங்காடி யில்லாத நரன்தா னானேன்
சேனைபடை யில்லாத மன்ன னானேன்
சங்காத்தி யில்லாத தனிமை யானேன்
தாமரையில் நீரதுபோல் தளும்பு கின்றேன்
இங்காரும் துணைக்கா ணேனுனை யல்லாமல்
எந்தன்கலி தீர்த்துமிக வென்னை யாள்வாய்
மங்காரும் காத்தருளும் பழனி வேலே
மயிலேறி அடியேன்முன் வருகு வாயே.

769. ஏதுவா நீயிருக்கப் பிள்ளைப் பக்கம்
இதம்பேசி முகந்திருத்த அறியே னன்தான்
போதும தனிப்போதும் வகையா வின்னம்
புலமேது தெரியாமல் புலம்பு கின்றேன்
காதுதான் கேளாது மந்த மாச்சோ
கமலமுகம் நோக்கியுந்தன் கடாட்சம் வைத்து
வாதுகால் சென்றதுபோல் பழனி வேலே
மயிலேறி அடியேன்முன் வருகு வாயே.

770. தனக்காரர் பக்கலிலே யிருந்து நீயும்
சந்தோஷ மாவதுவுந் தருமந் தானோ
உனக்கபைய மிதுசமைய மென்றே சொற்கள்
ஊன்செவியிற் கேளாத பெருமை ஏதோ

புனக்குறவர் அசுரர்குல மறுத்தாப் போலே
பொங்கமுடன் என்கலியை அப்பால் நீக்கி
மனக்கவலை தீர்த்தருளும் பழனி வேலே
மயிலேறி அடியேன்முன் வருகு வாயே.

771. காத்திலே சுழலுகின்ற பட்ட மானேன்
கதிரவனைக் காணாத தஞ்ச மானேன்
பாத்தவொரு விடங்களெல்லாம் பகைய தானேன்
பாருலகி லுன்னையல்லா கெதையுங் காணேன்
காத்தருள்வாய் கருத்திரங்கி யென்து பங்கில்
கந்தா உன்னடைக் கலங்காண் தப்பாதே
வாத்ததுணை நீயெனவே பழனி வேலே
மயிலேறி அடியேன்முன் வருகு வாயே.

772. மேகமது காணாத தோகை யானேன்
விணிலே காய்ந்தவொரு நிலவ தானேன்
ஆகமது சருகாக உலர்ந்து நானும்
அனுதினமும் உன்னைமிக வருத்து கின்றேன்
தாகமா எனதுபங்கில் நின்று நீயும்
தரவேணும் சந்தோஷம் தயவு ளானே
வாகனனே இதுசமையம் பழனி வேலே
மயிலேறி அடியேன்முன் வருகு வாயே.

773. அனல்பக்கம் சிக்கியதோர் மெழுக தானேன்
அகோரமெனுங் கானலிலே பூவ தானேன்
கனவுதனில் நான்கண்ட கதைய தானேன்
கமலமுகங் காணாத வண்ட தானேன்
இனம்பிரிந்த மான்போலே தவிக்கின் றேனே
இங்காரும் துணைகாணே னுனையல் லாமல்
மனமகிழ்ந்து சந்திப்பாய் பழனி வேலே
மயிலேறி அடியேன்முன் வருகு வாயே.

### பத்திரகாளி பேரில் விருத்தம்

774. கார்கொண்ட செஞ்சடை பின்னலு மிருசெவி
கனகநவ ஓலைமணியும்
கருணைவிழி யிருவிழி பார்வையும் செந்தூரக்
காப்பிட்ட நுதலினழகும்

ஏர்கொண்ட மணிமுத்து மாலையு மூக்குத்தி
 என்பவழ விதறண வொளிவு
யிருநான்கு செங்கையில் சூலாரி மார்கள்
 பாசமாயுதங் களெட்டு
வார்கொண்ட இருகொங்கை அணிமுத்து மாலையு
 வச்சிர பதக்கம் வடிவு
மண்டல மெல்லாம்பெற் றதிருவயறு முடையாடை
 வாய்த்ததொரு ஒட்டியாணம்
சீர்கொண்ட தண்டைச் சிலம்புநீள் நின்பாதம்
 சேர்வைகண் டுளமகிழ்ந்தேன்
சிங்கவாகினி யெங்கள் மேச்சேறி நிலைகொண்ட
 செயபத்திர காளி உமையே.

## முனியீசுவரன்

775. கோடானு கோடிதிரள் பூதாதி கணமெல்லாம்
 கொக்கரித் தாடிவரவே
கூரம்பு கட்டாரி யெரியீட்டி வல்லயம்
 குத்துமுயற் சூலமழுவாள்
நீடாளி சக்கரம் டால்கவரி கொண்டுதான்
 நிரைநிரை பிடித்துவரவே
நித்தில மணிக்குடை சுருட்டிய தீவட்டி
 பத்தியால் பிடித்துவரவே
தாடாண்மை யாகவே துந்துமிமு ழங்கவும்
 தகுந்த திமிதிமியென்னவே
சரசமோடு தெய்வகன்னி கள்நடன மாடவும்
 சதுரங்க சேனையுடனே
சேடாதி பணைக்கவிகை நீடவரு பவனியே
 செப்புதற் கெளிதாகுமோ
திரமுற்ற புளிமற்றின லூற்றவளர் ஞான
 சிவசத்தி முனியீசனே

776. வாதாடி வருகின்ற ஒடிபில்லி சூனியம்
 வைப்புட னேவல்......
மலையாள வித்தைமுத லெதிரேகுறு காட்டேறி
 மண்டிவரு சண்டிகுளறி

சூதாக வரும்பிசாசு முதலினவை யெல்லாம்
துரத்தி முனியாம்
துடியு றடிந்து மகமேரென வளர்ந்து
துங்கமிகு செங்கண்முனியாம்
வேதாக மன்னர்ஆ வேதமுனி நீதமுனி
விசைய உத்தண்டமுனியா
மெய்யற்கு மெய்யா விளங்குமுனி பூலோக
மெலாம்நிறைந்த முனியர்
தீதுகளில் லாமலடி யார்களிட மாய்நின்று
செயமதுகேழ்க் குமுனியா
முற்றபுவி யாமற்றிள லுற்றவளர் ஞான
சிவசக்தி முனியீசனே.

### பழனிஆண்டவர்பேரில் பாடியது

### விருத்தம்

777. அண்டரொரு முப்பத்து மூவரு சிறைமீள
அயிராணி திருமங் கலியம்
அழியாத வஸ்துவா தேவேந்திரன் வாழ்க
அனைவோரு முழுதும் வாழ்க
புண்டரிக வேதனு சரஸ்வதியு வாழ்கநேர்
பூமகளு மாது வாழ்க
பொங்கர வணிந்தவத் தேவும் வாழ்கவே
போதமுனி நீதான் வாழ்க.
மண்டல பதினெண் கலிய டங்கள்
பாடி யாடி மயிலேறி
விளையா டிவாவட் டமிட்டா டிவரு
வடுசைக் குமார தீரா
சண்டமா ருதகோர உத்தண்ட கெம்பிர
சண்முகனை நம்பினவர் மேல்
தக்கமுட னுடிவரு மிக்கயெதி ராடிவருஞ்
சத்துரு சங்கார வேலனே.

778. திருவணை செல்வனுஞ் சிவனும் பிரமாவுந்
தினந்தி னம்கொண் டாடவே
சிங்கமுக மாய்வந்த சூரபற் மாவைச்
செயங்கொண் டடக்கி யுடையக்

கருவலி படைவீடை விடுமென் வீடென்றுணுது
கைப்பிடி மகிழ்ச்சி பார்த்துக்
கார்கொண்ட பேர்கொண்ட மூதண்ட கூடநெடு
கனகவெளி முகடு குளிற
அரவணைப் பாகவே தொண் டற்கு
மாறுதலை யாகி நின்று
அலையாமல் கலையா மல்மலை யாமல்
அவரவர்கள் பதியில் வாழ்க
சரவணைப் பொய்கைதனில் வந்துவிளை யாடிவரு
சண்முகனை நம்பின வர்மேல்
தக்கமுட னுடிவரு மிக்கயெதி ராடிவரு
சத்துரு சங்கார வேலனே.

## நயினுசல வரதர் பேரில்

### வெண்பா

779. நயினு சலவரதா நம்பினே னுன்னை
ஏயிலா னபாட லிலங்க—வயிணவன்மேல்
நேராக வந்து நினைத்த வினைமுடிக்க
சீராளே நீகருணை செய்.

## போதகுரு சுவாமிமேல் பாடியது

### வெண்பா

780. பொன்னும் புகழுநிறை போதகுரு சாமிமேல்
மின்னும் திருமுகவி லாசத்தை—யென்னும்
பகரத்தி றிகட பருமத் தகமற்
புகரத்தி முகனே காப்பு.

781. கார்பூத மாதவனும் கஞ்சமலர் வேதியனுஞ்
சீர்பூத்த வாய்மையுடன் தேடவே—பூத்த
சங்கரனு மாதிபரா சக்தியும் வெள்ளி வெற்பி
லங்கமிரண் டொன்று யமைந்தருளி—யிங்கிதமாங்
தேவரிய லாற்றிருக் கலியாணங் துடங்கித்
தாவரிய பின்பங் தழைக்கு நாட—காவலையில்
வீரம யேந்திர புரமீது தவத்துரத்தால்
தீரமா வெ... தியலரக்கன்—போரடர்த்து
இந்திரனையுஞ் சிறைமடக்கி யெல்லாரையு மடக்கித்
தந்திரமே பேசுஞ்ச மர்க்கஞ்சி—அந்தரத்தோர்

வேதனை மாலை விரும்பி யதனாலே
வேதனைமா மிச்சமென் றருணவியீ—செல்லா

வேணிக் கடவுளிடம் விண்ணப்பஞ் செய்தருள
ஆணிக் கமலமுக மைந்துடனே—பாணித
தோமுகமோ டாறு யீராறு நயனத்தும்
தோமுளரி பொங்கியெங்கு மண்ட—சென்றே

யண்டருல கஞ்சக் கண்டன்றுல......கைகொடுப்ப
கண்டவன் வன்னிகையிற் கொடுத்தே—கொண்டேகி
கங்கா நதியிலிடக் கங்கைசுமந் திடைந்தே
யிங்கார் பொறுப்பா ரெனமருள—மங்கா

சரவணப் பொய்கைதனில் விடுப்பா யென்ன
விரவண்ணல் கூற விரைந்தே—பரவவ்
வழியா யளிப்ப மகவாருய்த் தோன்றி
மொழியர் யாக...கையார் மோந்து—அழயாத
ஆறுசிறு வருக்கு மாறுதிரு முலைப்பால்
ஆறுகட லமுதா யாங்கருள—மீறக்க

................................................

வங்காரு துரைசாமிமேல் பாடியது

விருத்தம்

782. திங்கள்முழு மாரிபொழி திருமேவு தென்மதுரை
செங்கோல் செலுத்திஅரசு
செய்திடு மனோன்மணி சிவகாமி காரணி
செகமெலாம் பெற்றெடுத்த
தேவியுமை யவளையும் வெள்ளி மன்றிலாடு
செகசோதி யான திவ்விய
தேசோ மயானந்த மோனந்த வானந்த
சிவசுந்தரேசர் தனையும்
பங்கய மலர்பதத் திருமாது பூமாது
பாகன்வை குந்தநாதன்
பகுவா யராவிலும் பொதுமாதர் மார்பிலும்
பரியவட வாலிலையிலும்
பருந்துயி லுணர்ந்த பரமாத் துமனையும்
பரவி அறிவாகப்பணிந்து
பதியான ரசிதைகர் ளுடகத்துரை யழகில்
பாக்கியசம் பன்னயோகா
துங்கசெய வில்விசைய குமார கிருஷ்ணேந்திர
துரைவிசுவ நாததுரையும்

துணைரெங்க கிஷ்ணனைபர முத்துவீ ரப்பமுகில்
துரைகள் மகிழ் வளர்க்குபேரா
துடியான கெடிமன்னர் அடிபணியும் வங்காரு
துரைராசரா சேந்திரனும்
துய்யமகு டாதிபதி திருமலை சவுரிசெய்
துரைராச துரையவர்களும்
மங்கள கலியாண குணமக மேருநிகர்
விசுவநாத துரையவர்களும்
மருகனுகிய விக்கிரக மார்கனே தீர்கனே
மருமன்னியா தினம்வணங்கு
மன்னவர்கள் கொண்டாடும் துரைசாமி லெட்சுமியை
மணமாலை சூடியே
வங்காரு துரைசாமி மால்மனைவி யொடுமைந்தர்
பதினுறும் பெற்று வாழியே.

## வினைகளின்தொல்லை
### எண்சீர்விருத்தம்

783. பேசாம லிருக்கையிலே ஊமை யென்பார்
பெரியவரோ டினிதுரைத்தால் பித்த னென்பார்
கூசாமல் வழக்குரைத்தால் கோள னென்பர்
கூட்டத்தில் பின்சென்ருல் கொச்சை யென்பார்
வேசியனு யிருக்கையிலே வெகுளி யென்பார்
விகாரவனு யிருக்கையிலே வினைய னென்பார்
ஆசார முடனிருக்கில் கிருவி யென்பார்
அவனிதனி லுரைக்குவகை யறிகிலேனே.

## பழனி ஆண்டவர்பேரில் பாடியது
### விருத்தம்

784. செந்தா மரைக்குயி லிருந்துவிளை யாடிவரு
தென்பழனி யாதிபதியை
திருமூர்த்தியாலுலக செயங்கொண்ட சூரனே
செயங்கொண்ட முருகேசனே
மந்திரகிரி மகாமேரு பருவதக் கார்நெடு
வரையைப் பிளந்தெறிந்து
வத்தாத தமிழ்வாணர் நற்கீரை மீட்ட
வுந்தார் வடவே லனே

கந்தா குகாயனே கார்த்திகே யனே நித்திய
கலியாண மணவாளனைக்
கண்ணீறுஞ்வீறு வராம லெந்தனைக்
கார்த்துநின் றருடுமெனை
சந்தோஷ வல்லிய தந்தையென தந்தையெனச்
சண்முகனை நம்பிவனர் மேல்
தக்கமுட ஞடிவரு மிக்கயெதி ராடிவரு
சத்துருசங் காரவேலனே

785. இமையபரு வதராச னீன்றகுமரி பார்வதி
பரமேஸ்பரி பரிபூரணி
இட்டக மியந்தரி அட்ட லட்சுமி விசைய
யெகா சனப்பிரசங்கி
உமையவள் மனோன்மணி உத்தமா பத்தினி
உலகெல்லாம் பெற்றகெவுரி
ஊமத்த ஆங்கார ஓங்கார ரீங்கார
உத்தண்ட பத்திரகாளி
அம்மையி லங்காபுரி யில்லரக் கனுட
பத்துமுடி செத்து விழவே
அம்புதொட்டஅரிசரிடகோ தறிதந்த முருகய்ய
லடியவர் நினைத்தவுடனே. [வென்றுசொல்
சமையசஞ் சீவியாய்க் குமரகுரு பரமுருகர்
சண்முகனை நம்பினவர் மேல்
தக்கமுட ஞடிவரு மிக்கயெதி ராடிவரு
சத்துருசங் காரவேலா.

786. திமிரமர கதநளின மயில்வா கனத்தில்வரு
தெய்வானை வள்ளியுடனே
சேவல்ப தாகையும் கூவல்சீ ராழமு
சிங்காரவேட் கையும்கண்டார்
பரம முனிவரரு கொண்டாடவே அதிகசிவப்
பாகியு ருவாயனந்த
சூரிய கந்தனே கந்தனே யென்றுதொவு
மரக்கர்கள் மாளவென்ற
சமர்முக விசையகுமர குருபர நமசிவாய
குருநாதவென் றவரைமேல்
நாலுநூ ருயிரத்தெண் ணுயிர ஞேயு
நாடாமல் நமனைவென்ற

சமர்முக விசையகுமர குருபர முருகா
சண்முகனைநம் பினவர்மேல்
தக்கமுட னுடிவரு மிக்கயெதி ராடிவரு
சத்துருசங் காரவேலா.

787. பத்துருவா கிலும் சரவண பவாவென்று
பகர்ந்திடும் தொண்டருக்குப்
பட்டாபி டேகம் அட்டாவு தான
பால்வருநற் சீர்வரும்மே
உத்திரகோத் திரனுடன் புத்திரபாக் கியம்வரும்
உயர்ந்தநற் கீர்த்திபெருகும்
ஒன்றுலட் சியமாகு வர்த்திக்குஞ் செல்வம்
ஒருக்காலும் குறைவராது
மித்துரு பரிபாலனன் முருகய்யன் மகிமையை
விளம்புதற் கெளிதாகுமோ
வேதாள பூதமென எதிராளி யஞ்சும்கன
வீரிடபயஞ் செலுத்தும்
சத்துரு சங் காரதிருப்புக ழலங்கார
சண்முகனைநம் பினவர்மேல்
தக்கமுட னுடிவரு மிக்கயெதி ராடிவரு
சத்துருசங் காரவேலா.

788. எண்முகத் திசைக்கதிபர் சின்னவா ழியக்காரர்
இன்பவான வர்சமுத்து
இந்துவும் பருதியும் சுத்திவரு கயிலை
யெம்பிரான்உன துசீடன்
வெண்முக சரோருக குயில்கூவ சங்கீத
வேதபஞ்சாங் கப்பார்ப்பான்
விட்டுணுவு சோலைமலை மெய்க்காவல் காரனே
வேலனே பெரியவன்காண்
கண்முகங் காதுமுதல் பேதித்தனோ யிற்குறிப்புங்
கலங்காமல் எனைக்கார்க்கவும்
கார்க்கும்பதிப் பழனியப் பனேயென் அப்பனே
கந்தனேசெந்தில் நகர்வாழ்
சண்முகம தாகிவரு சாமியென் சாமியை
சண்முகனைநம் பினவர்மேல்
தக்கமுட னுடிவரு மிக்கயெதி ராடிவருஞ்
சத்துருசங் காரவேலா.

789. முகலட்சு மிகரமு முழுதுசந் தோஷமும்
முத்தயனை வாழ்த்திதினமும்
முத்தமிழ் வாசகமும் புத்திரசந் தானமும்
முளரிமட வார்சடமும்
சுகசோப னங்களுங் கலியாண ரூபமுந்
துணையாக வ்ருலாபமும்
சொர்னதா னங்களும் அன்னதா னங்களும்
துலங்குநவமணி வாசலும்
செகதல விலாசமுந் தேவேந்திர போகமு
சிரஞ்சீவி யானவாழ்வும்
திருமருவி விளையாடி யெனதுவறு மைகளோட
செயங்கொண்ட குருநாதனே
தகநளின நடனமயி லேறிவிளை யாடிவரு
சண்முகனைநம் பினவர்மேல்
தக்கமுடனுடி வருமிக்கயெதி ராடிவரு
சத்துருசங் காரவேலா.

790. நந்திசிவ ஞானியர் தந்திமுரு கேசனே
நாதனே குருநாதனே
நடன மயிலேறி விளையாடி வருகுகா
லட்சுமிகர கந்தனே
பந்திவரு கந்தனே செந்திவடி வேலனே
பரங்கிரித் தம்பிரானே
பரப்பிரம வடித்தவர் சுரர்க்கினிய தேவனே
பழனியங் கிரிவாசனே
செந்தமிழ் வாசனே தேவியருள் மைந்தனே
தெய்வானை மணவாளனே
திருவள்ளி கணவனைச் செங்கண்மால் மருகனைச்
சேவல்பதா கையானைத்
தந்திமுக ன்தம்பியை யெந்தனுட சாமியைச்
சண்முகனைநம் பினவர்மேல்
தக்கமுட னுடிவரு மிக்கயெதி ராடிவருஞ்
சத்துருசங் காரவேலா.

791. கந்தமா தனகிரியும் ராமேசுபரச் சேர்வையும்
காசினி மகா தீர்த்தமும்

கரிய மால்கண்ட தனுஷ்கோடி தீர்த்தமும்
கண்டாலு மென்ன
சொந்தமான பழனியின் பதிகண்ட பேர்க்குநற்
சுகுர்தபல னுண்டுகண்டாய்
சுவாமியா வதுகந்த சுவாமியில் லாதொரு
சுவாமியிப் புவியிலுண்டோ
எந்தவா ரத்திலு மெந்த நேரத்திலும்
எந்தவிவ காரத்திலும்
எந்த ஆபத் திலும்எந் தனுட
யிடர்தீர்க் கவென...
சந்ததமு வந்துதவும் கந்தனனு பூதிவளர்
சண்முகனைநம் பினவர்மேல்
தக்கமுட னுடியொரு மிக்கயெதி ராடிவரு
சத்துருசங் காரவேலா.

முற்றும்

## திருக்கழுங்குன்றம் வேதபுரீசத்தியான மஞ்சரி

### காப்பு

792. உம்பன் முத்திரை செம்பொன் மலர்த்தாள்
நம்புதி நெஞ்சே வன்பதொழிந்தே
அகவிரு ளிரிய சிற்சுகமருள் புரிதரும்
தகரப் பரித்தணிக் குகனைப் பழிச்சுதும்
ஞானசம் பந்தனற் றுடுதி புரியின்
ஞானசம் பந்த மிறும்.

### எழுசீர்க்கழிநெடில் விருத்தம்

793. பண்ணாகிப் பண்ணுக்கோர்ப் பயனு மாகிப்
பரமாகிப் பரையாகிப் பணிவோருள்ளக்
கண்ணாகிக் கண்ணுக்கோர் மணியு மாகிக்
கரும்பாகிக் கரும்பிரதக் கட்டியாகி
யெண்ணாகி யெழுத்தாகி யாவு மாகி
யெழுந்ததிருக் கழுக்குன்றத் திறையேயுன்னை
யெண்ணாத வெண்ணமெலாங் கொண்டு காண
வின்புற்றே னிசைந்தருள வென்றுகொல்லோ.

794. நவைதீர்ந்த நெஞ்சகமே கோவி லாக
நாடியதேவே யென்னுணட னத்தோயே

சிவகாமி முக்கண்ணி கணவா வொற்றிச்
செழும்பொருளே தென்மயிலைச் சிவக்கொழுந்தே
சுவையார்ந்த நறுங்கனியே கழுக்குன் றத்தெந்
தூண்டாத மாணிக்கச் சுடர்விளக்கே
புவியிடத்து மானிடனாய்ப் பிறந்து முன்னைப்
புகழ்வேனோ புகன்றருளாய் புனிதவாழ்வே.

795. புழுநெளிந்த புரைக்குழி யார்மையல் வீதி
புகுந்தேனை கெட்டேனன் புகளலென்னே
யிழுதையனேன் பொருளாசை நொன்வே னுன்னை
யெப்போது மறந்தறியே னென்னையன்று
கழுகமலத்துச் சம்பந்தனு டானந்த கணக்கையறிந்
துனையணைந்தேன் களுக்குள் ளோயே
யழுக்குமனர் தவனெநீ யென்னை நினைந்திங்
ககற்றுவையே வருட்கழுகோ வமரரேறே.

796. கேளாத கேள்வியெல்லாங் கேட்டே நீயே
கேட்பித்தாய் கேட்பிதுங் கேடுளோனை
வாளேறுங் கண்ணார்தம் மயக்கில் வைத்தன்
மதிவசமோ விதிவசமோ மற்றுமுன்றன்
ருளாகு மருள்வசமோ யறிகிலே னித்தாழ்வுக்
கென்செய்கேன் றண்கழுக் குன்றோயே
யாளாக்கு மெலியேற் குள்ளுணர்வித் தன்றே
யாட்கொள்ளல் விண்ணப்ப மறிவித்தேனே.

797. கோனாகம் பூண்டானே மலையா ளின்பக்
கொழுநனே திருவருணைக் குவட்டினானே
நீனாகஞ் சிலைகொண்ட நிமலனே யுண்ணின்
நிலைதெரி விக்ககின்ற கோலே
வாணாளை வீணாக்கும் வறிய னேனை
வலித்தாள மனமிலையோ மணியேனைக்
காணாமற் கலக்குற்றேன் கழுங்குன் றத்தெங்
கற்பகமே வித்தகர்கள் கருதுதேவே.

798. அனல்கண்ட மெழுகுபோ லுருகி வாடி
யழுகின்றே னருளாமலம லாவென்னைப்
புனல்கண்ட பயிரதுபோல் நிற்ப நின்றன்
பொன்னருளைப் புரிதியோ புரிவையாகில்

வினதீர்ந் துனடிமலரை மறவே னின்புற்
றிருவினையுந் துறப்பே னீதுண்மை யந்தோ
கனலாடு மேனியனே கனக மன்றிற்
கதித்தாடுங் கழுக்குன்றக் கடவுளேறே.

799. அஞ்ஞானத் துரிசகற்றி யருளா லின்னே
யணையாம லணைகின்ற வனுபவத்தை
யிஞ்ஞான்றெற் கருள்புரியி லீதே போது
மெனையாளும் பெருமானே யெந்தாயெந்தாய்
மெய்ஞ்ஞான நிலையுணர்ந்த வாத வூரர்
வேண்டவிரு கழலளித்தோய் விமலயோக
விஞ்ஞான கலர்முதலா முயிர்க்கு ஞானம்
விளைவிக்குங் கழுக்குன்றம் வெற்புவாழ்வே.

800. பொன்னேயப் பொற்சுடரே புவன மியாவும்
போற்றவருள் பெரும்பற்றப் புலியூர்வாழ்வே
மன்னே மாமணியே தென்மதுரை மேவு
மணித்திரளே திருமருகல் வதியுங்கோவே
யென்னேநீ குருவாகி யிருந்தும் ஞான
மிற்றதென வெனக்குரையா திருக்கிருயே
தன்னேரிலாக் கழுக்குன் றமர்ந்தசுத்த
சைவநிலையே யெங்குந் தழைத்த தேவே.

801. எட்டாத கொம்பினிடத் திருக்குந் தேனை
யெட்டியெட்டிப் பார்க்கின்றே னிருகாலில்......
யொட்டாரஞ் செய்கின்று னென்று கண்டிங்
கோரகோரா மாட்கொள்ள லுரிமையென்று
முட்டாட் செங்கமலத்தா ளறிந்து நீதான்
முரண்கின்று யிதுமுறையோ முழுநிலையே
பட்டாங்கி னுட்பயனே கழுக்குன் றத்தாய்
பஞ்சடிவேற் கணிமகிழும் பழுதிலாயே.

802. வேதாந்தச் சிரமணியே சித்தாந் தத்தின்
விளக்கேமெய்ஞ் ஞானங்கள் விளக்குமோன
நாதாந்த மானபரம் பொருளே யென்னு
ணடம்புரியு நாயகமே ஞானமூர்த்தி
போதாந்த புண்ணியர்க ளேத்து கின்ற
புத்தமுதே கழுக்குன்றப் புனிதவாழ்வே
வாதாண்ட பலசமயம் புக்கி வாடி
மயக்குற் றேனென்செய்கேன் மதியிலேனே.

## திருவொற்றியூர்த் தியாகராஜத்தியானமஞ்சரி

### காப்பு

803.
ஆனை முகவனை
மோன மொடுதொழ
ஈன மகலமெய்ஞ்
ஞான மருளுமே.

804.
சரவண பவசிவ
குருபர னிருபத
மருவுய ரடிதொழ
விரியு முமலமே.

### எழுசீர்க்கழி நெடில் விருத்தம்

805. அத்தனே யமலா வருட்பெருங் கடலே
யாதியே யருமறை பரசு
முத்தனே முதல்வா முக்கணு வெனநின்
மொய்கழ லிறைஞ்சிடே னந்தோ
மத்தனேன் மடவா ரயிலென விழியான்
மயங்குன ளுதலி னியிங்
கெத்துணை யேனு மாண்டுகொண் டருளா
யிறைவனே யொற்றியூ ரரசே.

806. செவின்மே லமருஞ் சின்மயப் பெருக்கே
சித்தனே சிவபெரு மானே
மூவரு முணரா முழுமுதற் பொருளே
மோனஞா னியருளத் தவிசி
லேவதிந் தெழுந்த வெங்குரு மணியே
யெனைநின தடியார்தங் குழுவி
லாவது சேர்த்தற் பாலதே யொற்றி
யம்பதி மேய வாரமுதே.

807. அமுதமே யாதி பகவனே முக்க
ணப்பனே யொப்பிலா மணியே
குமுதவாயிலகு மம்பிகை மகிழுங்
கோலமே கொடியனே னினது
கமல பாதங்க ளுன்னுமோர் வரமே
காதலித் தருளு நாளுளதோ
சிமையமார் சிகரி சூழ்தரு மொற்றித்
தியாக ராயப்பெரு மானே.

808. மானன விழியார் மயலெனுந் தனையான்
மக்கினமா வதே யலதிங்
கூன சம்பந்த மொறுத்துனை யடையு
முபாதி பெறுவனோ சிறியேன்
ஞானசம் பந்தன் பனுவலைக் கேட்டு
நயந்து பொற்கிழி தரும்பேசா
மோனவாரி தியே முப்புர மெரித்த
முன்னவா வொற்றியூ ரானே.

809. ஊர ஞர்பொருட் டன்றருள் சுரந்தா
ரூருழி யொருமாதிடந் தூதாய்
நாரண னறியா மலர்க்கழல் சேர்ப்ப
நடந்தரு ளெந்தைபி ரானே
காமு கிறத்துக் கடாமிசைக் காலன்
கடையனேன் முன்வரி லொற்றி
யூர வென்றொரு காலமுன வருவா
யுலகெலாம் படைத்தழிப் பவனே.

810. பனசல தியிலாழ்ந் தன்பர்தம வையைப்
பணிந்துநெக் குருகினேன் வாளா
அவனியோ டுயர்பொன் மாதரன் றரற்று
மளவின்மூ வாசை வாய்ப் பட்டுச்
சிவசிவ நாயே னனியழிந் திடகின்
றிருவுளத் தேற்குமோ வறியேன்
தவரெலாம் பரசு மொற்றியூர் மேய
சங்கரா தற்பரம் பொருளே.

811. பொலன்கொள் வெண்ணீறு புனைந்ததிண் புயவென்
புந்தியின் விரிவுமங் கையர்தங்
கலசவெம் முலைமே லன்றிநின் கமலக்
கழற்பதத் திடமல வதன
மலகிலா ஞான னந்தசற் குருவே
யடியனேன் பொருட்டொரு மொழியின்
வுலகினீ யருளா திருப்பது மென்னே
மொற்றியிற் றிகழுமந் தணனே.

812. அந்தணு வொன்றுநீ யலையுன்னை யன்றி
யொன்றிலை யெனும்பெரி யோனே
சிந்தைதா னெதுவோ வறிந்திலேன் மகிழ்ந்து
சிறியனேற் குரைத்திடற் பாற்றே

கந்தனைப் பயந்த கற்பகத் தருவே
கதியருள் வடிவுடை நீல
சுந்தரி யொருபா லுறைதருஞ் சாம
கண்டனே யொற்றியெந் தேவே.

813. எந்தையே யாதி க்காரண மூல
விருள்கெட வனுபவ நிலையிங்
கெந்தனுக் கருளா திருப்பது மென்னே
யெங்குல தெய்வமே சுடர்வேற்
சுந்தரன் றன்னை யீன்றசிற் பரமே
சுத்தசத் துவத்தினன் முடிவே
நந்திவா கனனே நவிறரு மொற்றி
நம்பனே ஞானநா யகனே.

814. நாயடி யேமை யாண்டுகொண் டருளு
நாதனே ஞான சம்பந்தத்
தூயசற் குருவாஞ் சண்முகம் படைத்த
சுந்தர வடிவனே ஞான
ஞேயஞா துருவங் கடந்தபாற் கரனே
நீசனே னன்பரை மருவா
மாயை மாய்தரச் செயொற்றி யூர்வடிவி
மருணனின் மலரடிச் சரணே.

### திருவொற்றியூர்த் திரிபுர சுந்தரித்தியான மஞ்சரி

#### காப்பு

815. ஆரண மதுபுகல் காரண மெனுமொரு
வாரண வடிதொழப் பூரண முறுமே
கந்த கிரிவளர் கந்த னடிமலர்
சிந்தை யிடைதொழப் பந்த மகலுமே.

#### எழுசீர்க்கழி நெடில் விருத்தம்

816. ஆதியே யமரர் தொழுதிடற் கரிய
வமுதமே யாரணப் பொருளே
சோதியே சுடரே சுடர்மணி விளக்கே
சுத்தசை தன்ய மேசைவ
நீதியே யொற்றி யூருறை முக்க
ணின்மலன் பாலமர் நினது
பாததா மரையைப் பதிதனேன் பொருட்டுப்
புரிவுட னருள்புரிந் தருளே.

817. அருளுரு வாகி யன்பர்த முளத்தி
லமர்ந்தனிர்க் குனிக்கிருபா கரியே
மருளனேன் றனது மனவழுக் ககற்றி
மாசின்மெய்ஞ் ஞானநன் னிலேயிங்
கொருதமி யேனுக் கீந்திடி லுய்வே
னெற்றியூ ருறைசிவா னந்தப்
பாவையே நின்னைப் பாடிநின் றுடும்
பரிசெனக் கருளவேண் டுவனே.

திருச்செந்தூர்

எழுசீர்க்கழி நெடில் விருத்தம்

818. மின்கெழு சடிவ வள்ளலா ரருளு
மேதகு ஞானசா க்ரமே
பொன்மலி கதம்பம் புனைந்தசெம் புயத்தெம்
புனிதனே சிற்பர சுகமே
என்கணே வதிந்த வெம்பெரு மானின்
னிணையடி பரசுநா ளுளதேர்
பன்னிய ரிருவர் புடைவருஞ் செந்தூர்ப்
பரமனே யருமறைப் பொருளே.

819. மண்மிசை யமரர் நாளுநின் றரற்று
மைந்தனே மாசிலா ஞானக்
கண்மிசை யமருங் கடவுளர் திருவே
கலையெலா மருளுமற் புதமே
உண்மயக் கருத் வொதியனே னின்னை
யுன்னுநா ளெந்தநா ளுணரேன்
பண்மலி பாட லன்பர்சொல் செந்தூர்ப்
பரமனே யருமறைப் பொருளே.

820. மருத்துவ னொருவன் பிணிதனை யகற்றன்
மானில வழக்கஃ தாயின்
செருத்தெனைக் காயும் சிறப்பெனும் பிணியைத்
தீர்த்தனின் கடனலா தென்னே
திருத்தணிப் பொருப்பி லமர்ந்தருள் சுரக்குஞ்
சின்மய ஞானதே சிகனே
பரங்கிரி வாழு மமுதமே செந்தூர்ப்
பரமனே யருமறைப் பொருளே.

821\. எத்தகை நீர்வந் தடுப்பினு மதனை
யேற்குமுன் னீரதென் பாரா
லத்தகை நாயே னின்சர ணெய்தி
னகற்றனின் றிருவருட் கழகோ
முத்தியென் றன்பாய்த் திருப்புகழ் மொழிந்த
முனிவரற் கருளுமுத் தமனே
பத்தர்க ளுளும் வழுத்துறாஉஞ் செந்தூர்ப்
பரமனே யருமறைப் பொருளே.

822\. நிலத்தியல் பாய்நீர் திரிந்தஃ தாகு
நெடுநிலவரைப் பின்மே னீச
குலத்திலும் பொல்லாக் குலத்துழிப் பிறந்து
குடும்பகோட் டந்தனைத் தாங்கி
யலைத்தலைப் படுவே னின்னிரு பாத
மன்பொடு வழுத்துநா ளுளதோ
பலப்பல மறைக ளொலிகெழுஞ் செந்தூர்ப்
பரமனே யருமறைப் பொருளே.

823\. ஆடகக் கிரியை யடைந்ததோர் காக
மதனிறங் காட்டல்போ லடியே
னேடுவீழ் வதன்மு னின்றனை யடைந்தங்
கியானுநீ யாகுநா ளுளதோ
நீடிய மதில்சூ ழாவினன் குடியி
னிகழுமா னந்தசா கரமே
பாடலா முதலாந் தருக்கள்சூழ் செந்தூர்ப்
பரமனே யருமறைப் பொருளே.

824\. நிலைமொழி யீற்று மகரம்வன் கணக்கு
நேரின மாய்த்திரி தரல்போற்
புலையனேன் மன்னேன் வினைவ ழிச்செல்லும்
பொலிவினைத் தவிர்க்குநா ளுளதோ
கலையெலா முணர்ந்த குறுமுனிக் கன்று
கழலிணை நல்குமா ரமுதே
பலிசுதற் கொருநற் றுணைவருஞ் செந்தூர்ப்
பரமனே யருமறைப் பொருளே.

825\. அப்பினி லுப்பைக் கலந்திடி னப்பா
மாறுபோ லாயிடை மடவார்
செப்பன முலையாற் சுழன்றலை தருவேன்
சிவநெறி சேருநா ளுளதோ

திப்பிய வேதச் செம்பய னேநஞ்
செல்வமே சிவகுரு மணியே
பற்பரவ மற்றனுக் குறாஉஞ் செந்தூர்ப்
பரமனே யருமறைப் பொருளே.

826. கனவினைக் கண்டோன் கனவிடைக் கண்ட
காட்சியை நினைவிற்காண் பதுபோ
லினையலிவ் வுலகுந் தோற்றன் மாத்திரமா
யிலகுமென் றுணர்வளித் தனையே
தனதென ரேலுவற்கண்றருள் சுரந்த
தற்பரா னந்தவா ரிதியே
பனநல் வயிரிப் பரியனே செந்தூர்ப்
பரமனே யருமறைப் பொருளே.

827. வெந்துறு விதையும் விதையினைப் போல
விளங்கினுஞ் செயலி லாதபோ
லிந்தநற் றனுவுந் தீக்கையாற் செயலற்
றிருக்குமென் றுணர்த்தினை யலையோ
கந்தன புயங்கள் படைத்துள மயிலைக்
கந்தனே கவுணியர் முதலே
பந்தன முலையார் தொழுதெழுஞ் செந்தூர்ப்
பரமனே யருமறைப் பொருளே.

திருச்செந்தூர்

வஞ்சித்துறை

828. செந்தின் மேவிய நந்த னார்பதஞ்
சிந்தை செய்பவர் பந்த மில்லரே.

829. இல்லை நெஞ்சமே மல்லல் செந்தில்வாழ்
நல்ல னைத்தொழி லல்ல லென்பதே.

830. ஏது நெஞ்சமே தீதில் செந்தில்வாழ்.
நீத னைப்பணிந் தோத வல்லதே.

831. அல்ல னீங்குமே செல்வ னீள்குக
னெல்லை யில்சுகம் புல்லி நிற்கவே.

832. நிற்க நெஞ்சமே யொற்க நீக்குறு
முக்க ணன்சுதன் பக்க மென்றுமே.

833. என்று நெஞ்சமே நன்று செந்திற்
றுன்றும் வேலனை யொன்றி நிற்பதே.

834. சேராடு முத்தேவ ரேத்துமத் தேவனைத்
தொழு தேவல் செய்தியே
வெய்ய ரைாயிற் கையனார்முருகையனு
ரெமதைய னுவரே.

835. ஆவ லோடுசெஞ் சேவ லாளிசீர்
பாவி லோதவுந் தேவ ராவரே.

836. ஆய னார்தொழுந் தூய செந்திலின்
சேய வன்சிவ நேய மீகுமே.

திருச்செந்தூர்

எழுசீர்க்கழிநெடில் விருத்தம்

837. பாதகங் குயிற்று மெனதுள நினது
பதயு களந்தனை நினைக்குங்
கோதறு சித்த மளித்திடிற் பொல்லாக்
கொடியனேன் றிண்ணமுய் திடுகேன்
மூத நிருர்க்கிங் கருள்சுரந் ததளிக்கு
முக்க ணெம்மா னருள்புரியும்
போதசின் மயமே புரணசிற் சுகமே
புகலலை வாய்க்குக வேளே.

838. வினைகளே வடிவாய்த் திரண்டெழுந் தோங்கும்
வெவ்வுடல் வெறுக்கிலேன் மடவார்
தனகிரிச் சுவட்டை விழிப்புறு மனதைத்
தண்ணருள் வாளினு வறுக்கேன்
தனதற்...றெழுற் கன்றுமெய்ஞ் ஞான
சாதன நல்குமா ரமுதே
புனமகள் யானை மகள்மண வாளா
புகலலை வாய்க்குக வேளே.

839. இராப்பக லகன்ற விடந்தனிற் போந்துன்
னிருபதம் வந்தனை புரியா
தராவன வல்குன் மாதரா சையினு
லழியுநர் னுய்யுநா ளுளதோ

முராரிதன் மருகா போரிவேன் முருகா
மும்மல விருளறப் புரியும்
புராரிதன் குரவா வுமையவள் சிறுவா
புகலிலை வாய்க்குக வேளே.

840. குற்றிய லுகர முயிர்முனங் கெடுகக்
கொள்கைபோ லலகிலா சையினுன்
முற்று மீண்டழியு மழிதகை யேனை
முண்டகத்த தனிழல் வைப்பாய்
சித்திர மயின்மே லமர்ந்துசூ ருடலைச்
சிதைத்தவேற் கரதல மணியே
புத்தரே முதலாஞ் சமயிக ளென்றும்
புகலிலை வாய்க்குக வேளே.

841. ஒருதலை மாணிக் கந்தனை யளித்த
துண்மையே லொதியனேன் பொருட்டிங்
கிருதலை மாணிக் கந்தனையளிக்கி
னிழுதையே னுய்குவேன் கண்டாய்
கரிமுகப் பெருமான் பின்பிறந் தோங்குங்
கற்பகா டவிவரு மரசே
புரிசடை யிறைவன் மகிழ்தருங் கதியே
புகலிலை வாய்க்குக வேளே.

842. கண்டன வனைத்தும் பொய்யெனக் கண்டு
காணருஞ் சிற்சுக வடிவே
பண்டைய வறிவான் மெய்யென வுணரும்
பரிசிலை பெறுவனோ சிறியேன்
அண்டபிண் டங்க ளனைத்துமூ டுருவி
யனைத்துமாய் நின்றிவ ணிலகும்
புண்டரீ காக்ஷன் மருகனே வேதம்
புகலிலை வாய்க்குக வேளே.

843. நன்றுதீ தென்னு மிரண்டினைத் தணந்து
நாடரும் பூரண வடிவாய்
நின்றுதற் போத சிவபோ தங்க
ணீங்குநா ளெந்நா ளுணரேன்
அன்பினு லன்றி யறியொணு ஞானு
நந்தனே யாரணப் பொருளே
பொன்மணி வேய்ந்த புயாசலத் தமுதே
புகலிலை வாய்க்குக வேளே.

844. திக்கிலா வுண்மைப் பொருளையா ராய்ந்து
செப்புநற் றவரிட மடைந்து
தருக்கினன் மருட்டித் தருக்கிடுந் தமியேன்
தண்ணருட் கடற்படி வேனே
அருக்கனே டனல் கால் புனல்புவி வெளியா
விரிய மானனுய் மதியாய்ப்
பொருப்புட னீருய் நதியாய்த் திகழும்
புகலலை வாய்க்குக வேளே.

845. கனவினிற் கண்ட காட்சிபோ லுலகு
கர்னனீ ராகலி னஃதுன்
னினைவலா துண்டோ வெனுஞ்சிவ ஞான
நேயநா னடைவுநா ளுளதோ
கனகனைச் சிங்க வெவ்வுருக் கொண்டு
கைற்றுதி யாலுரங் கீண்ட
புனத்......யலங்கன் மாலவன் றெழுது
புகலலை வாய்க்குக வேளே.

846. பத்தியா லன்றி முத்திசா தனநீ
பரிந்தரு ளுதவிலை யெனநின்
சுத்தவா கமங்க ளுரைப்பதா னின்காற்
றுணைமலர் பணிவனே சிறியேன்
தத்தைமென் மொழிகுஞ் சரிமுலை தோயுஞ்
சண்முக ஞானசுந் தரனே
புத்தகப் பேயாய்த் திரிதரு மெனையாள்
புகலலை வாய்க்குக வேளே.

847. பிடியினுற் பிறந்திங் கிறந்துழ லடியேன்
மேதகு சிறப்பிலாழ்ந் திடினும்
செடியினர் மடவார் முயக்கிலாழ்ந் திடினும்
திருவரு ணெறியடை வேனே
பொடியணி மேனி புங்கவக் களிறே
பொறியிலாச் சமணைவென் றிதழிச்
சடிலனுக் கமலப் பொருடருஞ் செந்தூர்ச்
சண்முகா வெண்குணக் கடலே.

848. மடநெஞ்சான் மெலிந்து மாய்கையா லழுந்தி
மலரடித் தொழும்பது புரியாக்
கொடியனே னினது குறைகழலணுகிக்
கும்பிட்டுப் பணியுநா ளுளதோ

கொடியிடை பிடியி னடையரு ளுடைய
கோமளை யுதவுசெங் கனியே
தடமுறும் பழனஞ் சூழ்தருஞ் செந்தூர்ச்
சண்முகா வெண்குணக் கடலே.

849. முத்தெனு மூரன் மங்கையர் நலத்தான்
மூழ்குறும் பதகனே னின்சற்
பத்தியைப் புரிந்து பாவக மகற்றும்
பரிசினை யடையுநா ளுளதோ
உத்தமி கௌரி பரமகல் யாணி
யொண்டொடி யகமகிழ்ந் துதவுஞ்
சத்திவேற் கரத்தெந் தெய்வமே செந்தூர்ச்
சண்முகா வெண்குணக் கடலே.

850. சஞ்சித மாதி வினையொரீஇ ஞான
சற்குரு மூர்த்தியா நினது
குஞ்சித பாத மென்கருத் திருத்திக்
குறையகன் றிருக்குநா ளுளதோ
கஞ்சனுஞ் செங்கண் மாலுநின் மகிமை
கண்டில ராலெளி யேன்முன்
றஞ்சமென் றியம்புந் தகைமையோஞ் செந்தூர்ச்
சண்முகா வெண்குணக் கடலே.

851. மாரன தம்பான் மெலிவுறு மெளியேன்
மனதினை நின்பதத் திருத்தி
நீரருள் புரிவீ ராயினு மடியார்
நேயநா னடையுநா ளுளதோ
சேரலற் கன்று பாசுர மெழுதிச்
செம்பொனைப் பாணனுக் கீய்ந்தோன்
றூரக முணர வருள்செயுஞ் செந்தூர்ச்
சண்முகா வெண்குணக் கடலே.

852. மண்முத லுதை வகையறி யானுறு
மடியநின் மலரடி குறுகிக்
கண்க ணீர்த்ததும்பக் கன்மன முருகக்
கருதியே யுய்யுநா ளுளதோ
விண்மகள் கொச்சை மகளிரு வோரும்
வேண்டிய நாயகா வெனையாள்
சண்பையம் பதிவாழ் தேசிகா செந்தூர்ச்
சண்முகா வெண்குணக் கடலே.

853. அன்பினா லன்றி யறிவரு மின்பா
தாம்பு யமென்கருத் திருத்தித்
துன்பினை யகன்று சுகவடி வாகத்
துட்டனே னிருக்குநா ளுளதோ
சின்மயா னந்த சிவகுரு மணியே
திருத்தணி காசலத் தமருந்
தன்மயா னந்த வாரியே செந்தூர்ச்
சண்முகா வெண்குணக் கடலே.

854. கற்பது கேட்ப திங்குன திருதாட்
கஞ்சமே யன்றிவே றொன்றுஞ்
சொற்பனத் தேனுங் கருதலில் லாத
சுகக்கடல் படிவனே வடியேன்
கற்பகத் தருவே காஞ்சன மணியே
கந்தமா மலைவயி னேங்குந்
தற்பர னேபோ ரூரனே செந்தூர்ச்
சண்முகா வெண்குணக் கடலே.

855. நீறணி முனிவர் தம்மைமெய்ஞ் ஞான்று
நிந்தனை புரிதருங் கொடியேன்
கூறிய குறையை யகற்றிநின் கமலக்
குரைகழ லருளுநா ளுளதோ
ஏறிய மயிலுஞ் சேவலங் கொடியு
மெண்ணிட வருடருங் கருப்பஞ்
சாறினு லமைந்த கட்டியே செந்தூர்ச்
சண்முகா வெண்குணக் கடலே.

856. காலினைப் பிடித்துக் கனலினை யெழுப்பிக்
கள்ளினை யுண்ணுறு மறிஞர்
பாலினு னணுகிப் பணிந்துநெக் குருகிப்
பாவின மிசைக்குநா ளுளதோ
சூலினா ராயணி யெண்டோளி பைரவி
யாள்சுத கருணைலய நற்செஞ்
சாலிசூழ் தணிகை யிறைவனே செந்தூர்ச்
சண்முகா வெண்குணக் கடலே.

857. அருமறைப் பொருளை யால்கிழ லமர்ந்தன்
றருளிய பரசிவ னருளு
மொருகனிக் காக மயிலின்மீ தேறி
யுலகெலாம் வலம்வரு மழகா

கருவினி லெளியேன் போய்ப்புகு தாதுன்
கான்மலர் நாடுமா றருள்வாய்
திருமருமார்ப னுடையன் பணியுஞ்
செந்தில்வா ழெந்தைபி ரானே.

858. கல்லுநெக் குருகு முருகிடா வஞ்சக்
கன்மனக் கயவனே னின்சி
ரல்லிலும் பகலு முரைக்குனர்க் கேவ
லின்பொடு குயிற்றுமா றருள்வாய்
புல்லறி வகன்று நல்லறி வுடைய
புண்ணிய ருள்குமந் தணனே
செல்லனு குறுமுன் னதச்சி கரிசூழ்
செந்தில்வா ழெந்தைபி ரானே.

859. விடவராப் பைஞ்சூட் டின்மிசை நட்டம்
வியப்புறக் குயிற்றுமா லவனும்
விடைமிசை ரசித விபமிசை யமரும்
வேந்தரும் பணிசெயு மழகா
படிமிசை நின்னைப் பாடிநின் றுடும்
பரிசெனக் கருளுநா ளுளதோ
செடிகொ யாக்கை விருப்புறுர் வழுத்துஞ்
செந்தில்வா ழெந்தைபி ரானே.

860. நீலமார் களனுஞ் சூலமார் கரனு
நீள்சடை யார்மணி முடியும்
வாலையா ரிடனு முடையவன் றனக்கு
வாலறி வுறுத்தசற் குருவே
ஞாலமீ துன்செங் கழலெனக் கருளி
நாயினேன் வினைதவிர்த் தருள்வாய்
ஓலமே யுடையார் நனிதொழு தேத்துஞ்
செந்தில்வா ழெந்தைபி ரானே.

861. படிகமே மனமப் படிகமுச் சியினிற்
பஞ்சவன் னங்கவர் தரல்போற்
கொடுமல மைந்து மணுகுமற் றவற்றின்
கோளறப் புரிபவ னீயே
கடிமலர் நீபக் கண்ணிவேய்ந் திலகுங்
கருணையா நந்தசா கரமே
இடலனு பவிகள் வாழ்த்துசீ ரலைவாய்ச்
செந்தில்வா ழெந்தைபி ரானே.

862. வினையின்போ கமதே தேகமவ் வினைதான்
விலகிவித் தேகமீங் கில்லை
யினையதே கமியா னென்றுசங் கற்பித்
திருக்கும்வெள் ளரினுனேற் கருள்வாய்
கனகநற் கிரியைத் தனுவெனக் கொண்டு
காவன் முப்புர நகைத்தெரித்த
தினகர னுய வரன்றிரு மதலாய்
செந்தில்வா ழெந்தைபி ரானே. (சர்)

863. குருவினை யொப்பு மலபரிபாக
மெய்திநற் சத்திநி பாத
மருவநீ ஞான தீக்கையைப் புரியு
மாட்சிமை மறப்பனே சிறியேன்
மருவுறு கழுநீர்த் தொங்கல்வேய்ந் திலகு
மாசிலா ஞானவா ரிதியே
திருமக ளுைம் வசிக்குறூட மலைவாய்ச்
செந்தில்வா ழெந்தைபி ரானே.

864. சீரனு ரகவற் பனுவலுக் குகந்து
கிளர்மலர்ச் சேவடி யருளு
மாரனு நந்த சண்முக னேநின்
னடிமலர்க் கன்புவைத் தறியேன்
சேரலன் வேப்பந் தொங்கலா னுத்திச்
செம்மலர்த் தொடையனே வரையா
தேருமெய்ஞ் ஞான தேசிகோத் தமனே
செந்தில்வா ழெந்தைபி ரானே.

865. தத்துவா தீத சின்மய சுத்த
சண்முக தற்பர பரம
வித்தக விபுத விமலவென் யடியேன்
விரும்பியே யேத்துநா ளுளதோ
கொத்தலர் துளவக் கண்ணியன் முதலாங்
குரவர்வாழ்த் தொலிசெயு நிபுண
சித்துரு வாயிங் கொளிர்தரு மலைவாய்ச்
செந்தில்வா ழெந்தைபி ரானே.

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்

திருச்செந்தூர்

866. முன்னைப் பொருட்கு முதற்பொருளே
முத்திப் பேறே மூவாத

பின்னைக் கேள்வன் மருமானே
பேசா ஞான வாரிதியே
மன்னுஞ் செந்தில் வளம்பதியின்
மருவும் பரமே வஞ்சகனேன்
றன்னை யிந்த வினையினின்றுந்
தடுத்தாட் கொள்ளத் தக்கதுவே.

867. வேத முடிவும் வேதாந்த
முடிவும் விளக்கி விரைந்துனது
பாத மலரை யெனக்கருளப்
பாக்கி யந்தான் செய்தேனோ
நாத வடிவே நாதாந்த
வடிவே ஞான குருவடிவே
போத வடிவே திருச்செந்தில்
பொலிவுற் றமர்ந்த செவ்வேளே.

868. செவ்வே லனைய கண்மடவார்
சிறுத்த விடையுங் குவிமுலையும்
வெவ்வாய் மொழியும் வாள்விழியும்
வினையே னுளத்தை யழித்ததுகாண்
குவ்வோ டொருசெந் திருமகிழுங்
கோபா லன்றன் குலமருகா
சிவ்வே யுருவாஞ் செந்திலிடந்
திகழுஞ் சைவச் சிற்பரமே.

869. சிவமே யருண கிரிநாதன்
செப்பு மருபூ திப்பயனைத்
தவமார் குமர சற்குருவாய்த்
தரணி மீதிங் கருள்வாயே
அவமே புரியுஞ் சூர்க்கனைந்த
வருளா ரமுதே யருட்கடலே
நவமே கடற்செந் திலிமகிழ்ந்தெந்
நாளு மமரு நாயகமே.

870. நாயை யனையேன் காரிகையார்
நாற்றக் குழியி னணுகிக்கொடும்
பேயே னுரைக்கு மாசைவழி
பேதை யணைந்தே னழிந்தேனே

மாயை யகன்ற நெஞ்சினர்கள்
மதிக்கு மியானை மணிவாளா
தூய மறைகள் நான்கேற்றுந்
துரையே செந்தூர்ப் பெருமானே.

871. மானேர் விழியார் மயக்கெய்தி
மாயும் பொல்லா வஞ்சகனே
னானே னின்று னரவிந்த
மன்பாய்க் கருதே னந்தோநா
னேனே பிறந்தே யிறக்கின்றேன்
யெந்தா யெந்தா யெழிற்செந்திற்
கோனே சைவக் குருந்தேயெங்
குருவே குமர குருபரனே.

872. குரும்பை முலையார் கோல்விழியார்
குமுத வாயார் கொடியிடையார்
அரம்பைத் தொடையி னிடையிருக்கு
மரவின் விடத்தா லழிந்தேனே
கரும்பு நிகர்மென் மொழிக்குறப்பெண்
கணவா மயின்மேல் வருந்துணைவா
விரும்பு மடியார்க் கொருகுரவா
விளங்குஞ் செந்தூர் வேலவனே.

873. வேலை யனைய கண்மடவார்
வினையா லெனது விறலழிந்தேன்
காலப் புயல்வண் ணப்பெருமான்
கனிவாய் வணங்குங் கற்பகமே
யால மூணி நனிகேட்ப
வருளா நந்த வருள்சைவக்
கோலத் தமுதே திருச்செந்தூர்க்
கோவில் வளரெண் குணத்தவனே.

874. ஏலக் குழலார் மயக்கெய்தி
யென்னை யறியா திருக்குமெனைப்
போலுங் கயவ ருண்டுகொலோ
பொல்லா மணியே பூரணமே
தாலத் தரைசே திருத்தணிகைச்
சைவத் தரசே தமிழ்க்கரசே
வேலுக் கரசே கடற்செந்தூர்
மேய ஞான விளக்கொளியே.

875. ஏத மகற்று மன்பருளத்
தேய்ந்த குகவே ளிறையேதற்
போத மகற்றும் பரவொளியே
பூரண வொளியே யுள்ளொளியே
சீத வனசச் சீரடியிற்
சிறியேற் கெஞ்ஞான் றருள்வாயே
காதற் பெருக்கே யருட்பெருக்கே
கடற்செந் தில்வாழ் காங்கயனே.

### பெருங்கழி நெடில் விருத்தம்

876. சோம னிலவுஞ் சடையாளன்
றுரியங் கடந்த சுடர்விளக்கிற்
றுலங்கு மொளியே யன்பர்களி
துளும்ப வருந்தா மணியேநங்
தாமக் கோட்டி யெனுமன்னை
தன்னிற் பூத்த கருமணியே
கந்த மலைவா ழானந்தக்
கடலே யெங்கள் களைகண்ணே
நாம வேலைக் கரம்பிடித்த
நாதா வென்றுன் றுண்மலரெஞ்
ஞான்றும் பணியுந் தொண்டர்பணி
நாயேற் கினிநீ பணிகண்டாய்
ஆமை வடிவங் கொளுமாய
னன்புற் றிறைஞ்சு மாரமுதே
யமரா பதிவா ழரசேசீ
ரலைவா யமர்ந்த பெருமாளே.

877. அருளை விளக்கு மதிமுகமு
மமுதம் விளக்கு நகைவாயு
மபயம் விளக்கும் பொற்கரமு
மன்பு விளக்குஞ் சேவடியும்
பொருளை விளக்குந் திருவுருவும்
புலையேன் மனத்தி னனியெழுதிப்
பொருந்து முதசின்மயக்கில்
பொருந்து நாளை விளம்பாயே
இருளை விளக்கு மணிகண்டத்
திறைவ னளித்த நெற்படியோ
யிரண்டி லெண்ணுன் கறன்குயிற்று
மிமயப் பரவைத் தருங்கனியே.

அருமை விளக்குந் தமிழ்ப்பனுவ
லாற்றுங் கிரனகத்திமிர
மகற்றுஞ் சுகவா ரிதியேசி
ரலைவா யமர்ந்த பெருமானே.

878. அஞ்சத் துவசன் விதித்தலுமிவ்
வகில மளந்த மாலவனு
மயிரா வதனர் பெருவாழ்வு
மளகை யாளி வெறுக்கையுமென்
னெஞ்ச மடைய விரும்புமென
நினைந்தோ நீதான் குருவாகி
நீச னேன்முன் வாராம
னிற்கின் றுயி தறியேனே
மஞ்சு தவழும் பொழிறிகழும்
வள்ளி மலைவச் சிரத்தானே
மாறு ஞான நன்னிலையே
வழுத்தா ரடையாப் பருப்பொருளே
அஞ்சி யெமையா ளனுந்தேவ
ரவர்பாற் கருணை சுரந்தருளு
மருண வடிவே சுகவடிவே
யலைவா யமர்ந்த பெருமானே.

879. பத்தி நெறியிற் பொருந்துவிக்கும்
பரமா கமத்தின் பாங்கர்நினைப்
பஞ்ச சுத்தி செய்துகிரியா
பரனைக் குட்ப டுத்துகின்ற
வெத்து மறியேன் மடவரலா
லெத்தில் விழுந்தே னின்பாத
மெய்ஞ்ஞான் றினிநா னடைவேனே
விதுகா றுந்தா னறியேனே
முத்துச் சிவிகை யிறையளிப்ப
முனிவர் போற்ற வெழுந்தருளி
முத்துத் தமிழைக் கொழித்தருளு
மோன ஞானத் தெள்ளமுதே
அத்த னிகராங் குறுமுனிவ
னறியும் வண்ணஞ் சிவஞான
மருத்துந் தெய்வப் பெருக்கேசீ
ரலைவா யமர்ந்த பெருமானே.

880. அரியுஞ் சிவமு மொன்றெனசி
வாக மங்கள் முறையிடலா
லந்தோ விதைநா னிறையேனு
மறியா திருப்ப தென்னேநற்
பொறையா லுயர்ந்த பெரியோர்கள்
பொலன்கொள் பாத நினையாத
பொறியு மிடியு மெனக்களித்த
பொல்லா வுளவு மறியேனே
பொறியை மருவு மார்பனும்வெண்
புண்ட ரீகச் செல்விதனைப்
பொருந்து மிறையும் வெண்கயத்திற்
பொலிந்த வரசுங் காண்பரிய
அருமி னிருபூண் முலைமகிழு
மமல வாழ்வே யருட்கடலே
அங்கைத் தலத்தில் வேலேந்து
மலைவா யமர்ந்த பெருமாளே.

881. காம விடத்தா னனியழிந்து
கதியா தென்று கருதுநர்தங்
கருத்தி னூடுங் கண்ணூடுங்
கலந்து நின்ற பரஞானச்
சேம நிதிநின் சீர்பாதந்
தேடு மடிய(ா)ர் திருப்பணியைச்
சிறியேன் குயிற்றி மெய்ஞ்ஞானத்
திருவ மணையச் செய்திகண்டாய்
ஈமத் தாடும் பரசிவனார்க்
கினிய ஞான வுபதேச
மியம்பு மிளையோ யாவருக்கு
மிணையா வலிய சூர்மடிய
வாமத் தகைநீ செல்லெனவா
லமைந்த வுமையாள் கண்களிப்ப
வசைந்து நடக்கும் செங்கரும்பே
யலைவா யமர்ந்த பெருமாளே.

882. மண்ணிற் பலகாற் பிறந்திறந்து
மண்ணு தற்கிங் கொருப்படுமிம்
மஞ்ச னேனை மடவரலார்
வஞ்சக விழியாற் கண்முலையா

லெண்ணிக் காலம் வருந்தியவிவ்
வேழை யேனைப் பருவம்பார்த்
திரக்கத் தாற்சற் குருவாகி
யெடுத்தாண் டவனு நீயன்றே
பண்ணின் மொழியா லயில்விழியாள்
பஞ்சி னடியாள் பணைத்தோளி
பகரு மின்பப்பொ ருப்பரையன்
பரிவா யழைக்கு மனநடையாள்
அண்ணன் மகிழு முமையளித்த
வருணை கிரிவா ழருட்கடலே
யழிவின் ஞெமிலிப் பரியூரு
மலைவா யமர்ந்த பெருமாளே.

883. மாலை விணைக்கு மனத்தாலிவ்
வஞ்சக நினைவு கொண்டனையோ
மலரோன் செய்த கற்பனையோ
வஞ்ச னேன்செய் தீவினையோ
மூல மலத்தி னியற்கையதோ
முடிவை யறியே னெஞ்சேநீ
முக்கண் படைத்த கரும்பளித்த
முருகைப் பணிந்து துதித்தனையேல்
சால மாலு மயனுமுருச்
சைவ ஞானம் பொருந்துமெனச்
சாற்றி நின்றே னதுநின்றன்
சத்தி வேலி னருளன்றே
ஆலம் படைத்த விழிச்சிநல
வமுத மொழிச்சி சிற்றிடைச்சி
யருளு மயிலை வேலவனே
யலைவா யமர்ந்த பெருமாளே.

884. ஞாலந் தன்னி னல்வகையா
நவிலும் யோனி யெழுதோற்ற
நண்ணிப் பிறந்திங் கிருந்தழியு
நாயி னேனைச் சிவாகமஞ்சொல்
சீல மில்லாப் புலையேனைத்
தெய்வ ஞானம் பொருந்தாத
சிறியே னேனைத் தவமுயலாச்
சிதட னேனை யாட்கொள்வாய்

ஏலக் குழவி யிருதனப்பா
லின்பாய்க் கறந்தூட் டிடவயின்றன்
றிலகு குமர குருவாகி
யெடுத்தாண் டவனு நீயன்றே
ஆலிற் றுயிலுந் திருநெடுமா
லரகு கேச வெனப்புகல
வசையுந் தோகைப் பரியூரு
மலைவா யமர்ந்த பெருமாளே.

885. உண்ணப் பருக்கும் பாழுடலை
ரோமக் காடு நனிபூத்த
வொழுக்கு மலப்பொத் தரைமடவா
ருடல மணையும் பொதியதனை
மண்ணை யுண்டு மண்ணுக்கு
மட்பாண் டத்தை யயனென்னு
மட்ப கைக்கோர் கைவினையை
மறலி யென்னுந் தடிக்காரன்
தண்ட மென்னுங் கைப்படையாற்
தவிடு பொடிசெய் குயக்கலத்தைத்
தமியேன் றவிர்த்துன் கஞ்சமலர்த்
தாளை யடையு நாளென்றோ
அண்மைத் தோழ ராரூரற்
கன்று தூது நடந்தருளு
மமலன் றன்னை வலம்வந்த
வலைவா யமர்ந்த பெருமாளே.

## திருச்செந்தூர்

## நாரைவிடு தூது

### அறுசீர்க்கழி நெடில் விருத்தம்

886. சீதக் களப மெனுமகவற்
றீந்தேன் பருகிக் கிளவல்குரு
நாத ரலைவாய் முருகரிட
நாராய் சென்று நவிருயோ
நீத ரெனுகி ரன்றுநல
நீல மயின்மேற் பவனிதெரு
வீதி வரக்கண் டம்மானு
விடுத்தா ளன்ன முண்பதுவே,

887. ஞால முடையார் தமையுடையார்
ஞான மருள்வார் சிரலைவாய்த்
தால முவுடையா ரவரிடநீ
சார்ந்தே நாராய் சாற்றுயோ
நீல மயின்மே னீர்பவனி
நெடிய வீதி வரக்கண்டு
மாலை யடைந்து பாலனமு
மறந்தா டுயிலோ டுடையென்றே.

888. அன்பை யடையார் தமையடையா
ராறு முகனு ரலைவாயார்
என்க ணனையா ரவரிடஞ்சார்ந்
தினிநீ நாரா யிசைக்காயோ
அன்று நீவிர் தகரேறி
யரச வீதி வரக்கண்டே
யென்பு முருகி மனமுருகி
யிருக்கின் றுளம் மாதென்றே.

889. அருளை யுடையா ரெமையுடையா
ரலைவா யுடையார் மெய்ஞ்ஞானப்
பொருளை யுடையா ரவரிடம்போய்ப்
புகழ்ந்து நாராய் புகலாயோ
இருளை யிகந்த சிவஞான
மிலகுந் தகர்மே னீர்பவனி
தெருவில் வரக்கண் டம்மாது
திகைத்தா ணகைத்தா ளென்பதுவே

890. அத்தர் முக்க ணப்பர்தரு
மலைவா யமுத வருட்சைவ
சுத்தர் முருகர் குகரவர்பாற்
றுணிவாய் நாராய் சொல்வாயோ
கொற்ற மயின்மே னீரிவர்ந்து
கோலப் பவனி வரக்கண்டப்
பித்தர் தோளை நானென்று
பிரிவு றுமட விருப்பதென்றே.

891. தறுகண் வேனற் படையுடையார்
தணிகை மலையா ரலைவாயார்
அறுமீன் முலையை யுண்டவர்பா
லடைந்து நாரா யரற்றுயோ

பொறியஞ் சிறைமா மயிலேறிப்
பொற்றேர் வீதி வரக்கண்டு (டே)
அறிவு மழுங்கி மனமழுங்கி
யயர்ந்தா ளென்றிவ் வொருமொழியே.

892. மாய மொழியார்க் கழிவறியார்
மயிலைப் பதியார் திகழுமலை
வாய ரெமையாள் குகனுரை
வணங்கி நாராய் வழுத்தாயோ
தூய மறையீர் நின்கடனத்
துரக மிசைநற் பவனிவரத்
தாய ரோடுந் தமைக்கண்டு
தயங்கி நின்றா ளென்பதுவே.

893. அருமைத் தமிழ்சொ லருணகிரி
யாருக் கருளு மலைவாயார்
இருகை யளிப்பா ரவரிடம்சார்ந்
தின்பாய் நாரா யிசைக்காயோ
தரும விடைமே னீர்பவனி
தனித்து வரக்கண் டனல் கான
முருகு மெழுகு போலமன
முருகி நின்றா ளென்பதுவே.

894. அஞ்சு தலையர் தருமெங்க
ளாறு தலையா ரலைவாயார்
கஞ்சற் கருளுங் குகனற்பாற்
கனிந்து நாராய் கழறுயோ
நஞ்சு பொதிந்த வரவுண்ணு
நடனப் பரிமேற் பவனிவர
உஞ்சன் மனங்கண் டதனெறிவிட்
டொழிய நின்றா ளென்பதுவே

895. அருண வடிவர் சுகவடிவ
ரலைவா யமரு மற்புதனார்
கருணை வடிவர் தமையடைந்து
கருத்தாய் நாராய் கழறுயோ
மரண மகன்ற மயிலேறி
மாட வீதி வரக்கண்டத்
தருண முமது சீர்கேட்டுத்
தன்னை மறந்தா ளென்பதுவே.

### திருச்செந்தூர்

896. அமுதக் கடலை யன்பருள
        மணையுங் கரும்பை யஞ்ஞானத்
திமிர மகற்று மருக்கனைமுத்
        தேவர் பணியுஞ் சிவகுருவைச்
சமர புரிவா ழுருட்பெருக்கைத்
        தனியைச் செந்தூர்ச் சரவணனை
இமயப் பாவை தரும்பொருளை
        யேனே காணா திருந்தேனே.

897. பொன்னைப் பூவை மாதரையோர்
        பொருளா மதியாப் புலவருளந்
தன்னில் வதிந்த சேவகனைத்
        தணிகை மலைவாழ் தற்பரனை
மன்னுஞ் சுகவா ரிதியையலை
        வாயி லமர்ந்த மணிவிளக்கை
யென்னை யாளும் பெரியோனை
        யேனே காணா திருந்தேனே.

898. மறையுட் பொருளைப் பரங்குன்றில்
        வாழு மாசி லாமணியைக்
குறமா மகடங் கொழுநனையெங்
        குருவைத் தணிகைக் குரிசிலையஞ்
சிறைவண் டார்க்கும் பொழில்சூழுஞ்
        செந்தின் மேய சிவஞான
விறையை யெமையா ளுடையவனை
        யேனே காணா திருந்தேனே,

899. தன்னைத் தலைவன் றனையுணராச்
        சழக்கர்க் கருளாத் தணிகைமலை
மன்னைப் பொன்னை மணிக்குன்றை
        மருவை மலரை வரையளித்த
வன்னை மகிழுங் குருந்தையெம
        ரரசைச் செந்தி லாண்டகையை
யென்னைத் தடுத்தாட் கொண்டவனை
        யேனே காணா திருந்தேனே.

900. தரும விடைமேல் வருமுக்கட்
        சுயம்பு தருஞ்சுத் தனையிருமூ
விருகண் படைத்த செங்கரும்பை
        யின்பக் கடலை யின்னமுதை

யரிய பொருளை யிடைக்கழிலா
லாதி தன்னை யலைவாயி
லிருமை யுதவு மண்ணலைநா
னேனே காணு திருந்தேனே.

901. முத்தைப் பவளக் கொழுந்தைமறை
முடிவை யாறு முகம்படைத்த
சித்தை யமர பதியமர்ந்த
திருவைச் செந்தூர்ச் சின்மயனைப்
பொத்தை யூனின் சுவற்றிலோரைம்
பூத முதலாம் பொருத்தியிவ
ணித்தை யொழிக்க விருந்தவனை
யேனே காணு திருந்தேனே.

902. காரூர் சிகரித் தணிகைவரைக்
கருமா மணியைக் கதம்பமலர்த்
தாரூர் மகிழ்ந்த பன்னிருகண்
ணமுதப் பெருக்கை யழிவில்லாச்
சீரூர்க் குன்று தோறுடல்
செய்யு நலனைத் தேரூரு
மேரூர் செந்தில் வீதியிட
மேனே காணு திருந்தேனே.

903. எல்லா நலனுந் தழைத்தோங்கு
மெழிலார் மு...... டத்தமர்ந்த
பொல்லா மணியைப் பூரணனைப்
பொருப்பை விருப்பைப் பொய்ந்நூலைக்
கல்லா வண்ண மருள்சுரந்த
கருணைக் கடலைக் கடற்செந்தி
லில்லா வுடைய பெருமானை
யேனே காணு திருந்தேனே.

904. முன்னுன் மதுரைப் பதிவணிக
முதுவர் பாலே மொழிகழுரு
தந்நாள் சங்கக் கலக்கற்று
மருணை கிரிவா பருட்கடலைப்
பன்னு ளன்பர் மணிந்தேத்தப்
பரம ஞானம் பரிந்தருளு
மென்னு யகனைச் செந்திலிட
மேனே காணு திருந்தேனே.

### ஈஸ்வரன் பேரில் பதம்

905. இந்தத் திராணி கொண்டவர் மீதினி
லிச்சை கொண்டாய் மகளே—பழங்
கந்தை துணியு டுத்து னீயே
வைத்தியக் காரனடி மகளே—(இந்தத்)
நச்சர வும்வெள் ளெலும்பு மணிந்தவர்
நரண மில்லாத தவண்டி—வேடன்
எச்சிலையுந் தின்று கூத்தன்கை கல்விறு
லெறியு தைப்பட்ட வண்டி—ஒரு
மச்சினனும் நந்தாச வேஷங் கொண்டு
வங்கி கொடுத் தந்த—தெருவில்
பிச்சை யெடுக்கின்ற இச்சகக் காரனுட
னிச்ச ரட்ட மேதுக்கடி—இந்த
ஒட்டை யொழியக் கலமென்ற சத்தம்
ஒருக்கா லுங்கா ணனடி—ஒரு
மாட்டை யொழிய பின்னர் காசுக்கு
வகைவ துங்கா ணனடி—சுடு
காட்டை யொழியவே ம்னைக்கோலி வீடவர்
கட்ட வும்கா ணனடி—பாட்
டனைக்கு மகளே யவர்தன் னுல்
பலனே துங்கா ணனடி—(இந்ததிராணி)
தேயும் பிறையணி சடையில் தரித்தவர்
தேவா திதேவ னடி—அன்று
மாயனம் புதல்வனை நெற்றிக் கண்ணாலே
வகையா யெரித்த வண்டி
பாயும் புலியை யுரித்து உடுத்தின
பார்வ திபங்க னடி. (இந்ததிராணி)

906. பசப்பிக் கள்ளிகையில் சிக்கிக் கொண்டாரடி
பாவை யைநீகே ளடிப்
பசிக்குப் பனம்பழம் பாலுங் கனிபோலும்
பார்க்கு ராரடி யவள்நிற்கிற தறியாமல்
பாரென்னமுன் னேரம்வரு வாரந்தஔ் யாரந்தனை
பரமரக சியம்அவனி தனில்வரும்
வரதரோடுவரும் வீரனேடுரு பசிபாலுக் குரிதா
வேத்திரிபூனைக் கிணையா மிப்படி (பசப்பி)
கடுத்த தெல்லாந் தண்ணி வெளுத்த தெல்லாம்
[பாலென்று
கருத்தி லெண்ணினே னல்லடி—அந்த

சிரிக்கிசெய்த சித்திர வகைகளே நானினினந்
தேனில்லை வஞ்சனைதானில்லை
என்றறிந்தே னிந்தனையே இந்தரவு தாரஞ்செய்தா
ரன்போடு தினமு மனமுமே
உன்னை யிலாது வேறொரு மனதில் மயிலென
நினைதலை யெனதேனுக்கு ஒருபால் மிக்க
விண்ணுணத் தொழில் பய—(பசப்பி)
முன்கங்கை கங்கணம் பார்க்கக் கண்ணாடி
முகத்தின் முன்வே ணுமடி—அவர்
வங்கணத் தாலவ ரிங்கே வருவாரென்று
வார்த்தைக் கிசைந்தது கார்த்திகை பிறையென்ன
மாரனங் கணையோரம் பதுபாரந்தன் பார்தனில்
வரி லவர்மன துருகுமே
இதுவரை யிலவனுட னுரைசெய் தேனில்லை
வானத்தரு வாய்மத்தது வாசல்கிளி யோயெத்திரை
கங்குல் பகலுமிணை பிரியாமல் [பசப்பி
கலங்கி யேதிரி யாதடி—தார்
மங்கைவரு தர்ரை கொங்கை யணைந்திட
வந்தபோ தெல்லா மகிழ்ந்தின்பம் போடு.
மால்கொண்ட திறல்கண் டவரா வெமபொரு
பால்கொண்டது மடமயி லேஉன்னை
தடமயிலே மாயப் பொடியோ முப்பழமோ
எப்படி யோஎத் திசையொ
வேறு பச்சைக் கள்ளிகையில் சிக்கிக் கொண்டாரடி
பாவை யைநீகே ளடி.

907. மனதாசை மிஞ்சு தேபெண் ணரசே
எனை அணைந் தொருமுத்தந் தாடி
வேசியர்குள் ளாகவுல்லா சக்காரி நீயல்லவோ
மேடையின்மேல் விளையாடு வோமிருவரும்
விசைய கோபாலரும் நானல்லவோ (மனதாசை)
பத்தரை மாத்துள்ள தங்க சரீரத்தை
பார்த்து பார்த்து மனமுருகுதே
குத்துமுலை யழகை கண்டா லுடனேமனங்
[கூடவே ணுமென்று தோணுதே.

இத்தனை மோடி யாமோ என்கின்றாரா
நீசும் மாபோம்
பத்து பன்னூரு புணர்ந்தார டிஎனை
பாரடி மயல்தீரடி (மனதாசை)

இடையிலுடுத்து சேலைகாற்றிலொதுங்கக் கண்டு
உன்னிருதுடை பசும்பொன் போல்மின்னுதே
வடிவுடனே மஞ்சள் பூசுமழ கைக்கண்டு
மதிமயக்கம் பிரமைகள் தோணுதே
அடவுடன்என்னைச் சேர்ந்து அதர ரசத்தைதாரு
மருடமுலை தனிலேலிங்க விரலூணிய குக்கூ
கூகு குயிலென கூவ (மனதாசைமிஞ்சு)

சீதைகுழ லரக்கன் தன்னைக் கண்டாப் போலே
சிந்தை மயங்குறேனடி
மாதராசை யுந்தன் பெண்போல் ஒருத்தியுண்டோ
மண்டலத்தில் கண்ட தில்லையே
காதுடன் காதணைத்துக் காலுடன்கால் பிணைத்துக்
காவுதனிலே துணிநாவு துழாவியே
கலந்து மன்மத லீலைகள் செய்ய (மனதாசை மிஞ்சு)

## கிருஷ்ணசுவாமி பேரில் பதம்

908\. புத்தி சொல்லடி யசோதா—உன்மகன் கிருஷ்ணனுக்கு
புத்தி சொல்லடி யசோதா
புத்தி சொல்லடி யசோதா நித்தமுங்கள் கிருஷ்ணனுக்கு
அத்தை மாமி நாத்தியென்று சற்றுமரி யாதியில்லை (புத்)

சித்திர மெத்தையில் பிரண்டு அரண் டெழுந்து
நித்திரை செய்வது தான்கண்டு
மெத்தென ஓடிவந்து கையினில் வாயைப்
பொத்தியே யிருக்கிக் கொண்டு
மத்தமத மென்னசொல்வேன் இத்திரிப்பு செய்வதனால்
இத்தனைபேர் பெண்களில்பத்தினி யொருத்தியில்லை (புத்)

பண்டுபகை யெங்கள் மீதொரு கிருஷ்ணனை
தண்டனைகள் செய்ய வொண்ணுதோ
கண்டுமெங்கள் வார்த்தை குதோ இப்படிக்கொத்த
துண்டரிக்கஞ் செய்வ தேதோ
விண்டுதொரு பூவுதனில் வண்டுபோ லெங்கள்சுகத்தை
கண்டவ னிவனல்லாமல் கொண்டவ றறிந்ததில்லை (புத்)
கட்டியென்னை அணைப்பானே அணைப்பதற்குத்
தொட்டு தாலி கட்டி னானே
கொட்டமுஞ் சமதி தானே இப்படிக்கொத்த

துட்டபிள்ளை பெற்ற தேனே
துட்டனும் பிறந்தநாளில் மட்டுமரி யாதையில்லை
கட்டியே உரியில் வெண்ணெய்
சட்டி வைக்க ஆசையில்லை (புத்திசொல்லடி)

### முருகையர் பேரில் பதம்

909. பவனி வாரூர் முருகையர்—பவனிவாரூர்
பவனி வருகிறூர் மயின் மீதினில்
பரமனும் பார்வதியும் மகிழவே
அவனி யோர்களும் துதிகள் செய்யவே
ஆறுமுக மருள்செய மதாகவே (பவனி)

வீர தண்டையும் பாத கிண்கிணி
வெள்ளி சிலம்புகள் கலீர்கலீ ரென்ன
ஆர பாரமும் மார்பில் பதக்கமும்
அரையில் சாத்திய பொன்னின் அரணும்
சூரனு யிரத்தெட் டென்றுஞ் சுத்திய
துணித்த வேலொடு கரத்தில் வாங்கியே
தீர தனத்துடன் மயிலி லேறியே
தேவர் தேவர்கள் சேர்ந்து போற்றவேபவன
மடக்கி யகுடை யால வட்டமும்
இருபு றங்களும் வரிசை யாகவே
டக்கு டிக்கென இடிபோல் வாணமும்
டமாரஞ் சேகண் டணடாங் குடாங்கென
தக்கு திக்கென ததிங்கணு தோங்கென
தகுதிகு தோமென தாள முழங்கவே
கக்கு கிக்கென கூவு மயிலேறி
கானக குறவள்ளி பாக முருகையர் (பவனி)

காதி லணிந்த பொற் கவசகுண்டல
கனக ரேடணுங்கிகண் டசரமுடன்
சோதிமின் னல்போல் நுதலில் சூட்டியே
துலங்கு நவரத்தின தும்பி பதக்கமும்
வேத வேதியர் சாம வேதமும்
விளங்கு யிருபுறம் வீசு சாமரை
வீதி வீதிகள் தோறு மயிலினில்
மேள முத்தொனிகள் சங்கீதம் பாடவே (பவனி)
திங்கள் கங்கையு சடையில் தரித்தவர்
தெட்சணு காசி தென்க டம்பைசேர்

பங்கில் வர்ழுகின்ற முத்து மலையம்மன்
பாலனெனுங் குமரேசர் வருகவே (பவனி)
மங்கை வள்ளி தெய்வானை யிருபுற
மனமகிழ்ச்சியாய் வர்ணக்கிளி (பவனி)

### வேறு

910. உன்னாலே மய்யல் சகியே னடிபாவி
உன்னலே மய்யல் சகியேனடி
மன்னவல் லோர்புகழு வானிங்கேஸ் வரநாட்டில்
மாதரசே கொஞ்ச மதிதயவென புரிமாங்குயில்தொனி
இன்னை மடவிய உன்னை வேண்டி
இப்படி மெலிவது தர்மமோ (உன்னு)

அந்திப் பொழுது யிகமாக மதனஞ்சரம்
வளைத்து டல்புண் ணுக—சீதச்
சந்தனம் பன்னீரு வென்னீருய் வேகுதடி
தய்யலே நானு ரையினி நோக.

முந்தடி யோக சய்யோக மோககடல் பிரவாக
முன்னை கோனடி
அதனி லுடுகலை நனையிது யினியென் செய்வேன்
நிதவர மதுசிவ சிவா (உன்னு)

இப்படியோ விரக தாபம்—உனக்
இல்லையோ சொல்லு காம கலாபம்
பூர்வ சென்மத்தி லென்னசெய் தேன்பாபம்
வேண்டாத சிந்தையில் விட்டிந்த கோபம்
முன்னே யிந்த பிரதாபம் மிகுந்தால் வருமோலாபம்
விவாத மிப்படி ஏன்விளைக்குறுய்
சபாசு மெச்சவு மேதவிக்கிருய் (உன்னு)

தன்மை யாகக் கலந்து கூடியின்பந் தந்த
வழக்கிப் பெண்ணடி மோடியெனக்
குன்னை யல்லா லின்னம் வேறுண்டோடி
புண்ணிய முண்டடி சற்றே பக்கத்தில் வாடி (உன்னு)

### திருச்செந்தூர்
### எண்சீர்க்கழி நெடில் விருத்தம்

911. ஆறு சூடிய வம்பல வாண
னன்று தந்தரு ளமுதவா ரிதியே
நீறு பூசிய மேனியெம் மானே
ஞெமினி மீவரு நின்மலப் பொருளே

ஆறு மாமுகத் தையனே குகனே
யப்பனேயென வாற்றுமா ரருள்வாய்
சீறு நாகின்மேற் றுயில் கொண்மான் மருகா
செந்தின் மேவிய தெய்வநாயகனே.
பொய்ய னேன்புழுத் தலையனேன் பொல்லாப்
புலையனே னின்னைப் போற்றிலே னெனினு
மையனே யெனையாள்வ துன்பார
மாளகில்லை யேல ருட்கழ காமோ
துய்ய செங்கழு நீர்த்தொடை புனைவோய்
சுத்த ஞானியர் தொழுதெழு மமுதே
செய்ய னேயயிற் கையனே யலைவாய்ச்
செந்தின் மேவிய தெய்வநாயகனே.

912. முத்தி வேண்டு வதென்க டனதனை
முடிப்ப துன்கடன் முருகனே யெனினீ
சற்று மோர்கிலா திருந்திடி னுன்னைச்
சார்ந்த தென்பயன் றமியனே னந்தோ
அத்தி மீவரு மிந்திரன் மகளை
யன்று நன்மணங் கொண்டரு ளமுதே
சித்த ரானவர் வந்திறைஞ் சேத்துஞ்
செந்தின் மேவிய தெய்வநா யகனே.

913. ஒழுகு நீர்க்குழி மங்கைநல் லார்கள்
யோனிப் புற்றினுக் குழல்வதே யல்லா
லழக வென்றுனை யன்பொடு பாடி
யாடி லேனெனை யாள்வதுன் பரங்காண்
பழுதி லாரருட் பரைமகிழ்ந் துதவும்
பால னேதகர்ப் பரிமிசை யமருஞ்
செழுமை நல்லர ஞர்தரு மலைவாய்ச்
செந்தின் மேவிய தெய்வநா யகனே.

914. ஓடு கின்றன நாட்கள் மற்றவற்றோ
டோடு கின்றது பரிதி யுன்கழலை
நாடு கின்ற தமைய டைகின்ற
நாளு மெந்த நாளறி யேனே
வாடு மென்மன் வாட்டமு முணர்ந்தும்
வந்து தீர்த்திலை மாலினோ டயனும்
தேடு மாரணச் சிரத்தமர் பொருளே
செந்தின் மேவிய தெய்வ நாயகனே.

915. அறிவு றுத்து மெய்யடி யவர்சொல்லுக்
கமைந்து நிற்கிலா வசடனே னெஞ்சை
முறிசெய் துன்பத மாங்குவைத் தாயேன்
மூட னேனிலன் மொழிவதென் னேயோர்
குறிகு ணங்கடந் தோங்கிய பரமே
கொற்ற வேற்கு மரதே சிகனே
செறிம லர்த்தடஞ் சூழ்தரு மலைவாய்
செந்தின் மேவிய தெய்வநா யகனே.

916. பாடு கின்றிலன் பணிகில னின்னைப்
பார்க்க வெண்ணிலன் பாவியே னெனினும்
வாடு கின்றதைக் கண்டு நீயிரங்கா
வன்னெஞ் சென்றன் மேல்வைத்து வாழ்கின்றாய்
கூடு கின்றநல் லன்ப ருளோங்கும்
குமர தேவனே குணப்பெருங் குன்றே
சேட ரென்றுவந் தேத்துறூஉ மலைவாய்ச்
செந்தின் மேவிய தெய்வநா யகனே.

917. புவியி லைந்தெனப் புனலினி னான்காய்ப்
பொலன்கொள் வன்னியிற் புகறரு மூன்றாய்த்
தவறில் காலினி லிரண்டென வானிற்
றங்கு மொன்றெனச் சார்ந்த வத்தன்மை
தவமு ளோரலா லெம்ம னோர்காணுந்
தன்மை யன்றுகாண் சரவண னேகட்
செவியி னிள்வயி ரிப்பரி யூருஞ்
செந்தின் மேவிய தெய்வநா யகனே.

918. யாது வேண்டினுந் தருவ மிப்படையை
யென்று மேத்துறு மேழைகட் கென்றே
யோதி நின்ற வையாக லின்றனை
யோது நாயினேற் குகந்தருள் கண்டாய்
நாத முங்கடந் தோங்கிய நலனே
ஞான சத்திவே லண்ணுகைத் தலனே
சீத வார்பொழிற் றணிகையம் மானே
செந்தின் மேவிய தெய்வநா யகனே.

919. பத்தி செய்திடின் முத்தியென் றன்பர்
பகர வங்ஙனம் பகர்தலைக் கேட்டிங்
கத்த நின்றனை யடைந்தன னென்னை
யாள வில்லையே லருளினுக் கழகோ

முத்தி யென்றுநின் புகழ்சொலுமன்பர்
முறைக்கி றங்கிய முதல்வனே நடனந்
தித்தித் தோமென செயுமயி லூறுஞ்
செந்தின் மேவிய தெய்வநா யகனே.

## திருச்செந்தூர் குறியாராய்ச்சி
### விருத்தம்

920. திங்கட் சைவத்தி றைக்கருளுஞ்
செல்வப் பெருமான் செந்திலிடந்
தங்குங் குமரப் பெருமானென்
றனையே கட்டித் தழுவுவரோ
சங்க வளையார் கொடியவளெனத்
தானே கட்டித் தழுவாரோ
சங்கை தவிர்க்குங் குறநங்காய்
தனித்தோர் குறிநீ சாற்றடியே.

921. கயிலைப் பெருமா னருள்சுரக்குங்
கந்தப் பெருமான் கருதரிய
மயிலைப் பெருமான் கடற்செந்தில்
வரத ரென்னை மருவாரோ
மயிலை நிக்ரு மொயிலாடன்
மனங்கெட் டதென மருவாரோ
சயில முலையெங் குறநங்காய்
தனித்தோர் குறிநீ சாற்றடியே.

922. நீல மயின்மேல் வருங்கருணை
நிலவுஞ் செந்தி னின்மலனூர்
வாலை யருளு மழகரெனை
மருவி யணைய வருவாரோ
மாலை விளைக்கு மிவள்மிகவும்
வஞ்சி யெனவும் வாராரோ
தாலம் புகழுங் குறநங்காய்
தனித்தோர் குறிநீ சாற்றடியே.

923. தெய்வப் பிடியுங் குறப்பிடியுந்
தேடி யணையுஞ் சேந்தரருட்
சைவ நெறியார் தொழுஞ்செந்தில்
சார்வா ரென்னைச் சார்வாரோ

தையலி வளென்றன் மையெண்ணு
றவளென் றென்னைச் சாரரோ
சையமுலை யெங்குற நங்காய்
தனித்தோர் குறிநீ சாற்றடியே.

924. அன்னை யினுமிக் கருளுடையா
ளாறு முகனு ரலைவாயார்
பொன்னங் கடப்பந் தொங்கலினர்
பொறியி லென்னைப் புணர்வாரோ
புன்மை யறிவி னுள்ளனக்குப்
பொருந்தா ளென்று புணராரோ
தன்னை யனைய குறநங்காய்
தனித்தோர் குறிநீ சாற்றடியே.

925. நெற்றி விழியா ரருள்புரியு
நித்தர் செந்தி னிலவுபரி
சுத்தர் குருவென் றெனையணைந்து
சுகம்பெ றென்று சொல்வாரோ
சுற்றுஞ் சுழற்சொற் கடங்காட்குச்
சுகமே னென்று சொல்வாரோ
சத்தி யயிற்கட் குறநங்காய்
தனித்தோர் குறிநீ சாற்றடியே.

926. எல்லா முடையா ரெமையுடையா
ரிருமுத் தலையா ரெழிற்செந்தி
னல்லா ரெவையும் வல்லார்தந்
நலந்தா னெனக்கு நல்குவரோ
நல்லா னவனென் பாங்கறியா
ணமக்கே னென்று நல்காரோ
சல்லா பமொழிக் குறநங்காய்
தனித்தோர் குறிநீ சாற்றடியே.

927. அருண கிரியார்க் கருள்புரியு
மமலை மயிலை யாண்டவனர்
கருணை வடிவ ரெனைப்புணரக்
கருது மிடந்தான் கடற்செந்திற்
புரியோ வலது போரூரோ
புலப்ப டாது புலம்புகின்றேன்
தருகண் மலிநங் குறநங்காய்
தனித்தோர் குறிநீ சாற்றடியே.

### திருச்செந்தூர்
### தலைவியிரங்கல்
### அறுசீர்க்கழிநெடில் விருத்தம்

928. அந்தா மரையா ஞேடரியு
மறியாப் பதத்தா ரன்றருளுஞ்
சிந்தா மணிவாழ் செந்திலிடஞ்
சென்றேன் சென்ற திறனல்லால்
வந்தே யென்கை வளைகவர்ந்த
மாண்பே யன்றி மற்றறியேன்
செந்தேன் மொழியா யென்னடியெஞ்
சிறுமை யெவர்க்குஞ் செப்புவனே.

929. வேத முணராக் கழலுடையார்
விமலை மயிலை வித்தகனூர்
தீத ரவர்வாழ் செந்திலிடஞ்
சென்றேன் சென்ற திறனல்லால்
ஏது மறியேற் கொருமுத்த
மிணங்கி யன்பா யீந்ததிலை
சீதக் குழலா யென்னடியென்
சிறுமை யெவர்க்குச் செப்புவனே.

930. மூவர் புகழு முக்கணுடை
முதல்வ ரருளு முருகேசர்
சேவற் கொடியார் செந்திலிடஞ்
சென்றேன் சென்ற திறனல்லால்
வாவென் றென்னை யருகழைத்து
மஞ்சத் திருத்தி மருவவிலை
தேவ ருலகப் பாவா யென்
சிறுமை யெவர்க்குச் செப்புவனே.

931. நல்லத் தமர்வூர் செருத்தணிகை
நரகத் தார் நங்க ளுதர்திருத்
தில்லைக் கிறைவாழ் செந்திலிடஞ்
சென்றேன் சென்ற திறனல்லால்
அல்லல் களைவா ரென்னையவ
ரன்பா யணைவா ரல்லரடி
செல்வக் குறப்பெண் பாவாயென்
சிறுமை யெவர்க்குச் செப்புவனே.

932. வானோர் பணியுஞ் சாமிமலை
வரதர் தணிகை வரைமேய
சேனு பதிவாழ் செந்திலிடஞ்
சென்றேன் சென்ற திறனல்லால்
ஊனே குழைய மனங்குழைய
வுகந்து சுகந்தா னுதவவில்லை
தேனூர் மொழியா யென்னடியென்
சிறுமை யெவர்க்குச் செப்புவனே.

933. நந்தா வளஞ்சேர் சோலைமலை
நாதர் தணிகை நகர்த்தமருஞ்
சிந்தா மணிவாழ் செந்திலிடஞ்
சென்றேன் சென்ற திறனல்லால்
பந்தார் முலைமேற் றன்கரத்தைப்
பரிவாய் வைக்கப் பார்த்தறியேன்
செந்தா மரைக்கண் பாவாயென்
சிறுமை யெவர்க்குச் செப்புவனே.

934. கன்னன் மொழியார் மனமொழியாற்
காண வறியார் கதிதருவார்
தென்னர் வணங்குஞ் செந்திலிடஞ்
சென்றேன் சென்ற திறனல்லால்
என்னை மறந்தேன் கலைதுறந்தே
னின்ப மீந்தா ரில்லையடி
தென்னங் குரும்பை முலையாயென்
சிறுமை யெவர்க்குச் செப்புவனே.

935. நல்லா ரல்லார் வழுத்தறியார்
நாயே னிருகண் ணன்மணியாந்
தில்லா புரியார் செந்திலிடஞ்
சென்றேன் சென்ற திறனல்லால்
கல்லா முலைமேற் றன்கரத்தை
கனிவாய் வைக்கக் கண்டறியேன்
செல்லார் குழலா யென்னடியென்
சிறுமை யெவர்க்குச் செப்புவனே.

936. நாலா ரணத்தார் திருத்தணிகை
நகத்தார் நங்க ணாயகனார்
சீலா கமத்தார் செந்திலிடஞ்
சென்றேன் சென்ற திறனல்லால்

மாலா யடைந்த வென்னையவர்
வாவென் றழைக்க வாழ்ந்தறியேன்
சேலார் விழியா யென்னடியென்
சிறுமை யெவர்க்குச் செப்புவனே.

937. பண்ணு லமைந்த பாடலினர்
பழைய காஞ்சிப் பதியமர்வார்
சென்னுர் சிகரிச் செந்திலிடஞ்
சென்றேன் சென்ற திறனல்லால்
கண்ணோ டதனன் மணிபோலுங்
கலந்து வாழக் கண்டறியேன்
செண்டார் முலையா யென்னடியென்
சிறுமை யெவர்க்குச் செப்புவனே.

## திருச்செந்தூர் வருக்கமாலை

## எழுசீர்க்கழிநெடில் விருத்தம்

938. கமலசம் பவனுங் கரிநெடு மாலுங்
கண்ணொரு மூன்றுடை யானு
மமரும் புருகூ தனுமுனி கணங்க
ளனைவருந் துதிசெயு நிபுண
மமரினுற் சிறியேன் மயங்கினில் லாதுன்
மலர்ப்பதத் தியானமே தருவாய்
சமரமா புரிவா ழமுதமே செந்தூர்ச்
சரவண கருணையங் கடலே.

939. சத்தனீ யுயிர்தான் சத்தசத் தாகுந்
தடைமல மசத்தவற் றுழியே
மெய்த்த நற்பரம நோக்கெய் துதி
யபரநோக்கிலை விபுநிறை யுறுவாய்
சத்திய மிஃதென் றென்னுளத் துணர்த்தித்
தலைமிசை யடிமலர் புனைவோய்
தத்து வாதீ தனேதிருச் செந்தூர்ச்
சரவண கருணையங் கடலே.

940. தத்துவ மசிமா வாக்கிய மதனிற்
றத்துவ மென்னலிங் கதுநீ
மற்றைய வசியோ வாயி னுயென
வென்மன மிறந்திட வருள்புரியோய்

முத்தமிழ்க் கும்ப முனிவனு நறிய
முண்டகத் தவனு நின்றேத்துஞ்
சத்திவேற் கரனே கடற்கரைச் செந்தூர்ச்
சரவணு கருணையங் கடலே.

941. நந்தியே முதலாங் கணத்தவர் தொழவு
நாரி யென்கண் மணியெனவு
மிந்தணி சடிலற் கருண்மொழி யருளு
மியலினைப் புலையனே வறிவேன்
நந்துலாம் பொழில்சூழ் தருக்கதிர் காம
நண்ணுமா ரமுதவா ரிதியே
சந்தனப் பொதிகைச் சாரலஞ் செந்தூர்ச்
சரவணு கருணையங் கடலே.

942. பந்தன முலையா ரின்பெனுஞ் சுழலாற்
பரவசப் பட்டழி வேனுக்
கந்தமெய்ஞ் ஞான நிலையுணர்த் திலையே
லையநா னுய்கிலேன் கண்டாய்
சந்திர மௌலித னையனே கங்கை
தனதுள மகிழுமற் புதனே
தந்திமா முகனுக் கிளையவா செந்தூர்ச்
சரவணு கருணையங் கடலே.

943. மந்தர வரைபோன் மஞ்ஞைமே லமர்ந்து
மந்திர நான்மறை யாளர்
மந்திரங் களிறுற் றெழுதெழ வருநின்
மகிமையை யாரறி பவரே
குந்திமா துளங்கொண் மருகனுக் கினிய
குலமரு காதணி முருகா
தந்திக டிரியுந் தடவரைச் செந்தூர்ச்
சரவணு கருணையங் கடலே.

944. வட்டன முலையார் நெட்டயில் விழியால்
மனமுத லழிதரு வேனுக்
கெட்டொணு மோன நிராமய சுகத்தை
யென்றுநீ யருள்வையோ தெரியேன்
துட்ட சூரர்கு லங்களைந் தருள்வைவேற்
சுப்பிர மணியனே குகனே
சட்டியிற் கொக்கை யவித்திடுஞ் செந்தூர்ச்
சரவணு கருணையங் கடலே.

945. யவனர் துருக்க ரொட்டியர் சீன
ரீழர் வங்காளர் விராட
ரவந்தியர் மகதர் மச்சர் மராட
ரங்கர் களிங்கர் காம்போசர்
கவின்மலை யாளர் தமிழர் கூர்ச்சர
ரெனுநா டவர்தத் தமக்கிறைநீ
தவந்தனை யுடையார் நனிதொழுஞ் செந்தூர்ச்
சரவண கருணையங் கடலே.

946. ஞமன்றிசை முன்றிசைக்கிறையவனை
நவிலுநீபு லிங்கமா வதனன்
ஞெமிலி யர்க்கென் றன்றேன் மிசையமரு
நிலைமையை யுணர்ந்தன னடியேன்
உமையொரு பாகத் தும்பரான் கனிந்த
யொருவனே யருமறைப் பொருளே
சமய மாறினு நின்றெளிதருஞ் செந்தூர்ச்
சரவண கருணையங் கடலே.

## திருச்செந்தூர் சிலதா சம்வாதம்

### கண்ணிகள்

947. கற்புக் கரசியாம் பெண்ணணங்கே நின்றன்
கற்பை யழித்தவ ராரேடி
கற்பக நாட்டை யமரருக் கன்றருள்
கந்தனடி செந்தி லந்தையடி
தண்மதி யொன்று முகத்தமுதே யின்றுன்
றன்னை மணந்தவ ராரேடி
விண்புகழ் செந்திலின் கண்ணமர்ந் தோங்கும்
விசாகனடி யெங்குகே சனடி
கஞ்சமுகத் தென்றன் கண்மணி யேநினைக்
கட்டித் தழுவிய தாரேடி
துஞ்ச லெனக்குத் தவிர்த்த ருளுஞ் செந்திற்
றூயனடி காங்கே யனடி
செந்திரு வன்னவென் பெண்கொடியே யின்றுன்
செங்கை பிடித்தவ ராரேடி
யந்தண் செந்திற் பதியமர்ந் தோங்குமென்
னையனடி முருகை யனடி
அன்னந டையுடைப் பெண்ணமு தேநின்னை
யணைந்து சென்றவ ராரேடி

தேன்மலி நீபத் தொடைபுனையுஞ் செந்திற்
சேந்தனடி வள்ளி காந்தனடி
கன்னலினு மின்சொன் மாமயிலே யின்றுன்
கன்னி யழித்தவ ராரேடி
மன்னுங்கடற் செந்தி லம்பதி மேவும்
வரதனடி யெங்கு ரவனடி
மஞ்சவி ழுங்குழன் மாதர சேயின்னே
வலிதிற் புணர்ந்தவ ராரேடி
செஞ்சொல் புகழுங் கடற் செந்தில் வாழ்தேவ
சிங்கமடி யெழில்தங் கமடி
இன்னே நிகர்மொழிப் பொற்கொடி யேநின்றன்
கேண்மை விரும்பிய தாரேடி
வள்ளி தனக்காய்த் தினைப்புனத் தேகிய
வள்ளலடி செந்திற் கள்ளனடி
முத்த நகையுடைப் பெண்குயி லேயொரு
முத்தந் தந்தேகிய தாரேடி
சித்தர் வழுத்துங் கடற்செந்தின் மேவிய
செட்டியடி தங்கக் கட்டியடி.

## திருச்செந்தூர் பவனிகண்டிரங்கல்

### அறுசீர்க்கழிநெடில்விருத்தம்

948. உந்தி வந்தோ ரோடுவண
மூர்ந்தோர் புகழு மோங்கலுடைச்
செந்திற் பெருமா னெம்பெருமான்
செல்வப் பெருமாள் திருப்பவனி
நந்த லில்லா வகமகிழ்வா
னுயேன் சென்று கண்டலது
சந்த மொழியாய் கேளடியென்
றலையின் மலர்ப்பூச் சூடேனே.

949. முத்தங் கொழிக்குங் கடற்செந்தின்
முருகப் பெருமா னெம்பெருமான்
சித்தர் வழுத்த வருள்சுரக்குஞ்
செட்டிப் பெருமான் றிருப்பவனி
சித்த மயலற் றிற்றைதினஞ்
சென்று தெரிசித் தாலலது
தத்தை மொழியாய் கேளடிநான்
றண்ணீர்ப் பருக மாட்டேனே.

950. அங்கைக் கனியாங் கடற்செந்தா
ரமுதப் பெருமா னவுணர்கெடச்
செங்கைத் தலத்தில் வேலேந்துஞ்
சேந்தப் பெருமான் றிருப்பவனி
யெங்கு ளாரு நனிநெருங்க
வின்று சென்று கண்டலது
சங்க வளையாய் கேளடிநான்
சாந்த மணிய மாட்டேனே.

951. முன்னங் கடலைக் குடித்தார்க்கு
முனனு மனைத்து மீந்தருளுந்
தென்னர் பெருமான் செந்தில்வருந்
தெய்வப் பெருமான் றிருப்பவனி
யென்னை மயக்கு மனமயக்கற்
றிருக்க விங்கு கண்டலதிங்
கன்ன நடையாய் கேளடிநா
னன்ன முண்ண மாட்டேனே.

952. கலையான் வணங்க வருள்சுரக்குங்
கந்தப் பெருமான் கருப்புநெடுஞ்
சிலையான் வெஃகும் வனப்புடைய
செந்திற் பெருமான் றிருப்பவனி
யலையா மனத்தை யகத்தடக்கி
யன்பாய்ச் சென்று கண்டலது
கலைநேர் விழியாய் கேளடிநான்
கண்க ளுறக்கங் கொள்ளேனே.

953. கஞ்சற் புடைத்த காத்தொடுவேற்
காளைப் பெருமான் கடவுளருட்
செஞ்சொல் வனைவார்க் கருள்சுரக்குஞ்
செந்திற் பெருமான் றிருப்பவனி
யஞ்சு பொறிக ளனியடங்கி
யறிவா யறிந்து கண்டலது
பஞ்சி னடியாய் கேளடிநான்
பாட லாடல் பயிலேனே.

954. பொய்யா மொழியார் தமைப்புகழும்
பொறியஞ் சிறைதோ கைப்பெருமான்
செய்யா ளுறையுந் திருச்செந்தூர்த்
தேவர் பெருமான் றிருவழகை

னையா மனக்கண் ணெக்குருக
நாயே னடைந்து கண்டலதிங்
கையா ரளகப் பசுங்கிளிகே
ளடைகா யருந்த மாட்டேனே.

955. கற்றுத் தெளிந்தோர் வழுத்துமலர்க்
கடம்பப் பெருமான் கடற்செந்திற்
சித்தப் பெருமான் குகப்பெருமான்
செவ்வேட் பெருமான் றிருப்பவனி
பத்திக் கடலின் மிகவாழ்ந்து
பரிந்து சென்று பார்த்தலது
முத்த நகையாய் கேளடிநான்
முகிழ்மென் கூந்தன் முடியேனே.

956. செங்கண் மாலுங் கமலனுமே
தேட வரிதாஞ் செந்திலிடங்
தங்க மயின்மேல் வீதிவருஞ்
சைவப் பெருமான் றிருப்பவனி
யங்கங் குலுங்க முலைகுலுங்க
வணிக ளிலங்கக் கண்டலதிங்
கங்க ணுடையாய் கேளடிநா
ளுடை யுடுக்க மாட்டேனே.

957. சயிலப் பெருமான் றந்தருளுந்
தனையை மகிழுஞ் சரவணனை
மயிலைப் பெருமான் கடற்செந்தில்
வள்ளற் பெருமான் வரும்பவனி
குயிலை யனமென் மொழிமடவார்க்
குழாங்க ளொடுநான் கண்டலதிங்
கயிலை நிகர்த்த விழியாய்கே
ளணியைப் புனைய மாட்டேனே.

958. விந்த மடக்குங் குறுமுனிவன்
வேண்டும் பெருமான் வியன்செந்தில்
வந்த பெருமான் குஞ்சரிக்கு
வாய்ந்த பெருமான் வரும்பவனி
சிந்தை மகிழத் தினந்தினமுஞ்
சென்று தெரிசித்தா லலது
பந்து முலையாய் கேளடிநான்
பசும்பொ னாச லாடேனே.

959. இந்து முடிக்குஞ் சடைப்பெருமா
னீன்ற பெருமா னெம்பெருமான்
செந்திற் பெருமாஞ் சிகியூருஞ்
சேந்தப் பெருமான் றிருவழகை
முந்தி கனவிற் கண்டதுபோன்
முன்னே சென்று கண்டலது
கந்தக் குழலாய் கேளடிநான்
கழங்கு பயில மாட்டேனே.

960. மங்கைப் பெருமான் மலையரையன்
மருகப் பெருமான் வானெழுந்த
கங்கைப் பெருமான் றருஞ்செந்தூர்க்
கந்தப் பெருமான் காட்சிதனைப்
புன்கண் முலையும் பூரிப்பப்
புகழ்ந்து மகிழ்ந்து கண்டலது
நங்க ணனையாய் கேளடிநா
னன்னீ ராட மாட்டேனே.

961. வட்ட மயிலி னிதமருவும்
வரதப் பெருமான் மயிற்செந்திற்
சிட்டர் பெருமான் காங்கேயச்
செட்டிப் பேருமான் றிருவழகை
யிட்ட மிகக்கொண் டெனைமறந்தங்
கின்ப முறவே கண்டலது
பட்ட நுதலாய் கேளடிநான்
பந்து விளையாட் டயிலேனே.

962. தென்னர் பெருமான் சிவபெருமான்
செல்லப் பெருமான் திருச்செந்தூர்
மன்னர் பெருமான் வள்ளிமண
வாளப் பெருமான் வடிவழகை
யென்னை யனையா ரெனையேச
வின்று சென்று கண்டலதிங்
கின்னல் விளைக்கும் விழியாய்கே
ளின்சொ லினிநா னியம்பேனே.

963. தூங்கன் முகத்தென் பெருமான்பின்
றோன்றும் பெருமான் றிருச்செந்தில்
வோங்குந் திண்டோட் குறப்பெருமான்

வடிவேற் பெருமான் வரும்பவனி
பாங்கி மார்க ணனிநெருங்கப்
பரிந்து சென்று பார்த்தலதிங்
கோங்கன் முலையாய் கேளடிநா
னுற்றா ரோடு முறையேனே.

964. வன்னி விழியெம் பெருமானார்
மகிழும் பெருமான் மறைநான்கும்
பன்னும் பெருமான் கடற்செந்திற்
பதிவாழ் பெருமான் பவனிதனை
யுன்னு முணர்வோ டிறக்கமுநீத்
துற்றங் கடியேன் கண்டலது
பின்னை யனைய பொற்கொடிகேள்
பெற்றா ளோடும் பேசேனே.

பல சந்த மாலை

விருத்தம்

965. கங்கைநகு கந்தும்பை கூவிளைக டுக்கையணி
கலைமதியி லங்கு சடையுங்
கனல்விளங் குங்குழக் கணுமன்ப ரிடைவீறு
கருணைச முத்திர விழியுந்
தங்குமா லம்பூக பாலஞ்சூ லமபையவர
தங்கொண்ட செங்கை யுமலற்
றவிசிலுறை மாதர்மங் கலநாணு ணஞ்சிடாத்
தண்மைபெற நஞ்சு வைத்த
பொங்களமு மீன்கண்ணு மாமையின் கவசமும்
பொருவில் வாமன னங்கமும்
புகல்வரா கக்கொம்பு மணிபூணும் நாகரி
பொற்றோ லுடுத்ததேக
மங்கல மளிக்குநின் பதமலரும் யான்கண்டு
வாழ்வுபெற வந்த ருளுவாய்
வனம்புளுறை மாகந்த புரிக்குணித மாரெந்தை
வயித்தி யமகா லிங்கமே.

966. சக்கரஞ் சதுரம்பி றைக்கோண முக்கோண
சட்கோண வட்ட மீதிற்
சைவநா யகிசகல தெய்வநா யகியெனுந்
தையல்நா யகிதன் னுடன்

......ந்தபன் னேரென்ன யிருவரும்
மேவுஞ்ச தன்னிய வடிவாம்
வேடிக்கை யைக்காணு மின்பவெள் ளத்தில்யான்
மேவுநா ளுதவ வருவாய்
பக்கு(வர்க்காய்ச்)சாட்சி வன்னிகிணை றுஞ்சொல்வோர்
பைந்தொடியின் மனது மகிழும்
படிசெய்து பொய்யாத மொழியனே யிந்திரன்
பழியைத் தவிர்த்த சிவனே
மைக்கார கண்டனே சகலபுவ னேசனே
மாதுரிய மான வடிவே
வனப்புளுறை மாகந்த புரிக்குணித மாரெந்தை
வயித்தி யமகா லிங்கமே.

967. வீரன்முன் னெடியடா பினிசாகி னிசத்திர
வித்தியாப் பிரபல மோகினி
விருதுராட் சதனுரு மந்திசந் தியில்வந்த
மின்னுரை யேம யக்கும்
பாரப்பொய் குறளிகுட் டிச்சாத்தன் வாய்க்கொள்ளி
பலகுண் டணிப்பேய் களும்
பகருமுன் சன்னதி நினைக்குமுன் கதிர்கண்ட
பனியாய்ப் பறந்து விடுமே
கோரமுட னர்ச்சுனன் மேம்மூக ராக்கதன்
கோலமாய் வந்தெ திர்க்க
முனிசிலை கையில்கொண்டு வேடுவக் கோலநீ
கொண்டுவந் தவனை வாட்டி
வார்சிலையி னுல்பார்த் திபன்கையி லடிபட்டு
வளர்பாசு பதம ளித்தாய்
வனப்புளுறை மாகந்த புரிக்குணித மாரெந்தை
வைத்தி யமகா லிங்கமே.

### தென்கயிலைத் தியாகனுரைப் பாடியது
### விருத்தம்

968. ஒருமாடுங் கிடையாமல் மச்சினனூர் புவிமுழுதும்
உழுதே யுண்டீர்
நரைமாடொன் றிருந்திடவு முழுதுண்ண மாட்டாமல்
நஞ்சை யுண்டீர்
இருநாழி நெல்லுக்கா யிரண்டுபிள்ளைக் குந்தாய்க்கு
மீர்ந்தீ ரிப்போ
திருநாளு முண்டாச்சோ தென்கயிலைப் பதிவாழுந்
தியாக னாரே,

## முருகன்

### [இதுவுமது]

969\. மனதொருமை யாலுனது மலைகண்ட பேர்தனது
வல்வினைய னைத்தும் விடுவார்
வளருநின் னாலயங் கண்டவுட னளகையின்
வாழ்வுநிகர் வாழ்வு பெறுவார்
முனமருவு முனதுங் கையிலாட லேயுடல்
முற்றும்பொன் வர்ண முறுவார்
மொய்யநின் பாதமலர் கண்டபேர் கள்பெறு
முத்தியை யுரைக்க வசமோ
புனிதமுறு தெய்வானை மாதுக்கு ரைத்தமொழி
பொய்யா தமொழி யாகவே
புவனத்தில் வள்ளிநா யகிவதுவை செய்தபரி
பூர ணசெக காரண
வனசமுக னருணகிரி கீரன்(வ)ழிப் பொலென்
மனதிலெண் ணியத ருளுவாய்
மருவுதண் டலைநிலவு யிரவிமண் டலமளவு
மயிலையங் கிரிமு ருகனே.

## மணக்குளத்துப் பிள்ளையார் பேரில் பாடியது

### விருத்தம்

970\. சந்திர சடாதர னேகன னேகன
தத்துவாதி தனராதரம்
சேயலர் உயிரர் சிதவே தண்டந்
தனிலொ ருநாள்
சுந்தர நவமணி மண்டப மேந்துஞ்சுவர்
வானத்தெழுந்த தென்றுஞ்
சித்திரை யானை யிரண்டு சுயம்பெறு
மானை களாய்
விந்தை யுடன்வி ளையாடப் பார்வதி
மெய்யுள மகிழ்வாக
வேதாந் தத்தொளிர் பிரணவ முருகா
மேவிய கடல்களுறை
வந்தனை செய்பவர் சந்ததம் வாழ்க
வரந்தரு கற்பகமே
மதிக்குள் மிகும்புது வைக்குள் விளங்கு
மணக்குள வைங்கரனே.

### மயிலம் சுப்பிரமணிய சுவாமி பேரில் பாடியது

### விருத்தம்

971. சங்கைப்பில் லிக்குணம் பிரமராட் சதிகிரக
சனிய னேழரை நாடனுஞ்
சன்னிகண் டப்பிளவை பெருவயறு காமாலை
தலைவலியொ டீளை காச
மங்கமதி லேவெட்டை மூலரோ கத்தினு
மரையாப்பு ப்வுத்திர முடனே
யானநா வாயிரத் தன்னூறு வல்வினையு
மண்டா மல்ரட் சிமையா
துங்கமது தன்னைக் கராவது பிடித்திடச்
சுவாமியென் றபைய மிடவே
துரிதமுட ஞழிவிட் டொருகரா வின்முடி
துணித்தருள் முகுந்தன் மருகா
துங்கமத யானைமுக னுக்கிளைய கந்தனே
சுரர்கள் தன்குல நாயகா
சுந்தரச வுந்தரா மயிலையங் கிரிமேவு
சுப்பிர மணியக் கடவுளே.

972. உலகத்தை யிடைக்ண்ட மயிடசங் கரிதந்தை
யுனையி கழ்ந்திடும் வேள்வியால்
உத்தண்ட மாகவொரு க்ஷணமாத்தி ரத்திலழி
யுற்றுநரி காளி யுணவுங்
கொலைகண்ட வன்றனை வென்றநீயே யன்று
கொடியசூ ரர்கள் மாளவே.
குமரவே லைப்பயின் றமரைவென் றமரரிட
குறைதவிர்த் திடுமாயினி
பலமுத்த கம்பையில் தபசுகந்திடு வல்லி
பிரண வத்தி லுறைவல்லியே
பேருல கெலாம்பெற்ற தாயான வல்லியே
பேய்பிள்ளை யான வடியேன்
புலையுத்த தொழிலமற் பொருள்நற்றி னேநல்ல
புத்திதந் தருளு மம்மா
பொய்யாத நகர்தனில் மெய்யாக வந்ததொரு
பொய்யா தமொழி வல்லியே.

### சிதம்பர யீசுவரன் பேரில் பதம்

973. அரகரா சிவசிவ நமசிவாயா—எங்கள்
அம்மை சிவகாமி சவுந்தரிநேயா— (அரகரா)

பரவும் தொண்டர்கட் கன்பு புரியுங்காயா—என்றும்
பதம்பெறு சமயத்தில் நிதம்பதி யாயிருந்து
யிதம்பெற விளையாடும் சிதம்பரதேவா— (அரகரா)

தினமும்நின் பாதசேர்வை சேவிக்க வேணும்—அப்போ
தெரிசனை மோட்ச பலன்எல்லாங் காணும்
நினவெல்லாம் சாமி ரூபமாகத் தோணும்—எங்கும்
நித்தம்பல தேவதைகள் சுத்தும்பல யிருந்தாலும்
வெத்தம்பல மல்லாதொரு சித்தம்பல மாமோ (அரகரா)

யாவர்க்கு முயிர்க்குயி ராயிருந் தாயே—பூர்வ
பாக்கியமா யெங்கும் நிறைந்தாயே
கருணைமுகத் தரசிக் கனநகையென நடமிடு
கருடமஞ்சினு வரும்வரு மரகத அரனே— (அரகரா)

பாதிமதி யணிந்த பரஞ்சோதி—உண்மை
பகரும் தொண்டருக் கெல்லாம் நீயேகெதி
ஆதியுமை பாதியாக நின்ற வனாதி—மிக்க
அம்பர மான திகம்பர ரூபாப
ரம்பர மாகிய சிதம்பர தேவா— (அரகரா)

974. தந்தானத்தின தான தானனு தானதான
தந்தானத்தின தான தானனு
தெய்வ மலைக்குற வஞ்சி தோன்றினாள்—இங்கிதமாக
அய்வருக்கும் பொருள் ஆகின்றவர்
அன்புடன் நிறையும் பாகை நாட்டினில்— (தந்தானத்)

காலில் விருது தண்டை பூட்டியே—யிரதனூற்கிடை
கம்பூங் களபத் திவதம் தீட்டியே
வாலிப ருடன் மனதை வாட்டியே—பொய்யா மொழியீசர்
வரையில் மோகன மாது சாட்டியே
வம்பர விமமுக் கொம்பினி லணிகள்
கொம்ப வுமேவெகு சம்பிர—மாக (தந்தானத்)

கன்ன சிலையை வளைத்து மிஞ்சவே—யீற்பொருங்கை
காம ராச னும்கண்டு கெஞ்சவே
வன்னக் கிளிபோல் வார்த்தை கொஞ்சவே
வரையில் மோகன மாது சாட்டியே
வம்பர அளக கொம்பினில் அணிகள்
கொம்பவுமே வெகு சம்பிரமமுமாக (தந்தானத்)

இரத மங்கையர் தனிலும் பூணவே—நடையுமுடையு
மிடையும் வடிவு மாகக் காணவே
பரவு முனிவர் சரணம் பூணவே—பொய்யாத தற்பரன்
பாவைக்கு சொல்குறி மனதில் ஊணவே
பார முலைமேல் ஆரை முலைகள்
ஆர பார ஒய்யார மாக— (தந்தானத்

## இராமலிங்கர்பேரில் வண்ணப்பாட்டு

பகவதி நித்திய கல்லியாணி சங்கரி
பயிரவி நிக்கிரக காளி யந்தரி
உலகு கிடுகிடு எனமயிட முடியினிடை
நட னமிடு கெவுரி நாக
பூஷணி சரசுவதி லட்சுமி தேவிகும்
பிடுமிரு சரணத் திரிசூலி கண்டகி
பதறி யலகைசில கதறி யுனையுருகி
லுதறி யெறியு மொருபூத வாகினி
பருவத வர்த்தனி யாதி சுந்தரி
யனுபவி யுத்தமி நாக கங்கணி
யருண வெயிலொழுகு கருணை வடிவழகி
கருணை திருவுருவ மான காரணி
தேவிலுறை பங்கிலுறை நாதனார்.
பக்கு நடத்திய காலன் நெஞ்சக
முறிய வுதைத்திடு பாத பங்கையர்
மதனு மவனுடைய சிலையும் வடிவழகு
மெரிய வழல்விசறு பால லோசனர்
அமுது பிறக்கு முன்னே கருங்கடல்
வயறு கிழித்தெழு மால முண்டனர்
கனகர் முதலினர்கள் பரவ வடதடவி
நிழலி லுடையு மொருஞான தேசிகர்
பவள விதழ்க்கு வெண்மூரல் கொண்டுமுன்
னடையவர் முப்புர நீறு கண்டவர்
உடைய கமலநடுவில் மூழ்கி அழகிய
சன்னதியில் வருகுவர் செய்பாவ மோசனர்
வாச முகிழ்கொன் றைமலர் மாலையார்.

## சுப்பிரமணியர் பேரில்பாடியது

### விருத்தம்

975\. பரிதினிக ரிலகுமுன திருமூன்று முடியழகும்
பங்கய முகத்தி னழகும்

பன்னிரு புயத்தழகு நவரெத்தின மிட்டிழை
பதக்கமணி மார்பி னழகும்
அரியபொற் றண்டைச் சதங்கை விசைதரு
மகிமையடி யிணையி னழகும்
மடியேன னுதினக் தெரிசித்து மென்மேல்
படைக்கனின் னருள்புரிந் தெனை யாளுவாய்
திருமாலு மயனுமிரு வருமாக வாராய்ந்து
தேடியுங் காண வரிதா
சீரடியு முடியுவரு ணேசர் தந்ததொரு
செல்வக் குமார வடிவே
மருவளர் செழுங்கமல தடமிட மமர்ந்துமிக
மகிமை யுடனே விளங்கும்
மயிலையங் கிரிமே வுமுருகசர வணபவா
மயில்வா கனக்க டவுளே.

976\. உனதுகிரி யைக்கண்டு தெரிசித்து வலமாகி
யுன்னடி வணங்கி யன்பா
யுலகிலதி யோகிய பொருளென விளங்குமோ
ரிருமூன் றெழுத்து றுதியாய்
மனதினி னிருத்திரவு பகலுமனு நிதமோத
மகிமையைப் பெறவ றிவிலா
மைந்த னெனை யாள்வதுன் பாரமே யன்றியிவ்
வையகத் தொருவ ருண்டோ
தினவரை யிழந்துநின் றேனொடு யிசைந்துநா
திக்திக்க வுண்ட விவரஞ்
சேர்ந்து விளையாடிவரு வள்ளிதெய் வானைதன்
சிந்தைக் கிசைந்த நேயா
வனசர ரைவிட்ட சுரர்பொடி பட செயித்ததிரு
மால்மருகனே நட மணியாய்
மயிலையங் கிரிமேவு முருகசர வணபவா
மயில்வா கனக்க டவுளே.

977\. குதிரைக்கு நகுலன் அகத்தியர்
குணகனென் சந்திர சோமன்
குண்ணல மதனில்வாழ் செவியு மந்தகுண
கோவிந்தன் அச்சுதன் முதலாய்
எதிரிட்ட வன்னியர்கள் வேசியர் புயசங்கன்
ராயரா வுத்தண்ட முண்டன்
ரகுநாத திருபாத மறவாத அச்சுதன்
ரகுவான் மீகி தயவில்

மதுரைக்கு உள்ளான கொடிமன்னர்
துரைகளும் வலிசை வாங்கும்
வரதொட்டி விருதொட்டி கொங்குசா ரான்புரம்
மலையா ளமேபி டிக்கும்
செதிராக் கனக்காடு கன்னிகா குமரியும்
தேசமும் மதத்த ளிக்கும்
திருச்சிராப் பள்ளியும் கோட்டையும் கொம்பையும்
சேர்த்தாள எழுந்திடுமே.

## சிதம்பர யீசுவரன் பேரில் பாடியது
## கழிநெடில் விருத்தம்

978. தூக்கிய தாளும் சாற்றிய நீறும்
சுடர்மணிக் கிரண கிங்கிணியும்
துய்யபட் டுடையுஞ் செய்யபொற் சிலையும்பூந்
தோளணிப் பூஷணத் தி னழகும்
வாக்குள ........நோக்குள விழியும்
வன்மைசேர் மவு......க் கரமும்
மதிக்குல மிகுத்த திருச்சடை யழகும்
மறப்பனோ பிறப்பதா யிடினும்
நாற்குல மடந்தை சீர்க்குழங் கனலியாழ்
.........நமசிவாய மனுமொழி முழங்க
தேக்கிய புகழ்சேர் வளம்பெறு தெய்வ
தேவருங் காற்கிய புலியர்
தில்லையம் பலத்தே திருநடம் புரியும்
தேவனே சிதம்பர யீசுவரனே.

979. குளுந்த புன்சிரிப்பை புறத்துளோ ரறிவர்
கூத்தனே பகைவ னறிவன்
கூறுகிற வறுமை பாகர்க் கோணறிவன்
குலவுநீண் பெருமையா ரறிவார்
வளைந்த பொற்சிலை வென்கண்ண முலறிவேன்
மாலய னெடுமுடி யறியா
மன்றுளோ ருனது திருவுளச் செயலை
வழிபட வழுத்துமா றுளதோ
கிளந்தனர் கனக சபையினிற் பாத
சிததுந் துபியிசை முழங்க
கெவுரி கொண்ட ளிப்ப தெங்கணும்
வணங்க மாத வத்தால்

தெளிந்தமைப்புலியும் பதஞ்சலி முனியும்
சித்தர்வித் தியாதரர் காந்தருவர்
தேவதும்பு ரர்கள் திருநடம் புரியும்
தேவனே சிதம்பர யீசுவரனே.

980. மாதமாப் பொருளைப் பூமியைக் கிளையை
மக்களை மனிதரை மாட்டை
மதகரி பரியை கவிகையை சிவிகையை
வளம்பெறு வாழ்வையே கருதிப்
போதினைக் கழித்து வீணிலே யுழலும்
புல்லர்பா லல்ல வேமருவி
பூதலார் பறிக்க தன்னிலே மறுகும்
பொய்யனு னுய்யுமா றுளதோ
வேதனை ச்சிரங்க ளொன்றிலொன் றுத்த
வேந்தனே சேந்த திற்றதிலே
வெள்ளருக் கிதழி தாக்கிய தும்பை
வில்வமா மல்லிகை யரவுஞ்
சீதளக் கிரணக் கலைமதி முடித்த
சித்தனே யத்தனே சிவனே
தில்லையம் பலத்தே திருநடம் புரியும்
தேவனே சிதம்பர யீசுவரனே.

நம்மாழ்வார் துதி

981. கூடலூ ரானைக்கா சினி வேந்தனைக்
குழந்தை மாயனை மூகூர் முகுந்தனை
பாட கத்துறை யெந்தையம் பதியைக்
கிடந்த தடங்கடல் வண்ணனை
நீடுவார் மங்கை வாணனை வைத்த
மாநிதியைக் குழைக் காதரை
பாட வல்ல நம்மாழ்வார் பராங்குசர்
பாதமே நமக் காதாரங் காணுமே.

[இதுவுமது]

982. தென்னஞ் சோலைத் திகழ்குறுங் கேசனைத்
திருவனந்தப் பதியானை வாவியி
லன்னஞ்சூழ் திருவாட் டாத்து மாயனை
ஆதிநாதனை வேங்கிட வர்ணனைச்
சொன்னந் தோயந்த மதில்சூ ழாங்கனைச்
சோலை மாமலை மாலலங் காரனைப்
பன்னுஞ் செந்தமிழ்ப் பாடும் பராங்குசர்
பாதமேநமக் காதாரங் காணுமே.

### மாற்றுமருந்து

#### வெண்பா

983. மண்டலத்தில் நானோர் மருத்துவரைப் பின்செல்லேன்
பண்டிதருக் கிச்சைசொல்லிப் பார்க்கிலேன்—எண் [டிசையும்
வேற்றுமருந் தொன்றறியேன் வேங்கடவா வென்பிணிக்கு
மாற்றுமருந் துன்றிருநா மம்.

### மாயை

#### விருத்தம்

984. கோசிகர் பிருகு வசிஷ்டர் வால்மீகர்
குறுமுனி வியாசர் பராசர்
காசிபர் முதலாய் சருகுநீர் வாயுவு
கந்தமூ லாதிகள் பொசித்தும்
தேசுலா மடவார் போகம்விட் டகலார்
சென்ன லோகமுஞ் சிதையார்
மாசறு நெய்பா லருந்திடும் நரரோ
மங்கையர் மயலொழிப் பவரோ.

#### [இதுவுமது]

985. உணங்கி யொருகால் முடமாகி
யொருகண் ணின்றி செவியிழந்து
வணங்கும் நெடுவா லறுபபுண்டு
மன்னு முதுகின் வயறெட்டி
யணங்கி னலிய மேல்யெய்தி
யயில்வா யோடு கழுத்தேந்தி
சுணங்கன் முடுகல் பின்சென்று
லாரைக் காமன் துயர்செய்வான்.

### மௌனவுபதேச குருவிடம், விண்ணப்பம்

986. இருள்கன மாய்கை மரமாய்கை திரோதாயியென்
றிவ்வைந்து மொன்றி லொன்றாய்
ஏத்தமது வாகவே தோத்திர மெலாமாகி
யெவ்வி டத்தினும் யானெனும்
பொருளாகி நின்றதே அல்லாது யெங்கணும்
பூரணம தென்பு தெவடம்

போக்குவர வற்ற தென்றே கலையுமோ துதே
பொய்யென்று சொல்ல வொண்ணு
யருள்ஞான செங்கதிரின் முன்னே யிருளொன்
றணுகு மோஅும் பரத்தில்
ஆரணிய மென்பவர்கள் போலவரு அஞ்ஞானம்
ஆன அதிலே அழிந்த
மருளான உலக......னின்று தவியாமல்
வர்மம்வந் தெனக்கருள் புரிகுவாய்
மாசிலா மணியனே சோணசை லத்தனே
மவுனவுப தேச குருவே.

### வில்வம், தடாகம், துறவி, மடம்
### விருத்தம்

987. ஆயிர மலர்கள் தன்னி
லதிகமோர் வில்வ மாகும்
ஆயிரங் கூகந் தன்னி
லதிகமோர் தடாக மாகும்
ஆயிரங் கிரகந் தன்னி
லதிகமோர் துறவி யாகும்
ஆயிரங் கோவில் தன்னி
லதிகமோர் மடம தாமே.

### பிரபஞ்ச வாழ்க்கை
### [இதுவுமது]

988. பாசவிருள் வகையும் யெரிய ஞெக்கிப்
பரமனருள் குருவாய்வந் துணர்த்தி னலும்
பாசமக லாதபிர பஞ்ச வாழ்க்கைப்
பரிந்தாசை வுடலுயிர்க ளனைத்து நேர்மை
யோசையொற் றிடநீரை யெடுத்து மேகம்
உவரகத்தி அமுதாக்கி உலகம் போற்ற
நேசமுற வைத்திடினும றிவில்லா தோடி
நெடுங்கடல் புகுவார்க்கும் நேரொப் பாமே.

### ஈசன் செயல்
### வெண்பா

989. என்னெண்ண மெல்லாமெப் போதழிந்தி டும்அரன்
தன்னெண் ணமொன்றுந் தப்பாது—முன்னமே

பார்க்கமுடி யாது பரமன் திருவிளையாட்
டார்க்குந் தெரியா தறி.

அம்பிகை

990. பதும மலரா ளடிபரவும்
பங்கே ருகத்தாள் பணிந்தவரே
நிதிமுகந் தளிக்குந் தொழில்பெற்றார்
நெடியோ னளிக்கும் நிலைபெற்றார்
சதுமா முகனுஞ் சராசரங்கள்
படைத்தா னென்றே சாற்றுமறை
யதனு லுனது திருவருளை
யல்லா துளதோ அம்பிகையே.

[இதுவுமது]

991. கூவையிலே ஆத்தாளைத் தொழுது கூவு
முறையுங் கருணையினால் திரும்பிப் பார்த்து
தாலவையிலே மதலையைத்தான் தாய்தான் சென்று
சார்வாக யெடுத்தது போலுன்னை மைந்தா
தேவையிலே யெடுத்தணைத்து உயர வைப்பாள்
செகச்சால மாடுகிற திருட்டுத் தாய்தான்
பாவையிலே மனஞ்சென்று பரவா விட்டால்
பார்க்காது போலிருப்பாள் பாரு பாரு.

பரமசிவன்

992. அண்டர்தொழு மிந்திராதி வாழ்வையும் விரும்பிடேன்
அஷ்ட சித்தியும் விரும்பேன்
அரியகலைக் கியானமும் விரும்பே னுனதுபுகழ்
அரிய கீர்த்தியும் விரும்பேன்
பண்டமல மெல்லா மொழித்துநின் னருள்பெற்ற
பழையவடி யார்க ளடியார்
பாததா மரைகளென் சிரசின்மேல் வைத்தருள்
பார்வை யாலிரு ளகத்தித்
தொண்டுசெய் துநின்றுபர மானந்த வெள்ளத்
துழன்று விளையாடி யுலகந்
தோன்று மலிருளமர்ந் திருக்கின்ற பெருவாழ்வு
தொண்ட தேவொன்று வேண்டும்

ஒண்டிடுங் கொன்றையணி யண்டர்நா யகாகயிலை
　　வுறைகின் றபர தெய்வமே
ஒன்றாகி யானந்த வுருவாகி யென்னுயிர்க்
　　குயிரான பரம சிவமே.

### எழுத்தும் இறையும்

#### வெண்பா

993. என்றும் பயமறவே யீரெழுத்து மோரெழுத்தாய்
நின்றுசிவ லிங்கமது நெஞ்சேகேள்—உண்டுறங்கி
தேகமெல்லாம் நின்றலைந்து தீயெழுத்து லிங்கங்காண்
ஆசைவிந்து நவ்வெழுத் து.

### நெஞ்சுக்குக் கூறியது

#### [இதுவுமது]

994. ஆவுடையார் நின்ற அறிவைத் தினம்புகட்டிக்
கூவுடையார் நின்ற நிலைகூறிப்—பூவுடையக்
கட்டளையைத் தள்ளிக் கடந்து பெருவழியே
இஷ்டமுட னெஞ்சே யிரு.

#### [இதுவுமது]

995. இருவினைக்குள் ளாகாதே யென்னுடைமை யென்னுப்
பெருகுசனம் கொண்டுபினைத் தாதே—மருவுமனம்
கள்ளமெல்லாம் விட்டு கரைந்து கரைந்துருகி
உள்ளுணர்ந்து நெஞ்சேபா ரே.

#### [இதுவுமது]

996. ஒன்றுங் கிடையாது ஓடி யலையாதே
சென்று எமன்கையில்போய் சிக்காதே—நின்று
கடிய வினையறுக்கக் கர்த்தனையே நம்பு
கொடிய வினைகளும் போம்.

#### [இதுவுமது]

997. பொருடமை நம்பாதே பொய்வாழ்வை நத்தா
யிருளுறவை நம்பி யிராதே—பொருளுறவு
கொண்டறிவினாலே குறித்தவினை யத்தனையும்
கண்டறிந்து நெஞ்சேநீ பார்.

[இதுவுமது]

998. கருத்துவே றுகாதே கண்டிடத்தில் ஓடாய்
விருத்துப் பலவிதமாய் மேவாதே—பெருத்ததொரு
சஞ்சலத்தை விட்டுத் தலமறிந்து காண்மனமே
அஞ்செழுத்தும் ஒன்பதுவாய்க் கூடு.

[இதுவுமது]

999. ஒன்பதுவாய்க் கூடு உறுதியென்று நம்பாதே
அன்புலனை மெய்யென் றணுகாதே—யின்பமுடன்
சிற்பரத்தி னுள்ளே சிறந்துபா ராய்மனமே
உற்பொருளே மெய்யென் றுணர்.

[இதுவுமது]

1000. மெய்யுணர்ந்து பாராய் விரித்தகன்று போகாமல்
அய்யன் திருவிளையாட் டென்றனைச்—செய்யதொரு
ஆணெழுத்தும் பெண்ணெழுத் தும்அணு வாகுநிலை
காணும் பொருளுற்றக் கால்.

[இதுவுமது]

1001. கல்லான நெஞ்சே கவனம் கருத்துருகிப்
பொல்லாப் பவக்கடலில் போகாதே—வெல்லாம்
புழுக்குழிபார் நெஞ்சேகேள் பொன்னம் பலத்தைக்
களங்கமறப் பார்த்துக் கரை.

[இதுவுமது]

1002. சுரைதெரியாக் காமக் கடலில் முழுகாதே
பொறையுடைய வாழ்வை நத்திப் போகாய்—வுரை [பெயர்ந்த
ஆசைவிந்து அற்றவிந்தை யாலறிந்து நெஞ்சே நீ
நேசமுள்ள பாக்கியத்தில் நில்.

[இதுவுமது]

1003. பாக்கியத்தைக் கண்டு பரிந்து மகிழாதே
தாக்குமிடி வந்தால் சலியாதே—னேக்கும்
ஒருவன் திருவிளையாட் டென்றுஒன் றறிந்து
கருவறவே நின்று கருது.

[இதுவுமது]

1004. கருதாதே மங்கையர்கள் காமக் கலைக்கோ
உருகாதே நெஞ்சேநீ யொன்று—யிருதாளே
காற்றேடே சேர்ந்தவக் கானலுரு வைக்கண்டு
போற்றியெடுக் கும்நல்ல பொன்.

[இதுவுமது]

1005. பொன்னாசை மண்ணாசை பூங்குழலா ளாசையென்று
சொன்னாசை யால்திரிந்து சோராதே—என்னாளும்
மீச னமைத்தபடி யெய்யுங்கா ணென்றுசொல்லிப்
பாசமற நெஞ்சே பரிந்து.

தொழிலாளர்வரிசை

சந்த விருத்தம்

1006. தொண்டைமண் டலவரிசை மூவாறு குடிமக்கள்
சுருதி நான்மறை சொல்வது
துய்யபுகழ் நாவிதன் குயவன் வண்ணான் ஓலை
சொல்வ றைந்திடு கணக்கன்
கண்டகம் மாளர் வகைஐவருந் தையலைக்
கண்டு தத்திடு வானுறுங்
கருதரிய வீரவடி யாகுடன் பூமாலை
கட்டுவோன் வெட்டியானும்
மண்டல மதிக்கவரும் வாணியர்கள் மூவரும்
வலையர் காவலர் பள்ளியும்
வகைவகையதாக இவர்கள் தொழில் செய்குவார்
மன்னு காரா ளருக்குப்
பண்டைநாள்முத லாக நன்மைதின் மைக்கும்
பணிந்துகும் பிட்டு நாளும்
பரிவட்ட முங்காசு பெறுவர்கச் சியிலோங்கு
பரமர் திருவுள மறியவே.

ஊர்புகார்

வெண்பா

1007. ஆடுவதுஞ் செக்கே யளப்பது மெண்ணெயே
கூடுவதுஞ் சக்கிலியர் கோதையே—நீடுபுகழ்
கச்சிச்செப் பேட்டில் களிக்குங்கால் செக்கர்தாம்
உச்சிக்குப் பின்புகார் ஊர்.

## காஞ்சிச் செப்பேட்டில் கண்டது

1008. உன்னியசீர் வுவச்சனே னுறுகணக்கன் கும்பன்
உத்தமத்தில் யேனுதி பூவிடுவான் பள்ளி
பன்னியிடும் மறையரையும் மறைய ராகப்
பன்னிருவர் குடிமக்கள் கடவி தென்று
மன்னிய சீர்மறை முனிதேர் நால்வர்க்கு மிகர்
மறுகாஞ்சி செப்பேட்டில் வரைவித் தானே.

## வினைதீர்வாழ்வு

1009. கள்ளியடி தனிலிருந்து கஞ்சிகுடித் தஞ்சுசட்டி
களியைத் தின்ன
பள்ளி நுளையனைத்தானே திருமழ வரங்கனென்ற
பாவம் போக
தெள்ளுதமிழ் கொண்டாடு சிதம்பரத்தில் நடஞ்செய்யும்
செல்வ ஞை
வள்ளிகண வனைப்பணிந்தால் சகலவினை யுந்தீர்ந்து
வாழ்வ ராமே.

## காப்பு உண்டு

1010. மையஞ்சு வாரிக் கரைபுரண் டாலும் வருகலியன்
மெய்யஞ்சு வெள்ளி தெறகடைந் தாலும்யிம வான்பயின்ற
அய்யஞ்சு மைந்து மிரண்டும் பெற்றான்பெற் றவாரணத்
[தின்
கையஞ்சு நாலு புயமுமுண் டேயெமைக் காப்பதற்கே.

## சேயதுங்கன்

1011. மாத்திட்ட பொன்னிநதி சூழ்ந்திடு தஞ்சை மண்ட
பார்த்திடுடி வீதிக்கு வீதியெல் லாம்பசும் பூவரக [லத்தைப்
போத்திட் டலங்கிருதஞ் செய்துமுன் ளுள்பிரி யா
[வழக்கைத்
தீர்த்திட்ட போசன் கலெக்கட்ட ராசதுரை செயதுங்கனே.

## [இதுவுமது]

1012. பேணித்துரை புண்ணியசா லித்துரை தஞ்சை பூமியில்
வேணித் துரைநுறு வல்துரை யுடனிம் மேதினியில் வாழ்
காணித்துரைநல் லகாட்டன் துரை....................
வாணித் துரை கலெக் கட்டாராச துரை யதிபதியே.

### சென்னைக் கல்விச்சங்கத்து, " மதரசா ஈ ஆஜம் " என்னும் பாடசாலையில் தமிழ்ப்புலமை நடாத்தும் கடவம் அ. சிதம்பர முதலியாரவர்களால் இயற்றப்பட்டது

### விருத்தம்

1013. சொல்லையம் பூரண மதியிறற் புதத்தாய்ந்துண்மை
தொடர்பொரு டேர்திருக் கடவுட்பல கைசங்கத்
தொல்லவில் புகழ்க்கவிஞர் முதற்றமிழ் மேதக்க
சுருதி மொழித்தலைவர் பண்டுதொகுத் துச்சேர்த்த
சொல்லையம் பூருகத் தினியசுவை பாலிக்குஞ்
செழுங்கனிய வெனப்பயத்தற் கியைநூ லன்றிச்
சிலகிமித்தத் துளுற்றுபல கவிதைச் செம்பொன்
றிகைமறத் தங்குறை வுளிகாண் பரியதாகத்
தில்லையம் பூர்ச்சந் திரசேகரப் பேர்வாய்ந்த
தெளிதரு நாவலனெனு மஞ்சனங்கண் கொண்டு
தெரிந்தெடுத்தச் சினிற்பதிப்பித் தெவர்க்குங் கல்விச்
சிறுமைகெடக் களிதுளங்குந் திறந்தந் தாறுற்
றெல்லையம்பூர்ச் சடிலனையுண் ணெகிழ்ந்து போற்றுந்
தூய்மையும் வாய்மையு முடையான் ராமநாதச்
சொன்மருவு புரன் பொன் னுசாமி மாறன்
சொல்மணலிப் பதிப்பெரிய தம்பி வேனே.

### ஸ்ரீ மகாபாரத கீர்த்தனை செய்த முத்துராமக் கவிராயர் தமையன் குமாரராகிய கோ. சபாபதி முதலியாரவர்களால் இயற்றப்பட்ட கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1014. தலைமைபெறு சைவராஞ் சிவஞான தேவர்
தகுராம நாத புரநற்
சமஸ்தான மதனுக்கு முயர்பரம சிவனடி
தனக்குமர னேசர் வழுதி
தானென்ன முத்தமிழ்ப் பைங்கூழ் தழைத்திடச்
சந்ததம் பொன்மாரி பெய்
தமையத றற்பொன்னு சாமிதே வப்பேர்கொள்
தனுமாரர் புகல வளவில்
கலைகளுறை தில்லையம்பூர்ச்சந்திர சேகர
கவிரா ஜபண்டி தரும்வின்
காஞ்சிமா நகர்மேவு முசிதகன வித்துவான்
கச்சபா லயரு மவர்தங்
கருத்தின்ப டிக்குச்செய் திருவோ மெனவக்
குணங்கந் கணங் கட்டியே

கனைகட லிடைப்பல விடங்களிற் சிதறிவெகு
காலமுன் வீழ்ந் திருந்த
அலைகின்ற பொருடனைக் கண்டெடுத் தாலென
வனேக நாடாறு மாரு
அவனியில் வழங்குமெண் ணறுதனிப் பாடல்க
ளவைக்குணய முற்ற வைகளை
அன்றுசொன் னவர்கருத் திற்கனி வும்வழுவா
தனந்த முறையதி நுட்பமா
யாராய்ந்தொருங் குசேர்த் தகிலமெல் லாம்புகழ
வச்சிற் பதித்த தைக்கண்
டுலகியவ ரிருவர்தங் கல்வித்திறத் தையோர்ந்
துணராது வித்தைக் கியான்
ஒருவனே யென்றெண்ண விழிவென்ன வறுமுகவ
னெளிரகங் குன்றி நின்று
னுயிர்முனிவ னெண்சா ணுடம்புமொரு சாணினு
மொடுங் கினிவர் புலமைதேர்ந்
துரகவேந் தொருகால ருந்திவிழி யிமையாம
லோடி யதமுற் றனரோ.

### இந்திரபதங் கிடைக்கும்
### விருத்தம்

1015\. பூசுரர்கள் சதகோடி நான்மறைகள் பயிலுமிரு
புறத்தோ லக்க
மீசுரம தாங்கோட்டிச் சவுமியமா லிரண்டாநாள்
வீதி மீதே
கேசரிமேல் வரும்பவனி யைத்தொழுதோர்க் கிந்திரபதங்
கிடைக்கும் நன்றாய்ப்
பேசுமிந் திராணியுடன கலந்துவனு பவிப்பர் தினம்
பெருமை தானே.

1016\. அருள்பொருந்து சீதைதனைக் கண்டுவரத் தூதனுப்பு
மனுமான் மீதிற்
கருதுமொரு மூன்றாநாள் திருக்கோட்டி நகர்தனிலே
கனம தாகத்
திருவிருந்த மணிமார்பன் சவுமியமால் வரும்பவனி
தெரிசித் தோர்க்குக்
கருமம(ழி)முந்து பவக்கடலை விட்டெழுந்து பரமபதங்
காண லாமே,

[இதுவுமது]

1017. கொங்குவங் காளந்திரை கொள்கௌரி வல்வேந்திரங்
கோட்டி மேவுஞ்
செங்கணெடு மால்சவுமிய மூர்த்தி யொரு நாலாநாள்
சிறப்ப தாகத்
தங்கமய மாங்கருட சேவையைப் போற்றித்
தயவதாய்ப் பார்க்கப்
பங்கமிலா நாஞுழிகைக் கோடி படைத்திலனே
பதுமத் தோனே.

ஸ்ரீ ராமன்

இராகம்—பியாகு

1018. வஞ்சி யுன்மேல் மோகன லாகிரி
மிஞ்சி னன்சாமி—நீ—கெஞ்சிட நேமி
கெஞ்சிட நேமி—நீ—கெஞ்சிட நேமி
விஞ்சையா புகழ் பாப மானமேமேவிய பூமா நாளும்
தஞ்சமென் றோர்க்கருள் செய்வேங் கிடசாமி
நந்நயமா—கோதண்ட—ஸ்ரீராமா
வாடிக்கை மெத்த வேடிக்கை யுள்ள
மன்மத வேதா—நாளும்—தேடக் கிடையா தமிர்தமே
திவ்விய சங்கீதம்—பெண்திரண் டொருமாதம்
பெண்திரண் டொருமாதம்
பல்வரிசை முத்தல்குல் லரவ—படர்முலை செண்டு
செல்வ மதுரை வளமைகள் சீனிக் கல்கண்டு
செழுமலர் வண்டு செழுமலர் வண்டு

சுப்பிரமணியன்மேல் காதல்

1019. ஏனின்னந் தாமசம் செய்ய லாமோ—நான்
யேழை யென்றறிந்தும்
வானோர் புகழ்ந்திடும் செந்தினில் மேவிய
மன்னு சுப்பிர மணியன் யென்மீதில் (ஏனின்னந்)
கொங்கை குடங்க ளிரண்டும் மீறுதே—யென்
கோவை யிதழூறு தென்
செங்கை வளைகளும் சிதறுதே மயலாலே.
சித்தம்வைத் தெனை நீ சேரயிது சமையம் (ஏனின்னந்)
காமன் கணைக ளெய்யயுரு கினங்கின் காதல்கொண்
சோமன் தணல்மிகத் தாவுதே புவிமீதில் [டிடமீதில்
சோலையிலே குயில் கூவுதே வசைசொல்லி (ஏனின்னந்)

ஆசை பெறுகுதே யென்செய்குவேன்—உன்னை.
யனுதினம் சேர்ந்தானந்த முத்தய்யன்
தமிழுக் குகந்த தென்றும்
பாசவினை யறுக்கும் பரனே கலவிக்கும் (ஏனின்னம்)

## இரங்கல்

1020. விந்தையாக மேவா யிந்தவேளை வாரும்
சொந்த மாகவே சப்பிர மஞ்சன மீதினிலிருந்து
பெறவே யாளுந்தா முகந்து முத்தங் கள்தந்து
(விந்தை)
மந்தமா ருதம்சிலா மாலேவ நேரா
வளறி முளைகள் மீரு கந்தற்பன் கணையேரு
கடலொளி சேவிகாரு
சிந்தை மயங்கா தென்னைச் சேர்ந்தணைவாய் கெம்பீரா
கர்விற் கிளிகள் தாவுதே குயில்கூவுதே [(விந்தை)
கலைமீதிற் கதிற்றேவுதே பூவில்வண்டு மேவுதே
புள்ளிக் குயில்கூவுதே ஆவி
மயல்கடலில் அழுந்து தேசகி யாதே (விந்தை)
பத்தர்கள் கொண்டாட பணியாட படலமிசை மயிலாட
சித்தமகிழ்ந் தோட சிறுமி கணவ னோட
முத்து ராமலிங்கம் முத்தமிழ் தான்பாட (விந்தை)

## ஆசைவெட்க மறியாது

1021. ஆசைகொண் டவளுக்கு ரோசமில்லை யென்று
அறியா யோசாமி அறியாயோ
உன்னுட அசப்பும் பசப்புமறிவேன்—மெத்த
தேசம் புகழ்மக ராசலட் சுமணப்பெருமாள்
போஜஸ் தாகியே சுகபோகியே வற்சலாகியே—யிந்தற்
புருஷ மேறு பூபாலனே குண சீலனே
பெண்கள் லோலனே அனுகூலனே
உன்மீதி லினியிவ்— (ஆசைகொண்ட)
சித்த சன் கணைவந்த டிக்குதே—மெத்த
மெத்தை மேல்சுகிக் கத்துடிக்குதே முலையி ரண்டும் சாமர
மெத்த துடிக்குதேவித்தக மாகுயில் படிக்குதே—
யொத்த தளத்தினில் நடிக்குதே—தென்றல் [யிசை
சுத்தி வந்து யென்னைப் பிடிக்குதே—மோகம்
முற்றுதே நித்தியமும் சற்றேறவந் தென்னைக் காரும்.
(ஆசை கொண்ட)

### சவுமியநாராயனன்

1022. சால வித்தை செய்குருனே மாயவன்—செக
சால வித்தை செய்குருனே.
சாலவித்தை செய்கிருன் தூலமோர் எடுத்துக்கொண்டு
கோலமால் திருக்கோட்டி சீல சவுமிய நாராயணனே-(சால)
வெட்ட வெளிதன் னிலேமுட்ட பாலன் வருகிருன்
ஒட்டியும் ஒட்டா மலேஉள் ளேதா னிருக்கிருன்
யெட்டி லன்காட் டுக்குள்ளே நூறு அட்டையு மேறினன்
பட்டிமேயு மாடைந்தும் விட்டுநின்று பார்க்கிருன்
ஊட்டென ஊட்டுகிருன் ஊட்டி யாசை காட்டுகிருன்
யீட்டுக்கும் பாட்டுக்கு யில்லைநான் என்கிருன்
ஆணு மல்லன் பெண்ணு மல்லன்
அலியுமல்லன் தலைவனுவான்
ஆதியுமந்தமும் ஒன்ருக நின்றவன்
பூணுவா ரைவேண தல்ல—மதமோரவன்
பூனைக்கு விரோதன் வன்பாலுக் குபகார னவன் (சால)

1023. ஆரென்று மெறட்டுச் சாமி—மெத்த
ஆசை வார்த்தை சொல்லி யென்னை
மோசம் செய்ததும் அல்லாமல் (ஆரென்று)
நாரணஞர் மருமகனே முன்னொருநாள்
ஓரம் நடத்தை தெரியாமல் மேவிக் கொண்டேன்
பூரணரே புண்ணியரே செல்வமுத்துக்
குமரரே போதும் போதும் உன்
உறவு தானும் கைமேல் பணத்தை (ஆரென்று)
கொத்துவடம் முத்துசரம் கொப்புதாரேன் யென்று
[சொல்லி
கொஞ்சிக் கொஞ்சி யென்உடன் குழைதா னடித்தீர்
கொங்கை யிதழ்பருகிக் கொங்கைக் குடத்தைத்
கன்னத்தில் ஒருதரம் நறுக்கென்று கடித்தீர் [தாவென்று
எத்தனை சொன்னலும் உம்மத்த ஞரிடம் கொடுத்தேன்
கர்த்த னென்று யெண்ணிநான் வெகுபக்தி யுடனே
நித்தம் நித்தம் கடனுக்கு ஒத்தொருத்தி அணைவாளோ
[போம்போம்
யெத்தி யெத்தி யின்றைக்கு முத்தி தாரே னென்று
[சொல்லி (ஆரென்று)
வேணும் பொருளிருந்தால் சொன்ன நாணயப்படி
வேணும் படியிருக்க யெனக்கு சம்மகுதி [செலுத்தி

வெறுப்பாய்ப் போருள் என்று எண்ணிஞலும்,
யெண்ணிஞலும் யெண்ணு சும்மா.
வேசை யாசை காசுமே லல்லவோசாமி—இது
தோணுமல் அனுதினம் தொந்தரவு பண்ணுகிறீர்
தொரையென்றால் யேதடி யென்னைத் துடறவே நீவரவும்
ஆணவ மாய்ப்பே சுகிறீர்
ஐயனே பன்னிரு கையனே—ஆணையிட்டு
ஆடிக் காட்டித் தில்லுமல்லு பேசுறீர் இங்கே(ஆரென்று)

வல்லமை நாடிவரா திங்கே
கொல்லன் தெருவினில் ஊசி செல்லுமோ
அத்தன்மை போல்வார்த்தை பேசுறீர்
முன்ன மாரைச் சுட்டுரீர் கன்னத்தில் கன்னம் வைக்கிறீர்
இதுமான் சேருமான் பால்குடிக்கிறீர்
இல்லா தெல்லாஞ் சொல்லி யென்னைக்
கள்ள னெனவரிந் திருக்கான்
அல்லும் பகலும புகழ்சுப்பு ராமன்
ஆடிப் பரவிப் போற்றிடும் வேலோரை. (ஆரென்று)

## கழுகுமலைக் கந்தசாமி

1024. மின்னே யென்பிராண நாதனை
அழைத்துவரச் சொன்னேன்—இதுவரையில்
இன்னும் தாமச மோடி (மின்னே)

கன்னல்ரசம் பொருந்தும் கழுகு மலையில்வாழும்
கந்தசாமி வந்தோர்நாள் அந்தரங்கமாய்
அன்னையு மறியாமலே சுத்தி
அடுத்தவீட்டுக் காரனுக்குத் தெரியாமலே.
சின்னவயதில் வந்து யென்னை வலித்தா னிந்த சீமான்
இப்படிச் செய்ய லாமோ மோசமடி (மின்னே)

நாஞ அவரை அறிந்தேஞ அவர்வலியத்
தாஞக வந்து வந்து போஞரடி
யேஞே வந்தா ரென்று யிருந்தேன்—பய்யப்பய்ய
இட்டமாகப் பேசி யேசிக் கிட்ட நெருங்கி—மானே
மறந்தா னடியென்னை மறந்தொரு நாழிகை
யிருந்தாரடிதேனே யெனப்பசப்பி
யென்தலை தொட்டு ஆணையிட்டுச் சிங்காரன்
யென்மீ திலிருந்த வணங்காமை செய்யவோ
கற்பை யழித்துச் சொந்த வற்பனைசொல்லி

ஊருக்கு வெப்பனை செய்தே னேயிந்தக் கற்பனை செய்
இப்படிச் செய்வாரென் றுளள்ள ளவாகிலும் [தானே
அப்போ யெண்ணினால் அவருடன் முழியேன்
சொற்பனத் திற்குறி யேனிந்தச் சூது
செய்வா ரென்று எண்ணிஒரு போதும் அறியேன்
சுப்பிமகள் முத்தி யவளைப்பிரி யாமலே—வெகு
சொந்தமா யிருந்த் வரைஅந்த ரங்கமாய்க்கூடி
முந்தநாள் அந்தி நேரத்தில் வந்த வரென்னைக் கண்டுமுட்
டந்திமதி ளோரமாய் ஒளிந்திருந் தார்நானும் அவர்
தந்திர மறிவோ மென்று முந்தியில் கைபோட்டு
வந்த தெனக்கிந்தப் பாளை தந்தாரடி
கொந்தல் மலர் சூடினார் அவராரோகண
பதத்தை ஸ்தோத்திரம் பாடினார்
பந்து முலையைப் பிடித்து யெந்தனைக் கலவிசெய்யும்
பன்னிரு கையான் சுப்பிர மணியனே
வந்து யெனையாளையா.

### இராகவன் மேல் பாடியது
#### பல்லவி

1025. உனையே நம்பினே னுதரி—கோவிந்த முரகரி (உனை)

#### (அநுபல்லவி)

உனையே நம்பி னேனிந்த உலகத்தில் வேறொன் றறியேன்
யெனையாள் அலர்மேல் மங்கைமண வாளனே நான் (உனை)

#### சரணங்கள்

கல்லைப் பெண்ணாக்க வில்லையா—இன்ன மந்தக்
கருணை யென்மீதி லில்லையா
யெல்லா மறிந்த துரைக்கென்ன வோதுவே னுன்னை
யல்லால் வேறே திக்கெனக் காருண்டோ (உனை)
இன்னமும் யென்னோடே வாதா—உந்தன் மனம்
இந்த யேழை மேலிரங்காதா
அன்னையைப் போலவே வளர்த்தென்னை ரட்சியு மிந்த
மண்ணில் மனிதனிலே நேவார்பண்ண (உனை)

#### [இதுவுமது]

மோசம் செய்யாதே ராகவா—கருடனுட
முதுகேறி யென்முன் னாகவா

பாசமாச் செய்தென்னை ஆசைதீர் வென்றோடு
பேசிப்பா ராங்குச தாசனுட னிப்போ (உனை)

### கந்தன்மேல் பாடியது

1026. இப்போ நான்சொல்லப் போனால் ஆயாசம் காணும்
இனிமேல் அல்லோ தோணும்
இப்பர மாணுக் குள்ளடை சுப்பிர மணியக்கடவுள்
விருப்ப மாகவே செல்வம் செருக்கு ராரடிமானே (இ)

முட்டுவாள ல்லாம வினியமனம் வாழ்த்துது
மொய்குழலே யென்சொல் அம்பல மேறுது
பெட்டி யாசை கொஞ்ச மட்டினிலே மாறுது
புளியெரி பழகு சரண்டள்ளர் தீராது (இப்போநான்)

இட்ட மாகவே யெண்ணிய பொருள்எல்லாம் கொடுக்கட்
இந்நா கரிகத் தெந்தன் கலவிகள் தொடுக்கட்டும் [டும்
ஒட்டிநீள் ஆரப்பச் சிட்டுபோல் பறக்கட்டும்
உருவிற் கோலமாறிப் பிறகிங்கே முடிக்கட்டும்
முன்சொன்ன பகையாளி யாகும் உள்ள திளங்காசம்
மூதண்டம் கொள்ளு திப்போ செய்வாள் அவள்நேசம்
மீளும் வைத்தி ருக்கிறு ளுபாயம் வரவரத் தெரியட்டும்
நாம்கத்த ஆதாயம் சேரச்சேர முள்ளதெல்லாம்
சரிவரக் கொடுக்கட்டும்
தொட்டு அவள்மடியில் கைபோட்டு மரிக்கட்கும்
சச்சரவி னுலிந்தத் தெருவெங்குஞ் சிரிக்கட்டும்
தய்யலேயெனச் சொல்லிப் போதள்ள துள்ளட்டும் (இப்)

கவ்னமில் லாமல்சும்மா திரிவோர்க்கு என்னபிரியம்
கட்டிப் படுத்தாளோ ஊருக்குந் தான்தெரியும்
கவிக்குஞ் சரந்தமிழுக்கு மகிழ்ந்து நிதிசொரியும்
கந்தனுக்கு யின்ன மச்சந்தான் பயம்முரியும்
ஆவல்தனை மிகவும் கொண்டு கொள்ளுகிறார்
அந்தரங்க மாயு கந்தவர் யெண்ணூரு யெள்ளளவும்
கிருபைகள் யினியாகியிலும் விள்ளுவா ரயலனைப்
பலமறியார் தொண்டரப்போ துள்ளுரார் (இப்போ

### வேல்வர்மேல் சீற்றங்கொண்டு பாடியது

1027. மடியினில் குழந்தையைப்பிடியடி—யவர்
வடிவும் தோற்றத்தை அறியேனே
படிபுகழ் தென்றங் குடிவேலரை
யின்னமும் பரபரப்பாய்வழியே சருவிக்கொண்டிருக்கிறுன்.

செல்வனைப் பெற்ற தான வராண்மைப் போமோ
தீட்டின மரத்தில் குரும்பைப் பார்த்திட லாமோ
அல்லடி கல்வியை ஒருவற்கு யெல்லேப்பகுப்பது நாமே
ஆனைப் படுத்தால் ஒருகுதிரை நீயும்தனி வரவோ
நல்லவளநம் மைகார்க்கும் திராணியைகார்க்கட்டு
மாரதியும் அவன்முகத்தை முந்தாமல் கார்க்கட்டும்
சல்லணடுபர வசயும் நம்மைக் கார்க்கட்டும்
சந்து வளித்து பெட்டியா ருக்கு வெருக்கட்டும்
நடத்தை களென் னிடத்தில் படித்துக் கொண்டதுமே
நாண மில்லாமல் மனம்பூனை யெலி பிடித்தாப்போல் ஆச்சு
சடுத்துப் பேசுகிறதை பிடித்து யென்ன பேச்சு
தருணம்யிது வென்று காத்திருந்ததும் போச்சு
கிடக்கட்டும் யினியொரு தரம்யெடுக்குறேன்
சொல்முறை தனைச்சொந்தமும் தொடுக்குறேன்
விடுத்தாரார் அவர்படத்தலே அரவம்போலொருக்குறேன்
விரத்தலே துள்ளி யேந்தவிட் டேவிமுடுக் குகிறேன் (மடி)
மிஞ்சி மனதாலே கலக்குதே யினிக்லக்குதே
யினிவேலவர் செய்கிற தந்திர சாலங்களும்
சாலங்களுக் குயினி கொஞ்சநாள்போமெந்தன் திராணியே
இதுவல்லே ஆயிரம் காலே அரைக்கால் மாகாணியே
செஞ்சாக விடுஞ்சற் கற்பகத்தையும் படிக்குறேன்
திருகாணி பம்பரம் போல்சுத்தி ஒடிக்கிறேன்
தொஞ்சது கட்டு சபாசுயென்று படிக்கிறேன்
தொடுத்த படியுங் கத்ததை நடத்தையை முடிக்கிறேன்.
(மடி)

### ஸ்ரீராமரிடம் குறைவிண்ணப்பித்தல்

1028. மோசம் செய்யாதே—ராமாயென்னை
மோசம் செய்யாதே
ஆசை யுடனே நானுன்னையே—வந்தடுத்த
தேனே யென்னை ஆளறியே.
மைந்தன் மீதில் வர்மமா மனம்வர ஒப்பரந்தாமா
யெந்தனைக் கைவிட லாமா யினியென்ன செய்குவேன்
[ராமா (மோச)
யென்னுடனே யிந்த வாத யீரே ழுலகும் பழியாதா
யின்னும் தயவு வராதா யினியென்ன செய்குவேன்
நாதா (மோச)
பாவம் அருததுன்னாலேயினிபட்சம் வைத்திடுமென் மேலே
கோபம் உனக்கென்ன தாலே பருங்குச நாமநெடுமாலே
(மோச)

### சாக்கப் பராங்குசர்

1029. மறிலே யேக்கப் பீயாலா ஓமனசா
பாலேசு கயக்கி லேலே மனசாபிலே
ஆக்கல் கட்டொரு ஆத்துமேல் லேக்கா
நாவிதத்துதற் பருசற்கு நாமசாகற மிலேகாற்
குட்ட குட்டமி லேற மனசா மீமிலே
யாறபங் கல குமிவா வோ ஆ...........
யாவோ அவுதறேம் பங்கலே தேவுமேறே
றெங்கலா அவுறிலா சொக்கப் பருங்குரேசா
மங்க லக்கியா வோயா ஜம்பாவோ
ருஜ்ஜிமையா வோக்கிமேற் யாற
லேலே றேமுத்து ருமலிங் கம்பஜே
தேவா மான கலமேவி நானே சுன்ன
ஜிம்மைய வோரு ஜ—ம்பலயா கீமேற்வோ.

### மனத்துக்குக் கூறியது

1030. மனமே சொல்வதைக்கேள்—யினி
மறவாதே அரிமலர்த்தாள்
தனமும் கனமும் சாஸ்வத மென்றேன்
நீதடு மாறி நின்றழியாதே (மனமே)
பக்த சனங்களைக் கண்டுநீ சள்ளென்று சீறி
மதத்தா லழியாதே—ஓரக
நிலையில்லாக் காயத்தை நிசமாக நம்பிக்
கெட்டலையாதே—மாய
வலைக்கு ளகப்பட்டு வந்தவரவை
நீமறந்து மலையாதே—ஓடி
அற்பசம் சாரத்திலாசையை வைத்து
வீணாய்க் கொள்ளாதே—யிந்தச்
சொற்பசுகத்தைக் கண்டு சொக்கிப்போய்
மகிழ்ந்துநீ சும்மாநீ துள்ளாதே—செய்
வஞ்சனை சூது பொய்வாது பொல்லா துஷ்ட
வார்த்தை களாடாதே வெயில்மஞ்சளெனும்
பிரபஞ்சத் தைக்கண்டு நீமயக்கங் கொண்டா டாதே
பொய்யான வாழ்க்கையை மெய்யாக வேநம்பிப்
பொய்மோசம் போகாதே வீணசெய் யாகாரியம்
வையகந் தன்னிலே செய்துநீ சாகாதே
பரஸ்திரி சனங்களைப் பார்த்து மகிழ்ந்து
பிறர்மீதில் சும்மா வீணசை வையாதே

விதிவசத் தாலுன்னை யெவர்கள் தூஷித்தாலும்
யெதிர்த்தொன்று சொல்லாதே உந்தன் மதிகெட்டு
மூற்கத் துர்மார்க்க சனங்களி னெதிரினில் நில்லாதே
ஸ்ரீபராங்குச தாசவரதரை யந்தரங்கத்தில் மறவாதே
(மனமே)

## தலைவி இரங்கல்

1031. ஒருநாள் மருவிய சரச விலேயேனினைந்
துருகு தய்யோ நெஞ்சமே
மறுவகடம் பணிமுருகா லீரென்னைச் சேர்ந்தக்
மகரா சனுட நேமிராகசி யுடன்கூடி (ஒரு)

மலரணை யிலடுத்து மகிழ்ந்து கவடித்து
யிலகுசுருள் மடித்து யிதமாகவே கொடுத்துக்
கலவை களணிந்து கடிமலர் புனைந்து
முலைமிசை யழுந்த முகமது பொருந்த
முத்தமிட்டு நகம்வைத் தழுத்திய சுகத்தில்
மேசாப் பரவசத் தினிலே—அதி
மோக மதாய் மதனுகை மலீலை
அநேக விதங்கள் வைபோக மதாகவே (ஒரு)

கோதிக் குழல்வகுத்துக் கொஞ்சிகொஞ்சி முழித்துச்
சோதி துயில்களைந்து துடைமேல் துடைபுனைந்து
வாதைக ளந்தறத்து மகிழ்கறை கற்றதில்
ஏதமிதழ் விரித்து யிதழோடு பொறுத்தி
எக்கினி தம்பம் மூழ்கிமகிழ்ந் தபின்புடன்
குரல்கூவி முழக்கி யெழுந்தபின் தோடடா
வெகுவாக நீபோகம் விடாதடாசம் போகதாகமுன்
கொங்கைகள் தாளம்போட குழல்வண் டிசைகள்பாட
கங்கணங்கள் நின்றுட கந்தனென் றுங் கொண்டாட
சங்கொலி முழங்க வங்கண மிலங்க
மின்கொடி குலுங்க அங்கச மிலங்க
மிஞ்சிவரு ங்கவி குஞ்சர மெனச்சொல்லி
யிங்கித மாகவே குமுகுமு வென் றுவரு
சுமுக வாரி நிறை குமிழி கொண்டு மலற் றமிழ்கள்
[பெறுகவே.

## விவாகமேனில்லை ?

1032. இன்ப மெல்லாந் தவிர வீதிதெருவி
னிலிருப்பதுவு மென்னநிரு வாகம்கென
சம்பிரமதாகப் பின்புபி றந்திடு
தம்பிக்கு இரண்டுவிவாகம்—இந்தத்

தாரணி தன்னிலே யோகம்
சமுசார மல்லா தென்னதி ரேகம் (இன்ன)
பத்தஞ் சுகையில் சிலவுக்கில் லாவிட்டால்
பாருலகில் கிடையா தோ—நவ
சித்த ரவர்செய்யும் தொழி லுந்தன்
செய்கையல் லாமல்வே றுளதோ—ஞான
பித்தந் தனக்குப் பிறந்த தினுலிந்தப்
பே தமையே யென்னவா தோ—யில்லை
பெத்ததாய் சாபம் பொல்லாதோ—நல்ல
பெண்க ளெங்கும் கிடை யாதோ
இன்னங் க்லியாணஞ் செய்யா திருக்கிறது
என்ன கதைசொல் லுமையா.

## சதுர்க் கோண மாலை

### விருத்தம்

1033. உற்றதலம் பெருந்துறைநா டென்னுந் தேசம்
வுள்புகுந்து சங்குநதி தீர்த்த மாடி
நித்த நாடணுகி வைகுந்த மேவி
நெடியோனை அடிவணங்கி நினைவி னுலே
கர்த்தனையும் அந்திசந்தி உச்சி மூன்று
காலமும்நீ பூசித்தாய் கவலை தீரப்
பெற்றனையே நெஞ்சகமே யிந்தப் பேறு
பெற்றவர்க்குப் பிறவியுமேன் றெண்ண லாமோ.

1034. ஊறல்வந்து பாயுமடை தண்ணீர் மூழ்கி
உச்சிமலை மீதேறி மடையில் பூத்த
நாறுமலர் தன்னையெட்டிப் பறித்துக் கொண்டு
நடுவீதி சென்றுமணி மண்ட பத்தில்
ஏறிமரப் பாலத்து நின்று கொண்டு
யீஸ்வரன்மே லினமலரைச் சாற்றி நீயும்
பேறு பெற்றாய் நெஞ்சகமே யிந்தப்பேறு
பெற்றவர்க்கு பிறவியுமேன் றெண்ணலாமோ.

1035. நீடுகீர் சந்திரனுர் ஆடும் பொய்கை
நித்தநிலை மூழ்கிமலர் கொய்தப் பாலே
ஆடுமலர் பதமுடையோன் அழகர் கோவி
லணுகியந்தத் திருமுடியில் அந்தப் பூவைச்

சூடிவலம் யிடமாக விழுந்தெழுந்து
தொழுதுகரங் குவித்திறைஞ்சித் துயரந் தீர
வீடுபெற்றாய் நெஞ்சகமே யிந்தப் பேறு
**விதித்தவர்க்குப் பிறவியுமென் றெண்ண லாமோ.**

1036. ஒவ்விருந்த குளத்தில்மூழ்கி யலேயை நீக்கி
ஓங்காரக் கம்பவெளி தெரிந்து யேறி
சவ்விருந்து மணிபுகுந்து சிவந்த பாதம்
தாளிணையே தெரிசித்துத் தற்சுரூப மான
அவ்விருந்த விடந்தேடி புகுந்து சோதி
அரனடியைத் தெரிசித்து அலேச்சல் தீர
எவ்வுபெற்றாய் நெஞ்சகமே யிந்தப் பேறு
**எய்தவர்க்குப் பிறவியுமென் றெண்ண லாமோ.**

1037. முலேயிருந்த விடமறிந்து அமுத முண்டு
மூன்றுகண்ணின் பிரகாசத் தொளிவில் சேர்த்துத்
தலேயிருந்த விடமறிந்து பார்க்கப்பா வின்மூழ்கி
தற்பரத்தை யுடனணுத் தற்சுரூப மான
கலேவா யும்பொறி நினைவிஞலே வுண்டு
கங்குல்பக லற்றவிடந் தெரிந்தே வாழ்க
நிலேயறிந்தாய் நெஞ்சகமே யிந்தப் பேறு
**நினைந்தவர்க்குப் பிறவியுமென் றெண்ண லாமோ.**

1038. நவ்வுமவ்வு மிருந்தவிடம் பதியி னுள்ளே
நடுயிருந்த ஞானமதை நாட்டி னின்று
சிவ்வுமவ்வும் யிரண்டனேயும் தெரிசித் தப்பால்
செங்கமலப் பாதமிருந் திடமே சேர்ந்து
அவவுமவ்வு மிருந்தவிடந் தன்னில் மேவி
அல்லுபக லற்றவிடம் தெரிந்தே வாழ்க
எவ்வுபெற்றாய் நெஞ்சகமே யிந்தப் பேறு
**யெய்தவர்க்குப் பிறவியுமென் றெண்ண லாமோ.**

1039. பயமிருந்த மனேகடந்து முப்பாழ் தாண்டி
பத்மநதி தீர்த்தத்தில் பூசை செய்து
அயனேயளித் தான்வீட்டி லப்பா லேகி
அறிந்தடைத்த வாசல்கடந்தந் தரத்தைத் தாண்டிச்
சுயப்பதி யாயிருந்து படைத்தளித்த மூர்த்தி
சோதிபரா பரத்தைஅடி வணங்கி நீயும்
செயம்பெற்றாய் நெஞ்சகமே யிந்தப் பேறு
**செய்தவர்க்குப் பிறவியுமென் றெண்ணலாமோ.**

1040. நாற்சதிர கூடத்தில் வாசல் சேர்த்து
நல்லநீர்க் கடலிலனுஷ்டானஞ் செய்து
மேற்சதிர மானகொலு மண்டபத்தில்
மேலேறி மயிர்ப்பால மீதில் நின்று
சீர்ச்செடனு மானதொரு ஆற்றைத் தாண்டி
சிவனிருந்தப்பால்வெளி யைப்பார்த்துப் பார்த்துக்
காட்சிபெற்ருய் நெஞ்சகமே யிந்தப் பேறு
கண்டவர்க்குப் பிறவியுமென் றெண்ணலாமோ.

1041. உந்தியெனுஞ் சுழிமுனையே பத்தியென்பா
ரூதுகின்ற தாரைசங்கு நிலைமை கண்டு
இந்திரனு மாயவனு மறியொண் ணுத
யிருதலைமா ணிக்கமொரு யிடமே சேர்ந்து
நந்திவா கனமூர்த்திக் கோவில் முன்னே
நடுவிருந்த விடலையர் தன்னைப் போற்றிச்
சந்தித்தாய் நெஞ்சகமே யிந்தப் பேறு
சார்ந்தவர்க்குப் பிறவியுமென் றெண்ண லாமோ.

1042. சிறப்புடைய வைகுந்தம் பரம லோகம்
தேடரிய சிவலோக மயேஸ்வர லோகம்
சிறப்பறிந்து சேர்ந்து சதா சிவனர் லோகம்
திறமையுட னதிலிருந்து நெடுநா ளாகி
துறப்பறிந்து மயிர்ப்பால மீதி லேறி
சொர்க்கலோ கம்புகுந்து பராபரத்தைச் சேர்ந்தால்
இறப்புமுண்டோ நெஞ்சகமே யிந்தப் பேறு
யெய்தவற்குப் பிறவியுமென் றெண்ண லாமோ.

## தானவதேவி அகிலாண்டவள் மேல் பாடியது

### பந்தடி—பத்து

### காப்பு

### வெண்பா

1043. செந்திரு வாழ்தானவ தேவியகி லாண்டவள் மேல்
பந்தடி நான்பத்துப் பாடவே—முந்தியப்
பாலாழி யில்துயின்ருேன் பங்கயத்தில் வீற்றிருக்கும்
காலா யுதக்கொடியோன் காப்பு.

விருத்தம்

1044. செந்திரு வாழும் காவைப் பதியுஞ்
செம்பு நாயகர் பங்கில்வாழ்
தேவி யகில லோக நாயகி
செழிக்கும் பந்தடி பாடவே
தந்தி முகவர் செந்தி முருகர்
சரஸ்வதி திருமா லயன்
சத்த ரிஷிகள் அஷ்ட வசுக்கள்
சகல தேவருங் காக்கவே
சுந்தர மிகுந்திடு பூம களுடன்
சோதி யகில நாயகி
துடர்ந்து வாது புரிந்து பந்தடி
சொல்லிப் பாடி யாடவே
சந்திர சூரிய ரிந்திர வானவர்
சதுர்ம றைமுனி வோர்களும்
தரணி தன்னில் மதுரம் பொழியத்
தமிழ்வல் லோருங் காக்கவே.

1045. பாத தண்டை பரிபுர வல்லி
பலப லென்று மொலியவே
பகுத்த நூலிடைத் துவளச் சிலம்பு
பாடகந் தண்டை யாடவே
காது வயிர வோலை யசையக்
கழுத்து மாலை துவளவே
கனக மணியும் கண்ட சரமும்
கலக லென்றொலி பாடவே
சோதி முகத்துத் திலகங் கரையச்
சொருகு வேர்வை வேர்க்கவே
தொங்க லசையக் கொண்டை குலுங்கச்
சுட்டி மணிமுத் தாடவே
சீதை வனத்தில் தரும்பு பூண்ட
செப்பு முலைகள் குலுங்கவே
தேவி யகில லோக நாயகி
செழிக்கு மொருபந் தடிப்பளே.

1046. முங்கைச் சரிகை தங்க வளையும்
முத்து மாலை யசையவே
முறுக்கு வளைக ளஸ்த கடையம்
மோதி ரங்களு மாடவே

கங்கை வேணி யரனு மாலும்
கமலத் தோருஞ் சூழவே
கன்னி மார்க ளிருபுறம் வந்து
கலந்து கவுரி வீசவே
தங்கை வாது புரிந்தச் சீதை
லட்சு மிமன மகிழவே
நயன விழிகள் புரள வுலகில்
நரக லோக மதிரவே
புங்க யமுக வதன வேர்வை
கொங்கை நிறைந்து பரவவே
பரிபுர வல்லி அகில நாயகி
**பவியி ரண்டுபந் தடிப்பளே.**

1047. ஓலைக் குழையும் கனக மூக்கில்
முத்துத் தளுக்கு மிலங்கவே
உத்தரீகப் பட்டு முடையும்
ஒட்டி யாணந் துலங்கவே
நீலக் குழலுங் கொன்றை மாலைக்
கிசைந்த கொப்பியு மாடவே
நிலவும் பிறையும் திருவுங் காதில்
ரத்தினக் கொப்பு மாடவே
சாலக் கயற்கண் விழிக ளாடத்
தனங்கள் குலுங்கி யாடவே
சவுடி யாட சந்திர காவி
சரிகை ரவிக்கை யாடவே
மாலைக் கழுத்து மருங்கு மாட
மார்பில் பதக்கங்க ளாடவே
மாது அகில லோக நாயகி
**மகிழ்ந்து மூனுபந் தடிப்பளே.**

1048. தடவ ரைகளும் கிடுகி டென்னச்
சத்த லோக மதிரவே
சத்த கன்னி மார்கள் வந்து
தாவி மலர்கள் தூவவே
படமு ளாதி சேஷ னுடனே
படமு டன்முடி நடுங்கவே
பருவ ரதியு மதனும் வந்து
புரிந்து கட்டியங் கூறவே

அடவு ளாறு முகன்க ணபதி
அம்மை வள்ளிதெய் வானையும்
அஞ்ச லஞ்ச லாகு மென்று
முன்சொ லாதே தேவியும்
மடம யிரான்னி கேள்வன
மலர்ம ழைகளைப் பொழியவே
மாது அகில லோக நாயகி
**மகிழ்ந்து நாலுபந் தடிப்பளே.**

1049. பந்தை யடிக்கச் செங்கை சிவக்க
..............................
........பவளமாலை மீதில் வயிர
பதக்க மணிமுத் தாடவே
சிந்தி வயிரப் பொடிகள் சிதறி
தெருக்கள் தோறு நிறையவே
செம்பு லிங்கயர் பங்கில் வந்து
தேவி யமையும் மென்னவே
நந்தி கேசுவரர் தெய்வ கணங்கள்
பந்தி யாக நிறையவே
நாலு தேவரும் வாணி தேவியும்
ரெங்க நாயகர் மகிழவே
மந்தி தரதி யூஞ்ச லாடும்
விண்ணி னலில் வனத்தில்வாழ்
மாது அகில லோக நாயகி
**மகிழ்ந்து அஞ்சுபந் தடிப்பளே.**

1050. வாயு ராசனும் வருண தேவனும்
வந்து முன்சேர லாகவே
வந்து நின்று பந்து கண்டு
மாலை யன்மனம் மகிழ்ந்திட
தாயு மான லிங்கமுடஞ் ச........
வாச்சு வென்று மகிழவே
சத்த ரிஷிகள் முனிவர் வந்து
சரணஞ் சரண மென்னவே
ஆயுர் வேத மாறு சாஸ்திர
மாறு மாறுந் துதிசெய
அண்ட கூட மெங்கும் பந்த
ளாவி யோவச யதிரவே

தேயும் பிறையைச் சடையில் தரித்த
செம்பு லிங்கயர் பங்கில்வாழ்
தேவி அகில லோக நாயகி
**செழிக்கும் ஆறுபந் தடிப்பளே.**

1051. வால கோகிலம் போல ரம்பைகள்
வந்து ஆடிப் பாடிட
வந்து நின்று ரூப ராசர்
வரிசை யாய்வ ணங்கிட
கால நேமி தர்ம ராசர்
கண்டு தெண்ட னிட்டிடக்
கருணை பாராய் தேவி யென்று
கட்டி யங்கள் கூறிட
வேலை சூழும் உலகில் ராசர்
மேலும் மேலும் மேலென்ன
வித்தி யாதரர் புத்தி யுடனே
...........பாடிட
ஆல முற்ற விழிகள் சிவக்க
அஷ்ட திக்கு மதிரவே
அம்மை அகில லோக நாயகி
**அதிர ஏழுபந்தடிப் பளே.**

## பல்வகை

1052. என்னிலு நீ அதி மோகமோ—அல்லடி பெண்ணே
என்னிலு நீ அதி மோகமோ
என்னிலு நீ அதி கமோகமோ—தம்
மென்பவர்க்கு நிசமாகுமோ
சின்னந் தன் சாமி—பெத்த
தெம்புலிப் பெரிய சாமி
அந்தநாள் வந்தென்னை யடுத்தான் அகமகிழ்ந்து
கொந்தளப் பொன்னோலை கொடுத்தான்
முந்தநாள் வந்துன்னை யடுத்தான் முப்பதுபொன்
சந்திர காவிச் சேலை கொடுத்தான்
சந்திர காவிச் சேலை பெற்றதை யிவர்க்
கித்தனை மோடியானால்
கொந்தளப் பொன்னோலை—பெத்த
கோதைக் கெத்தனை மோடியாமோ (யென்னிலுநீ)

ஆசைகொண்டென் வீட்டினில் வந்தான் அகமகிழ்ந்து
பேசு முத்து மாலையைத் தந்தான் சீச்சீ
யென்று உன்னை யணைந்தான்—தங்கமூலாம்
பூச்சிய மூக்குத்தியைத் தந்தான்
பூசியே மூக்குத்தி பெற்ற
பூவைக்க சித்தனை மோடியானல்
பேசு முத்து மாலை பெற்ற
பெண்ணுக் கெத்தனை மோகமோஎன்னிலு நீ
திருவளர் கண்டென்னை நாடினன்பூந்தருவாழும்
பெரியசாமி யென்னைக் கூடினன்
கருவளர் கண்டுன்னை நாடினன் சமுகத்தோடு
தெருவில் நின்று விளையாடினன்
தெருவில் நின்று விளையாடுகின்ற
தெருவுக் கித்தனை மோடியானல்
பெரிய சாமியைக் கண்டு வந்த
பெண்ணுக் கெத்தனை மோடியமோ. (என்னிலு நீ)

### விருத்தம்

1053. அணியிடும் பரணி யேறி
அண்ணலே குறவர் கோனும்
தணிய மந்திர முரைத்துத்
தானது கேட்டு நின்று
துணிந்துமேக் கவுண்டி யேறித்
தோழிமா ருடன்வே லோனைப்
பணிந்துமே வள்ளி தேவி
பட்சியை மிரட்ட லுற்றாள்.

### வேறு.

1054. எட்டாத பழமிதென்று யெண்ணி டாதே
எட்டி எட்டி அண்ணாந்து பார்த்திடாதே
கொட்டாவி விட்டதினல் வருமென் றெண்ணி
மட்டாகப் பேச்சுதனை மழுப்ப வேண்டாம்.

### வேறு

1055. வாய்க்காலும் வெள்ளமது
வயல்பெருகிப் போனாலும்
பேர்க்காமல் தண்ணி
பெருக்கவிட்டுப் பாய்ச்சேனே,

### விருத்தம்

1056. கூவையே குயிலே மானே
கொஞ்சிய மொழியே தேனே
காதலா யுன்னைத் தேடிக்
காமப்பூ கொண்டு வந்தேன்
ஆய்வே லிக்காய்க் குள்ளே
அமர்ந்த சிவனு ருக்குத்
தேவ வடிவாக வந்த
சேயி ழையும்நீர் தாமோ.

### விருத்தம்

1057. ஏதொரு பெண்தனைச் சதமென் றிருக்கிரோ
என்னிலேயு மதிகவடி விணங்கி மின்னோ
மாதுமுகங் கண்டீரோ எவர்சொன் னரோ
மாயமாய் வந்ததுவோ கேள்விப் பேச்சோ
ஆதியென்ன உரைக்குமுனி அருகே நின்ற
ஆக்கினையால் வந்தாள் உரைப்பா ளென்றே
வேதநா ரதனேநீ கண்ணல் கண்ட
விவரமெல்லாம் எனக்கறிய விளம்பு வாயே.

முற்றும்.

# செய்யுள் முதற் குறிப்பகராதி